


E-ISSN: 2581-7140





# தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

*அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்*

# INTERNATIONAL JOURNAL OF TAMIL LANGUAGE AND LITERARY STUDIES

*(IJTLLS) UGC CARE LISTED JOURNAL*
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

ஸ்ரீ எஸ்.இராமசாமி நாயுடு ஞாபகார்த்தக் கல்லூரி (தன்னாட்சி),
சாத்தூர்
தமிழ்த்துறை

**SRI S.RAMASAMY NAIDU MEMORIAL COLLEGE (Autonomous), SATTUR**
**Tamil Department**

சிறப்பிதழ்

## பக்தி இலக்கியம்

## BHAKTHI LITERATURE

தொகுதி – 3, சிறப்பிதழ் 3, தொகுதி – 3 சனவரி 2021

VOLUME– 3, SPECIAL ISSUE 3, VOL – 3, JANUARY 2021

PRINTED FOR ACADEMIC PURPOSE ONLY
(Souvenir for those participated in the Virtual Meet)

E-ISSN: 2581-7140






# தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

*அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்*

# INTERNATIONAL JOURNAL OF TAMIL LANGUAGE AND LITERARY STUDIES

*(IJTLLS) UGC CARE LISTED JOURNAL*
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

## ஸ்ரீ எஸ்.இராமசாமி நாயுடு ஞாபகார்த்தக் கல்லூரி (தன்னாட்சி), சாத்தூர்

## SRI S.RAMASAMY NAIDU MEMORIAL COLLEGE (Autonomous), SATTUR

## பக்தி இலக்கியம்

## BHAKTHI LITERATURE

தொகுதி - 3, சிறப்பிதழ் 3, தொகுதி - 3, சனவரி 2021

VOLUME– 3, SPECIAL ISSUE 3, VOL – 3, JANUARY 2021

# பக்தி இலக்கியம்
# BHAKTHI LITERATURE

## பதிப்பாசிரியர் குழு / EDITORIAL BOARD

# PUBLISHER'S MESSAGE

## Aim & Objectives

**International Journal for Tamil Language and Tamil Studies** is an online Peer-Reviewed International Journal published twice in a year on July and January, which is published by **Maheswari Publishers,** patronized by **Pandian Educational Trust, Virudhunagar, Tamil Nadu, India**. It also publishes **Literary Druid, for English Language and Literature (Online)** to foster research in the domain areas**. International Journal for Tamil Language and Tamil Studies** aims to bring down Academic Research to promote research support for the academicians and scholars in the field of Tamil Language and Literature. Research through this medium is motivating in all aspects of main and inter-disciplines by consequent projects and e-publication. Making Internationalization of the research works in the globalized world aid the scholarly community to develop scholarly profile in research through the quality of publications. The audacity and vision of academic research on internet could foster green printing and open access nature in research. All of these motivate best distribution of research that produces positive outcomes for the betterment of the world. In achieving the aim, our journal International Journal of Tamil Language and Tamil Studies has been listed in UGC CARE List from July 2020.

## Disclaimer

**International Journal for Tamil Language and Tamil Studies** is committed to research Ethics and consider plagiarism as a crime. The authors are advised to adhere academic ethics with respect to acknowledgment of quotations from other works. The Publisher & Editors will not be held responsible for any lapse of the provider regarding plagiarism in their manuscripts. The submissions ought to be original, must accompany the declaration form stating your research paper as an original work, and has not been published elsewhere for any research purpose. The contributor will be the sole responsibility for such lapses on any legal issues and publication ethics. **Contact** ijtllsetamiljournal@gmail.com for submission and other information. See www.ijtlls.com for guidelines.

## Message from the Editor-in-Chief

**International Journal for Tamil Language and Tamil Studies** is an online Peer-reviewed International Journal of Tamil Language and Literature which is committed to academic research, welcomes scholars and students all over the world who to advance their status of academic career and society by their scholarly ideas. The journal welcomes publications of quality papers on the domain area. Research ought to be active to create a major frontier in the academic world. It must augment the neo-theoretical frame that facilitates re-evaluation and augmentation of existing practices and thoughts. In due course, this will effect in a prime discovery and lean to the knowledge acquired. Research is to establish, substantiate facts, restate previous works ant to resolve issues. An active venture to endow cogent approach to these types for educational reformations through academic research has become the central intent of the journal. I am glad to say that our journal has been approved in the UGC CARE List. It is an achievement by the clear protocol of academic and ethical policies maintained by the journal and I thank the authors for their original articles with proper ethical writing methods.

**Publisher, Director and Editor**
**D.Maheswari**

# வாழ்த்துரை






**முனைவர் சே.கணேஷ்ராம்**, முதல்வர்
ஸ்ரீ எஸ்.இராமசாமி நாயுடு ஞாபகார்த்தக் கல்லூரி,
சாத்தூர்.

சாத்தூர் ஸ்ரீ எஸ் ராமசாமி நாயுடு ஞாபகார்த்தக் கல்லூரியின் தமிழ்த்துறையும், தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழும் (UGC CARE INDEXED JOURNAL) இணைந்து நடத்தக்கூடிய சிறப்பிதழ் நிகழ்வு மிகுந்த மனமகிழ்வைத் தருவதாய் அமைந்துள்ளது. தமிழைப் பக்தியின் மொழி என்கிறார்கள். அந்நிலையில் ஆழ்வார்களும் நாயன்மார்களும் இணைந்து பக்தி என்ற ஒரு நிலையை நமக்குக் கற்பித்துள்ளனர். பக்தி, பக்தியின் வரலாறு என்று பார்க்கும்பொழுது அடியவர்கள் அனைவரும் ஆற்றிய அரும் தொண்டுகள், செய்த செயல்பாடுகள், அவர்கள் பட்ட துன்பங்கள் என்று அனைத்துமே கவனிக்கத்தக்கவை. அதைத் தாண்டி அவர்கள் அனைவரும் தமிழை வளர்த்தார்கள் என்பதுவே உண்மை. பக்தி இலக்கியத்தைக் குறித்த பார்வை எனும் பொழுது ஆரம்ப காலகட்டத்தில் இருந்து இக்காலகட்டம் வரையிலும் அதனுள் ஒளிந்திருக்கும் அந்த ஆழ்ந்த தன்மையினை எடுத்து புலப்படுத்திக் காட்டுவது என்பது மிகச்சிறந்த பணி. ஆய்வாளர்களுக்கு மிகச்சிறந்த தலைப்பைக் கொடுத்து நல்ல முறையில் நல்ல கட்டுரைகளைத் தேர்ந்தெடுத்து சிறந்த இதழாக வெளிக் கொண்டுவரக்கூடிய பணியை நம்முடைய தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ் மிகச் சிறப்பாக செய்து வருகின்றது. அதன் இயக்குநர் திருமதி த.மகேஸ்வரி அவர்களை, இத்தருணத்தில் நான் பாராட்டி மகிழ்கிறேன். இத்தகையதொரு சிறப்புமிக்க பணியில், எங்கள் கல்லூரி தமிழ்த்துறையும் இணைந்து செயல்படுகிறது எனும் பொழுது மிகுந்த மகிழ்ச்சியைத் தருகிறது. ஒருங்கிணைப்பாளர் முனைவர் கி. நாகேந்திரன் அவர்களை இத்தருணத்தில் நான் உளமாரப் பாராட்டுகிறேன். அவருடன் இணைந்து பணியாற்றிய துறைத்தலைவர் முனைவர் பி.ஸ்ரீதேவி அவர்களையும், தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அத்தனைபேரையும் சிறந்ததொரு பணியினைப் செய்தமைக்காகப் பாராட்டி மகிழ்கிறேன். மேலும் இதுபோல் நிறைய நிகழ்வுகளை நிகழ்த்துவதற்கு என்னுடைய பாராட்டுகளும் வாழ்த்துக்களும்.

**முனைவர்சே.கணேஷ்ராம்**
கல்லூரி முதல்வர்

# அணிந்துரை






**முனைவர் பி.ஸ்ரீதேவி,**
உதவிப் பேராசிரியர் & தமிழ்த்துறைத் தலைவர்,
ஸ்ரீ எஸ்.இராமசாமி நாயுடு ஞாபகார்த்தக் கல்லூரி,
சாத்தூர்.

தமிழ் இலக்கியங்களில் சமயங்கள் பல நூற்றாண்டுகளாக ஊடுருவி இருக்கின்றது என்பது நாம் அனைவரும் அறிந்த உண்மை. பக்தி இலக்கியம் என்னும் ஆராவமுதத்தை, பல்லாண்டுகளாக நாம் அனைவரும் பருகி வருகின்றோம். ஆயினும் அதில் பொதிந்துள்ள பக்திச் சுவையையும், தமிழ்ச் சுவையையும் இன்னும் பலநூறு ஆண்டு காலமும் ஆராய முடியும். பக்தி சார்ந்த சிந்தனையை நம்முள் விதைப்பதற்காகவே பக்தி இலக்கியம் என்ற இதுபோல சிறப்பிதழ் மற்றும் கருத்தரங்குகள் நிகழ்கின்றன. இவ்வாறன நிகழ்வுகள் மொழி வளர்ச்சிக்கும் ஆன்மீக வளர்ச்சிக்கும் உறுதுணை புரிவதாக இருக்கின்றது.

சிறந்த கட்டுரைகளைத் தெரிவுசெய்து சிறந்த ஆய்விதழாக, வெளிக்கொண்டு வருவதற்காக முழு முனைப்புடன் செயலாற்றி வரும் ஆய்விதழ் தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ். அவர்களோடு இணைந்து பணியாற்றுவதற்கு சிறந்ததொரு வாய்ப்பினை அளித்தமைக்காகப் பெருமைப்படுகின்றேன். அதன் இயக்குநர் திருமதி த.மகேஸ்வரி அவர்களை முழு மனதுடன் வாழ்த்துவதோடு எங்கள் கல்லூரியுடன் இணைந்து ஒரு சிறந்த காணொளி நிகழ்வினை நடத்தி சிறப்பிதழாக வெளியிடுவதற்கு எனது நன்றி கலந்த வணக்கங்கள். இச்சிறப்பிதழில் முதன்மைப் பதிப்பாசிரியராகச் செயல்பட்டுக் கொண்டிருக்கும் எங்களது துறைப் பேராசிரியர் முனைவர் கி.நாகேந்திரன் அவர்களை இத்தருணத்தில் பெருமிதத்துடன் நினைவுகூர்ந்து கொள்கிறேன். தனது கடுமையான உழைப்பினை இச்சிறப்பிதழ் நிகழ்விற்காக செலவிட்டுள்ளார். அவரை என் மனமாரப் பாராட்டி மகிழ்கிறேன். எம் துறைப் பேராசிரியர்கள் அத்தனைபேரையும் இத்தருணத்தில் பாராட்டி மகிழ்கிறேன்.

முனைவர் பி.ஸ்ரீதேவி
தமிழ்த்துறைத் தலைவர்

# நன்றியுரை



**முனைவர் கி. நாகேந்திரன்,**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
ஸ்ரீ.எஸ்.இராமசாமி நாயுடு ஞாபகார்த்தக் கல்லூரி,
சாத்தூர்.

*என்னை நன்றாக இறைவன் படைத்தானன்*
*தன்னை நன்றாகத் தமிழ்செய்யுமாறே - திருமூலர்*

பக்தியின் மொழி தமிழ். தமிழில் இருப்பது போன்று பக்தி இலக்கியங்கள் இந்திய மொழிகளிலோ அல்லது வேறு எந்த உலக மொழிகளிலோ இருப்பது அரிது. அத்தகைய பக்தி இலக்கியத்தில் சிறப்பிதழ் நடத்தி அதில் முதன்மைப் பதிப்பாசிரியராகச் செயல்பட வாய்ப்பளித்த தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழுக்கும் அனுமதியளித்த எம் கல்லூரி நிர்வாகத்திற்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். எங்கள் கல்லூரியைச் சிறப்புற வழிநடத்துவது போன்றே சிறப்பிதழ் இருக்கை நிகழ்ச்சி ஒன்றையும் செம்மையாக நடந்தேற வழிகாட்டி எங்களுக்கு ஆக்கமும் ஊக்கமும் கொடுத்த எம் கல்லூரி முதல்வர் முனைவர் சே.கணேஷ்ராம் ஐயா அவர்களுக்கு பணிவார்ந்த நன்றி. பக்தி இலக்கியப் பொருண்மையில் சிறப்பிதழ் இருக்கை நிகழ்ச்சி நடத்தி அதன் கட்டுரைகளை இதழாக வெளியிடும் தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழின் ஆசிரியர் (Ijtlls) திருமதி த.மகேஸ்வரி அவர்களுக்கு மனப்பூர்வமான நன்றி. தமிழ்த்துறை ஒருங்கிணைந்து சிறப்பிதழ் இருக்கை நிகழ்ச்சியைப் நெறிப்படுத்தி, சிறப்பிதழ் இருக்கை நிகழ்ச்சி களத்தில் நின்று எனக்கு நல்ல நம்பிக்கையைக் கொடுத்து, பணியாற்றிய எம் துறைத்தலைவர் முனைவர் பி.ஸ்ரீதேவி அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். துறைகூடி நடத்திய சிறப்பிதழ் இருக்கை நிகழ்ச்சி தேரின் கயிற்றை இழுக்க, கை கொடுத்த துறையின் ஒவ்வொரு பேராசிரியர்களுக்கும் தனித்தனியே நன்றிகூறக் கடமைப்பட்டுள்ளேன்.

பக்தி இலக்கியம் எனும் தொன்மையான களத்தில் சிறந்த ஆய்வுக்கட்டுரைகள் பெறப்பட்டு பதிப்பு செய்யப்பட்டுள்ளது. அனைத்து ஆய்வுக்கட்டுரைகளும் சீரிய முறையில் மதிப்புரை செய்யப்பட்டு கட்டுரையாளர்களுக்கு பரிந்துரை வழங்கப்பட்டது. பக்தி இலக்கியப் பொருண்மையில் தேர்ந்தெடுக்கப்பட்டு பதிப்பிக்கப் பெற்ற தரமான இக்கட்டுரைகள் பக்தி இலக்கியத்தின் சாரத்தை பக்தி இலக்கிய உலகிற்கு எடுத்துச் செல்லும் என்பதில் துளியும் ஐயமில்லை. ஆய்வுக்கட்டுரைகளை உரிய நேரத்தில் உரிய நெரிமுறையில் அனுப்பி வைத்த பேராசிரியர்கள், இலக்கிய ஆய்வாளர்கள், ஆர்வலர்கள் அனைவருக்கும் நன்றி மற்றும் மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

வாழ்க வளமுடன் !

**முனைவர் கி. நாகேந்திரன்**
முதன்மைப் பதிப்பாசிரியர்

# பதிப்புரை



**திருமதி. த.மகேஸ்வரி,**
இயக்குநர் மற்றும் பதிப்பாசிரியர் – (IJTLLS
தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்,
விருதுநகர் - 626 001.

தமிழ்மொழி மற்றும் இலக்கியத்திற்காக எமது தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ் (Ijtlls) தம் இலக்கிய மற்றும் ஆராய்ச்சி அரும்பணியைச் செம்மையாக செய்து வருகின்றது. தமிழ்மொழியின் வளர்ச்சியினை எண்ணி செயல்பட்டு பக்தி இலக்கியம் (*BHAKTHI LITERATURE*) என்ற பொருண்மையில் சிறப்பிதழ் நடத்தி பல்வேறு தரமான ஆய்வுக்கட்டுரைகளைப் பெற்று எமது ஆய்விதழ் வாயிலாக சிறப்பிதழில் பதிப்பித்தமைக்கு அகமகிழ்வடைகிறேன். மேலும், சிறப்பிதழ் முதன்மை ஆசிரியர் முனைவர் கி.நாகேந்திரன் அவர்களுக்கும் அவரை எம்மோடு இச்சிறப்பிதழ் பணியில் ஈடுபட அனுமதி அளித்த ஸ்ரீ.எஸ்.இராமசாமி நாயுடு ஞாபகார்த்தக் கல்லூரி, சாத்தூர் நிர்வாகத்தினருக்கும் எமது இதழ் சார்பாக நன்றியினை உரித்தாக்குகின்றேன். தமிழ்த்துறைத் தலைவர் மற்றும் தமிழ்த்துறைப் பேராசிரியார்கள் அனைவருக்கும் எமது நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

பக்தி மானுடத்தின் அவசியம். அதனை பறைசாற்றும் விதமாக சித்தர்கள், யோகிகள், ஞானிகள் ஆகியோர் தமது ஞானக்காட்சி மற்றும் தெளிவினைப் பாடல்களாகவும் பதிகங்களாகவும் வெளிப்படுத்தியுள்ளனர். அத்தகைய பெருந்தன்மை வாய்ந்த ஞானத் தெளிவினைத் தமிழ் ஆய்வுலகிற்குக் கொண்டுவர எத்தணித்தே இச்சிறப்பிதழ் நடத்தப் பெற்றது. அதற்கேற்றவாறு அறிவுத் தெளிவு கொண்ட ஆய்வுக்கட்டுரைகள் பெறப்பட்டு பதிப்பித்ததில் பெருமகிழ்ச்சி அடைகிறேன். ஆய்வுக்கட்டுரைகள் வழங்கி சிறப்பித்த தமிழ்ப்பேராசிரியர்கள், ஏனைய அனைத்து துறைப்பேராசிரியர்கள், எழுத்தாளர்கள், தமிழ் ஆர்வலர்கள் மற்றும் ஆராய்ச்சி மாணவர்களை மனதாரப் பாராட்டுகிறோம்.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ் செம்மையாய் செயல்பட்டு ஆய்வுக் கட்டுரைகளை இணையத்தில் பதிப்பு செய்து வருகின்றது. எதிர்காலத்தில் தமிழ் ஆராய்ச்சிகளை உலக அரங்கத்திற்கு எடுத்துச் செல்ல ஓர் ஆய்வுக்களமாக எமது இதழ் முன்மாதிரியாகச் செயல்பட்டு வருகிறது. அதற்கு உறுதுணை அளித்த அனைவருக்கும் நன்றி.

நன்றி

**திருமதி. த.மகேஸ்வரி**
இதழ்ப் பதிப்பாசிரியர்

## பொருளடக்கம்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

# தொல்காப்பிய உரை புலப்படுத்தும் சமயப் பின்புலம்

**Religious Background Revealed in "Tholkappiyam"**

**சு.மகேஷ் பாண்டி,** முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை, அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி, சிவகாசி.
**S.Mahesh Pandi,** Ph.D scholar, Tamil Department, Ayya Nadar Janaki Ammal College, Sivakasi.
ORCiD: https://orcid.org/0000-0003-0883-570X
**முனைவர் சு.நயினார்,** இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை, அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி, சிவகாசி.
**Dr.S.Nainar**, Associate professor in Tamil, Ayya Nadar Janaki Ammal College, sivakasi.
ORCiD: https://orcid.org/0000-0003-2103-6507
DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.055

## Abstract

*"Tholkappiyam" has the some glimpses of religious ideologies. It was reexamined during the regime of Chozha and several interpretations were made on it. A noticeable addition of other languages is predominant in those interpretations. They contained the elements of both Tamil and Sanskrit customs. Ilampooranar's exposition has the stint of Saivites and Nachinaarkiniyar, Vaishnavites. Change of rule paves way for the historical events of compilation of Tamil texts and review and recreation of interpretations. Religious scholars approach these base texts with the spectacles of their own religious beliefs. The interpretations are replete with the flavor of religious fervor. This research focuses on the work and influence of religion on the interpretation of "Tholkappiyam".*

**Keywords:** Tholkappiyam, Ilampooranar, Saivites, Nachinaarkiniyar, Vaishnavites

### நோக்குகளம்

தொல்காப்பியம் என்ற மூலநூலின் பயில்வு சமயப்பின்னணியை தாங்கியுள்ளது. சோழர் காலகட்டத்தில் தொல்காப்பியம் மீளாய்வுக்கு உட்படுத்தப்பட்டது. உரைகள் எழுதலாயின. மொழிக்கலப்பு உரையில் ஆதிக்கம் செலுத்தியது. உரைகள் வடமொழி மரபு, தமிழ் மரபினை அடியொற்றி எழுதப்பட்டன. இளம்பூரணர் சைவசிந்தாந்த சமயத்தை முன்வைத்தும் நச்சினார்க்கினியர் வைணவ சமயத்தினை பின்பற்றியும் உரை வரைந்துள்ளனர். ஆட்சி மாற்றம், தமிழ்நூல்களை தொகுக்கும் வரலாற்று நிகழ்வுகள் உரைகளை மீட்டுருவாக்கம் செய்கின்றன. சமயப்போதகர்கள் மூலநூலை பயில்வுக்கு உட்படுத்தும் போது தத்தம் சமயம் சார்ந்து அந்நூலை அணுகும் போக்கு காணப்படுகிறது. உரைகளில் சமய ஊடாட்டம் பொதிந்துள்ளது. உரை எழுதுவதற்கு பின்புலமாக சமயம் நிற்கிறது. தொல்காப்பிய உரையில் சமயம் செயலாற்றும் திறத்தை நோக்குகளமாகக் கொண்டு இவ் ஆய்வு விரிகின்றது.

### சோழராட்சி, உரை மீட்சி

தமிழகத்தை சேரர், சோழர், பாண்டியர் என்ற மூவேந்தர்கள் ஆட்சி புரிந்தனர். அவர்களின் ஆட்சிக்குட்பட்டு இலக்கியம், இலக்கணம் ஆகிய நூல்கள் அவர்கள் பின்பற்றும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

சமயத்தினை அடியொற்றி கட்டமைக்கப்பட்டன. சோழர்களின் ஆட்சிக்காலம் (கி.பி 850 முதல் கி.பி 1270 வரை) தமிழக வரலாற்றில் சிறப்புற்று விளங்கிய காலகட்டம் ஆகும். இலக்கியம், இலக்கணம், சமயம், தத்துவம், வாணிபம் முதலிய எல்லா நிலையிலும் வளர்ச்சியடைந்திருந்தது. பல்வேறு மொழி பேசுவோரும் சமயத்தினரும் இணைந்து சமூகமாக வாழந்தனர். பெரும்பான்மைத் தமிழ்நூல்கள் தொகை செய்யப்பட்ட காலமும் இதுவே. வலுவான சமயக் கருத்தாடல்கள் இவ்விடைக்காலத்தில் நிகழ்ந்திருக்கின்றன. உரையாசிரியர்கள் சிறப்பாகத் தொழிற்பட்டு, தமிழ் இலக்கண, இலக்கிய உரைகளின் மீள் வரைவும் கூட இக்காலத்தில் செயல்பட்ட காலகட்டமாகத் திகழ்ந்தது. சோழர் ஆட்சிக்காலம் என்பது தமிழக வரலாற்றினை மீட்டெடுத்து தமிழ் மரபினை தன்னிலை உடையதாக ஆக்கும் காலமாக விளங்கியது.

சோழ மன்னர்கள் சைவ சமயத்தினை பின்பற்றுபவர்களாகத் திகழ்ந்தனர். சோழர் ஆட்சிக்காலத்தில் தரணி போற்றும் கலைநுட்பமான தஞ்சை பெரியகோவில் கட்டப்பட்டது. சோழர்கள் தான் சார்ந்த சமயத்தை நூல்களில் ஏற்றி அதனை பயில்பு முறை ஆக்கினர். சோழர் காலத்தில் வைதீக சமயக்கருத்தாக்கம் உருப்பெற்றது. இவை இலக்கியம் வழி கற்றல் அடைவினை எய்தியது. பின்னர் இந்நூலில் காணப்படும் கருத்துக்களை மக்கள் தெளிவாகப் புரிந்து கொள்வதன் காரணமாக அவற்றிற்கு உரைகள் வகுக்கப்பட்டன. சமயம் சார்ந்த தத்துவங்களை விளக்கி உரைக்க உரை எழுந்தது. வினாவிடை அமைப்பினால் இவை வளர்ச்சியுற்றது. சோழர் ஆட்சிக்காலத்தில் உரை தோன்றி செழிப்புற்று வளரத் தொடங்கியது எனினும் அதனில் வைச சிந்தாந்தம் என்ற சமயம் உட்புதைந்திருந்தது என்பதை புலனாகின்றது.

**வீடுபேறடைதல்**

பதின்மூன்றாம் நூற்றாண்டில் அனைவராலும் கவனிக்கப்பட்டதாக நன்னூல் இருந்திருக்கின்றது. அதனை மாற்ற நினைத்த ஆதிக்கச் சமயத்தினர் குறிப்பாக சைவசமயப் புலமையாளர்கள் தொல்காப்பியத்தைத் தனதாக்கிக் கொள்ள அதற்கு உரை வரையறுக்கின்றனர். இதற்கு வீடுபேறடைதல் என்ற கொள்கையை முன்வைக்கின்றனர். இது தமிழ் மரபா அல்லது வடமொழி மரபா? ஏன்ற வினா வலுபெறுகின்றது. தொல்காப்பியம் தமிழ் மரபினை உடையதாதலால் அதற்கு எழுதப்பட்ட உரைகளும் தமிழ் மரபோடு எழுதலாயின என்பதை இளம்பூரணர் உரை நிறுவுகிறது.

அகரம் முதல் னகர இறுவாய் என்பதில் அகரம் தான் இயங்கி பிற எழுத்துக்களையும் இயக்குவிக்கின்றது. இயக்குதல் சிறப்பான் அகரம் முதன்மை பெறுகின்றது.. னகரம் வீடுபேற்றிற்கு ஏற்ற ஆண்பாலை உணர்த்துதல் சிறப்பான் பின் வைக்கப்பட்டது என்ற கருத்தினை இளம்பூரணர் முன்வைக்கிறார். தமிழுக்கே உரிய சிறப்பெழுத்துக்களுள் ஒன்றான னகரத்தைக் கொண்டு தம் சமயக் கோட்பாட்டைக் கூறுவது இங்கு கவனிக்கத்தக்கது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

நச்சினார்க்கினியர் நூல் பற்றித் தரும் விளக்கம் மிகமுக்கியமானவை. அறம், பொருள், இன்பம், வீடடைதல் நூற்பயன் என்கிற வலுவான சிந்தனை உடையவர்களாகவே உரையாசிரியர்கள் செயல்பட்டிருக்கின்றனர். 'சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே' (கற்பியல்) என்று குறிப்பிடும் இடத்தில் சிறந்தது என்கிற சொல்லுக்கு வீடுபேறு அடைதல் என்று பொருள் கொள்கின்றனர் உரையாசிரியர்கள். இவை நான்காவது இயலில் விளக்க இருக்கின்றன. அறம், பொருள், இன்பம், வீடு என்கிற வடமொழி மரபினைத் தமிழ் மரபோடு இணைக்கும் சிந்தனை கவனிக்க வேண்டியதாகிறது.

வீடு கூறாரோவெனின், அகத்தியனாரும் தொல்காப்பியனாரும் வீடுபேற்றிற்கு நிமித்தம் கூறுதலன்றி வீட்டின் தன்மை இலக்கணத்தாற் கூறாரென்றுணர்க. அஃது,

**அந்நிலை மருங்கி னறமுத லாகிய**
**மும்முதற் பொருட்கு முரிய வென்ப (செய்.நூ.106)**

என்பதனான் உணர்க. இக்கருத்தானே வள்ளுவனாரும் முப்பாலாகக் கூறி மெய்யுணர்தலான் வீடுபேற்றிற்கு நிமித்தங் கூறினார் என்கிற நச்சினார்க்கினியர் கருத்து ஒப்பு நோக்கத்தக்கது. அவர் கருத்துப்படி அகத்தியனாரால் செய்யப்பட்ட நூலும் தொல்காப்பியரால் செய்யப்பட்ட நூலும் அறம், பொருள், இன்பம் என்ற மூன்றனையும் விளக்குகிறது. வீடு அடைதலுக்கான தன்மை இம்மூன்றிலே அடங்கியிருக்கிறது. திருக்குறளும் வீடுபேற்றினைப் பற்றிக் கூறுகிறது. இதில் அறியப்பட வேண்டியது என்னவெனில், 'மெய்யுணர்தல்' என்பது அறம், பொருள், இன்பம் இம்மூன்றின் மெய்மையை உணர்தலே. அறம், பொருள், இன்பம் என்ற பொருளை உணர்த்த எழுதப்பட்ட இலக்கியத்தை உரை விவரிக்கின்றது. நச்சினார்க்கினியர் குறிப்பிடுவதில் இருந்து அகத்தியம், தொல்காப்பியம் இரண்டு நூல்களும் இலக்கணம் பற்றியது என்றும் தமிழ் மொழியின் மரபினை பின்பற்றி எழுந்ததும் புலனாகின்றது.

அணுத்திரளொலி அதாவது அணு எனும் கொள்கை, சமணப் பயில்பு நெறியின் பாற்பட்டது. சைவ சமயம் சார் பயில்வு மரபினர் அணுவின் திரட்சியாகிய ஒலியென்பதை நாதகாரமாகிய ஒலியென்றனர். இவ்விடத்து சமயத் தத்துவத்திற்கும் மொழியின் ஆக்கத்திற்குமான ஊடாட்டம் நடந்திருப்பதை அறியமுடிகின்றது.

தொல்காப்பியர் பிறப்பியல் என்று ஓர் இயலை வைத்து விரித்துப் பேசிய அளவுக்கு பின்வந்த எந்த இலக்கண நூலும் விரித்துரைக்கவில்லை. நிறைந்த உயிர்களின் முயற்சியால் எழும் காற்றும் தான் எழுத்தாக பிறக்க வழிசெய்கிறது. இதனை உந்தி முதலாக உள்ள உறுப்புகளில் உருவாகும் காற்று என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். அப்படி எழும் காற்று உதானன் எனும் காற்று என்று இளம்பூரணராலும் நச்சினார்க்கினியராலும் குறிக்கப்படுகிறது. 'ஒலியணுக்களின் தொகுதி விசைந்தெழு' என மயிலைநாதர் பொருளுரைக்கிறார். தொல்காப்பிய உரையைத் தொடர்ந்து இலக்கண விளக்கமும் உதானன் என்றே குறிப்பிடுகின்றது. தொன்னூல் அதன் உரை விளக்கத்தில் இதன் விரிவுரை வேண்டின்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

தொல்காப்பியத்தில் காண்க என்றே சுட்டுகின்றது. அதனினும் விரிவு பேரகத்தியம், நன்னூலில் இருக்கிறது என்று மொழிகின்றது. பேரகத்தியம் என்னும் நூல் 17, 18 ஆம் நூற்றாண்டில் புழக்கத்தில் இருந்திருக்கிறது என்பது.

**பிராணன் அபானன் உதானன் வியானன்**
**சமானன் நாகன் கூர்மன் கிருகரன்**
**தேவ தத்தன் தனஞ்சயன் என்றா**
**வாயு ஈரைந் தாகும் இவைதாம் (பிங்.நி.நூ.32)**

நிறைந்த உயிர் இருக்கும் மனித உடலில் இருந்து மேற்குறித்த பத்து வகை வாயுக்கள் உற்பத்தியாகி தத்தம் பணியைச் செய்கின்றன.

| வ. எண் | உடலியல் | வாயுக்கள் |
|---|---|---|
| 1 | மலமூத்திரம் | அபானன் |
| 2 | கழுத்து | உதானன் |
| 3 | உடல் இயக்குநிலை | வியானன் |
| 4 | சுவையுணர்வு | சமானன் |
| 5 | கண் இயக்கம் | கூர்மன் |
| 6 | விக்கல் | நாகன் |
| 7 | கோபம் | கிருகரன் |
| 8 | உடம்பில் அரிப்பு | தேவதத்தன் |
| 9 | உயிர்போன பின் 3நாள் கழித்து வெளியேறும் | தனஞ்செயன் |
| 10 | உடலில் உயிர் இயக்கம் | பிராணன் |

எல்லா வாயுக்களுக்கும் தலைமையாய் நின்று உடலில் உயிராக இருப்பது பிராணன் வாயு தான். இதில் பிராணன் வாயும் உதானன் வாயும் தொழிற்படுதலால் உச்சரிக்க நினைக்கும் எழுத்தும் அதன் கூட்டமாகிய சொல்லும் பிறக்கிறது. தனஞ்செயன் எனும் வாயு உடலை விட்டு உயிர் போன பின்பும் மூன்று நாள் உடம்பில் இருந்து உச்சந்தலையின் பின்கூற்றில் மூன்று நெல் அளவிற்குப் பிளந்து அதன் வழியாகச் செல்லும் என்று காற்று பற்றி அடியார்க்கு நல்லார் உரைப்பது காற்றின் தன்மைகளை ஆய்ந்து அறிந்த அறிவியலை உணர்த்துவதாய் உள்ளது.

தொல்காப்பியர் உந்தியில் இருந்து எழும் காற்றானது தலை, மிடறு, நெஞ்சு ஆகிய இடங்களில் நிலைபெற்று பல், இதழ், நாக்கு, மூக்கு, அண்ணம் ஆகிய உறுப்புகளிடத்தே நின்று நினைக்கிற எழுத்தையும் சொல்லையும் உருவாக்குகிறது என்று எழுத்துக்களின் பொதுப்பிறப்பு பற்றி விளக்குகிறார். நன்னூலார் “நிறைந்த உயிர்களின் முயற்சியால்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

உருவாகும் அணுத்திரள் எழுந்து பிறப்புக்குக் காரணம் என்று குறிப்பிடுகிறார்." அதற்கு உரை செய்த மயிலைநாதரும் அவ்வாறே விளக்குகிறார். இலக்கண விளக்க நூலார் உயிர்க் கிழவனது முயற்சியான் எழுகின்ற உதானன் என்னும் காற்று காரணமாக அமைகின்றது என்கிறார். இங்கு தன் சமயம் சார்ந்த கடவுளை முதன்மைப்படுத்தி உயிர்க்கிழவன் என்ற சொல்லாடலைக் குறிக்கின்றார். இவை அனைத்தையும் தொகுத்து ஒன்றுநோக்கும் கருத்தோடு ஆ.வேலுபிள்ளை அவர்களின் கருத்தும் ஒப்புநோக்கத்தக்கது. அதாவது,

"கொப்பூழடியில் உதானனென்ற காற்றுத் தோன்றி வருகின்றது என்பது இன்றைய அறிவியல் கருத்துக்கு மாறானது. நெஞ்சில் சுவாசப் பையிலிருந்து புறப்படுங் காற்று மிடற்றினூடாகச் சென்று வாய்க்கு அல்லது வாய்க்கும் மூக்குக்கும் வருகிறதென இன்றைய ஒலிநூலார் கொள்வர். இத்தகைய கருத்தினை மனதிற் கொண்டு தொல்காப்பியம் முதலான நூல்களின் கருத்தினை நோக்கும் பொழுது எழுத்துக்களின் ஆக்கம் என்பது சமயம்சார் கருத்தாடலோடு தொடர்புபடுத்தப்பட்டிருப்பது வெளிப்படையாகத் தெரிகிறது.

தொன்னூல் விளக்கம் எழுத்துக்களின் பிறப்பினைப் பற்றிக் கூறுமிடத்து,

**உயிரிடை யினமிடறுரம் வலியச் சிமெலியியை**
**முதலிட மாயிதழ் மூக்கணம் பன்னா**
**வைந்துணையிடத்தா மக்கரப் பிறப்பே (தொ.வி.நூ.3)**

மனித உயிர் உருவாவதற்கு கொப்பூழ் முக்கிய இடமாக இருக்கிறது. இதனை முதன்மைப்படுத்தியே காற்று கொப்பூழில் உருவாகிறது என்றும் அப்படியான உயிரைப் படைப்புக் கடவுள் தான் படைக்கிறார் என்றும் தத்தம் சமயக் கருத்தாக அதைச் செய்கின்றனர் என்று இலக்கண நூலாசிரியர்களும் உரையாசிரியர்களும் உரை கொண்டிருக்கின்றனர். மொழியியல் ஆய்வு வலுபெற்றப் பின்னர் காற்று உருவாகின்ற இடம் பற்றிய தரவுகள் தான் முரண்படுகின்றதே தவிர தொல்காப்பியம் முதலான இலக்கண நூல்கள் விளக்கிச் சொல்லுகின்ற ஒவ்வோர் எழுத்துக்களின் தனிப்பிறப்புகள் பற்றிய விளக்கம் மாறவில்லை.

கி.பி. 13 முதல் 18 வரையிலான கால இடைவெளியில் உருவான எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி, பாட்டியல் என்னும் வெவ்வேறு துறை சார்ந்த நூல், உரைகளின் ஆசிரியர் சமயம் பற்றி அறிவது தேவையாகிறது. தொல்காப்பியம் தொடங்கிய சமண, பௌத்த செல்வாக்கு, அதிலும் பார்க்க சமண சமய அறிவுப் பாரம்பரியத் தொடர்ச்சி முடிவுக்கு வரும் தருணமாக இருக்கிறது. இலக்கண நூல்களிலும் அதற்கு எழுதப்பட்ட உரைகளிலும் வைதீக சமயத்தின் செல்வாக்கு மிகுந்திருப்பதை அறியமுடிகிறது. குறிப்பாக சைவப் புலமையாளர்கள் நூலாக்கத்தைக் காட்டிலும் உரையாக்கத்தில் கவனம் செலுத்தியிருப்பது நோக்கத்தக்கது.

இறையனார் களவியல் உரையில் தொடங்கிய சைவ சமயத்தாரின் உரையாக்கச் சிந்தனை மரபு தொல்காப்பியம், நன்னூல் போன்ற முக்கிய நூல்களுக்கு இயற்றிய உரைகளின் மூலம் வலுக்கொண்டதை அறியமுடிகிறது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**தொகுப்புரை**

சோழர் ஆட்சிக்காலம் தமிழை மீட்டெடுக்கும் தொடக்க காலமாக செயல்பட்டது. தமிழ் நூலாக்கம், கலைப்படைப்புகளின் உருவாக்கம், உரைநடையின் வளர்ச்சி, சமயப்பரவல் இவையாவும் சிறப்புற்று விளங்கும் காலமாக சோழர் ஆட்சிக்காலம் திகழ்ந்தது. வீடுபேறடைதல் என்பது அறம், பொருள், இன்பம் என்ற மெய்யுணரும் தன்மையுடைய தமிழ் மரபினைச் சார்ந்தது. 'னகரம்' என்ற சிறப்பெழுத்து வீடுபேறடைதல் முறையான் எழுத்திடை பின்வைக்கப்பட்ட செய்தி உரைகள் சமயம் சார்ந்து எழுதப்பட்டதை கவனிக்கச் செய்கிறது. இலக்கண நூல்களும் அவற்றிற்கு தோன்றிய உரை மரபுகளும் சமயப்பின்னணியில் தோன்றியதாகும். பிறப்பியல் செய்தி காற்றின் தன்மையையும் காற்று உடம்பில் தொழிற்படும் திறத்தினையும் எடுத்தியம்புகிறது. பிறப்பியலில் உயிர்க்கிழவன், அணுத்திரள், உதானன் வாயு என்ற சொற்றொடர்கள் சமயக் கருத்தாக்கம் உடையது. தொல்காப்பியத்திற்கு எழுதப்பட்ட உரைகள் சமயத்தினை அடியொற்றியே எழுதப்பட்டது என்பதை இக்கட்டுரை நிறுவுகின்றது.

**சான்றாதாரங்கள்**

[1] தமிழில் இலக்கணச் சிந்தனைகள் கி.பி. 13 முதல் கி.பி.18 வரை, அய்யப்பன். கா, காவ்யா பதிப்பகம், கோடம்பாக்கம், சென்னை – 600024, முதல் பதிப்பு. 2012,

[2] பேச்சு மரபும் உரைநெறியும், முனியசாமி. மு, காவ்யா வெளியீட்டகம் 2013,16, இரண்டாம் குறுக்குத்தெரு, டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம், சென்னை – 600 024, 2013,

[3] இளம்பூரணர் (11 ஆம் நூற்றாண்டு). தொல்காப்பியம் (எழுத்து, சொல், பொருள்) மூலமும் உரையும். சாரதா பதிப்பகம், சென்னை – 14, பதிப்பு, 1939,

[4] தொல்காப்பியம் பொருளதிகாரம், பேராசிரியர் உரை, திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிமிடெட், திருநெல்வேலி சென்னை – 1, 1954,

[5] தமிழில் இலக்கணச் சிந்தனைகள் கி.பி. 13 முதல் கி.பி.18 வரை, அய்யப்பன். கா., காவ்யா பதிப்பகம், கோடம்பாக்கம், சென்னை – 600 024, முதல் பதிப்பு. 2012,

[6] பிங்கல நிகண்டு, பிங்கல முனிவர், மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை, முதற்பதிப்பு, 1917,

[7] சிலப்பதிகார மூலமும் அருப்பதவுரையும், உ.சே.சாமிநாதையர், கமர்ஷியல் அச்சுக்கூடம், சென்னை, இரண்டாம் பதிப்பு – 1920,

[8] நன்னூல் காண்டிகையுரை, ஆறுமுகநாவலர் (உரையாசிரியர்), முல்லை நிலையம், சென்னை, பதிப்பு - 1994,

[9] வீரமாமுனிவர் எழுதிய ஐந்திலக்கணத் தொன்னூல் விளக்கம் - மூலமும் உரையும் - எழுத்ததிகாரம், நடராசா, எஃப். எக்சு. சி. (பதிப்பாசிரியர்), மட்டக்களப்பு, பதிப்பு- 1991.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**மகேஷ் பாண்டி & நயினார் . "தொல்காப்பிய உரை புலப்படுத்தும் சமயப் பின்புலம்."** *தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 3, சிற.இதழ் 3, தொகுதி 3, ஜனவரி 2021, பக்.368-374. டிஓஐ: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.055**

**Cite this Article in English (MLA 8 Style) as:**
**Mahesh Pandi & Nainar. "Religious Background Revealed in "Tholkappiyam"."** *International Journal of Tamil Language and Literary Studies*, Vol. 3: Special Issue - 3, Vol. 3, January 2021, pp.368-374. DOI: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.055**

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். /I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

## மூவர் தேவாரத்தில் திருமுதுகுன்றம்

## Thirumuthukundram in Muvar Thevaaram

**முனைவர் இரா. மதன் குமார்,** பேராசிரியர் மற்றும் தலைவர், தமிழ் மற்றும் இந்திய மொழிகள் துறை,
கற்பகம் உயர்கல்வி கலைக்கழகம், கோயம்புத்தூர்-21.
**Dr.R. Madhan Kumar,** Professor & Head, Department of Tamil and Indian Languages
Karpagam Academy of Higher Education, Coimbatore – 21.
**ORCiD:** https://orcid.org/0000-0002-3161-6209
**DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.056**

### Abstract

*The numbers of Nadunaattu Saiva temples are twenty-two. Thirumuthukundram is one of the temples from Nadunaadu. This temple was praised in ten Pathikams by the Muvar (Shaivate Spiritual Trio) in "Thevaram". ThirugnanaSampandha Nayanaar praised Thirumuthukundram in seven Pathikams, Thirunavukkarasa Nayanar praised this temple in one Pathikam and Sundaramurthy Nayanar praised the temple in two Pathikams. Thevaara muvar insists on salvation with Pazhamalainathar through the practice of Bakthi. This article deals on the praise and glory about Thirumuthukundram in the above enunciated ten Pathikams. The study also discusses the devotional experiences of Thevaara muvar (Shaiva Spiritual Trio) in the holy abode Thirumuthukundarm and guides us to attain Salvation through Bhakti.*

**Keywords:** Thirumuthukundram, Muvar "Thevaram", Thirugnaanasampandha Nayanaar, Thirunavukkarasa Nayanar, Sundaramurthy Nayanar, Shaivate Spiritual Trio

### முன்னுரை

தேவார மூவரது பாடல்பெற்ற நடுநாட்டு சைவத்திருத்தலங்கள் இருபத்து இரண்டு. அவற்றுள் ஒன்றாகிய திருமுதுகுன்றத்துக்கு திருஞானசம்பந்த நாயனாரின் திருக்கடைக்காப்பில் ஏழு திருப்பதிகங்களும், திருநாவுக்கரச நாயனாரின் ஒரு திருப்பதிகமும், சுந்தரமூர்த்தி நாயனாரின் திருப்பாட்டில் இரண்டு திருப்பதிகங்களும் என பத்து திருப்பதிகங்கள் விளங்குகின்றன. அத்திருப்பதிகங்களில் அமைந்துள்ள சிவனாரது பரத்துவ நுட்பங்களையும், அடியார்களது பக்தி வெளிப்பாட்டையும், அரனடியில் அன்பகலாத சிந்தையின் நிறைவையும், ஆராத பேரின்பவிருப்பில் அவர்கள் பணித்த அருளியல் விண்ணப்பங்களையும், பழமலைநாதர் அடியார்தம் உள்ளத்தையே கோயிலாகக் கொண்டருள்கின்ற அருளனுபவங்களையும் இக்கட்டுரை விளக்கியுரைக்கிறது.

### திருத்தலச்சிறப்பு

இத்திருத்தலத்தின் அருள்சிறப்பினை எடுத்தோதுகின்ற வகையில் சிவன்பாக்கம் ஞானக்கூத்தசுவாமிகள் விருத்தாசலபுராணத்தை அருளிச்செய்துள்ளார். நானூற்று முப்பத்தைந்து திருவிருத்தப் பாக்களால் ஆன இப்புராணத்துள் கிரிச்சருக்கம் முதலாக

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

சசிவன்னச்சருக்கம் ஈறாகப் பதினெட்டுச் சருக்கங்கள் இடம்பெற்றுள்ளன. நான்முகனுக்குப் படைப்புத்தொழிலுக்கான ஆணை வழங்கிய இறைவனார், மலையாக அவருக்குக் காட்சி தந்த திருத்தலமாதலால் பழமலை-விருத்தகிரி என இத்திருத்தலம் வழங்கப்பெறுகிறது. அத்தகைய அருள்சிறப்புடன் ஊழிப்பெருவெள்ளத்திலும் இத்திருத்தலம் மூழ்காமல் நிலைப்பெற்ற சிறப்பினைத் திருஞானசம்பந்த நாயனார்,

**செழுநிலத்தை மூடவந்த**
**மூவாத முழங்கொலிநீர் கீழ்தாழ**
**மேலுயர்ந்த முதுகுன்றமே (முதலாம் திருமுறை:131:9)**

எனக் குறித்தருளியுள்ளார். இறைவனார் இத்திருத்தலத்தில் தாமேமுளைத்தெழுந்த திருமேனியராக விளங்குகிறார் என்ற திருக்குறிப்பினை திருநாவுக்கரச நாயனார்,

**முத்தினை யென்மணியை மாணிக் கத்தை**
**முளைத்தெழுந்த செம்பவளக் கொழுந்தொப் பானைச்**
**சித்தனையென் திருமுதுகுன் றுடையான் தன்னை' (ஆறாம் திருமுறை-68:3)**

என்று போற்றியுள்ளார். திருமுதுகுன்றத்துப் பெருமானார் திருக்கோயிலில் விளங்குதல் மட்டுமல்லாமல், அனைத்து உயிரின் கருவிலும் உள்கலந்த சோதியாக விளங்கவல்லவர்' என்ற ஆறாம் திருமுறையின் அருள்குறிப்பினை, 'ஊன்கருவின் உள்நின்ற சோதி யானை' (மேலது திருமுறை:68:4) என்று அறிவுறுத்தியுள்ளார். இத்திருத்தலத்துக்கு விபசித்து முனிவர் திருப்பணி செய்த வரலாறு விருதாசலபுராணத்துள் விளக்கப் பட்டுள்ளது. இத்திருத்தலத்தில் சைவஆகமங்களின் நிலையில் முருகப்பெருமானார் இறைவனை வணங்கவேண்டி இலிங்கங்கத்திருமேனிகளைத் தாபித்ததாக வரலாறு உண்டு. அதனால் வேடுவர்கள் திருமுதுகுன்றத்துப்பெருமானைப்போற்றுங்கால், திருமுருகனையும் பாடி மகிழ்வர் என்ற குறிப்பினைத் திருஞானசம்பந்த நாயனார்,

**கருகுகுழல் மடவார்கடி குறிஞ்சியது பாடி**
**முருகன்னது பெருமைபகர் முதுகுன்றடை வோமே' (முதலாம் திருமுறை:12:10)**

எனக் குறித்தருளியுள்ளார்.

**முத்தி தரும் உயர் முதுகுன்றம்**

அவிமுத்தமாகிய காசிக்கு இணையான இத்தலத்தின் அருள்சிறப்பினை கந்தபுராணமும் விளக்கியுள்ளது. திருவாரூரில் பிறந்தாலும், தில்லையை தரிசித்தாலும், திருவண்ணாமலையை நினைத்தாலும், காசியில் இறந்தாலும் முத்தி என்பது சைவமரபு. இத்திருத்தலங்களைக்காட்டிலும் திருமுதுகுன்றம் மேலும் அருள்சிறப்பு பெற்றுத்திகழ்கிறது. 'இத்திருத்தலத்தில் இறக்கின்ற பக்குவர்களின் உயிரை பழமலைநாதனார் தமது மடியில் கிடத்தி, அவர்கள் சிவமாம் தன்மை அடைந்துய்வதற்கு ஏதுவாக அஞ்செழுத்தினை ஓதி அருள்வார்; அவ்வேளையில் பெரியநாயகி அம்மையார் அவர்தம் அருகிருந்து தமது

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

துகில்கொண்டு வீசி உயிருக்கு ஆறுதல் தந்தருள்வார்' என்ற அருள்குறிப்பானது கந்தபுராணத்தில்,

**தூசினால் அம்மை வீசத் தொடையின்மேற் கிடத்தித் துஞ்சும்**
**மாசிலா உயிர்கட் கெல்லாம் அஞ்செழுத் தியல்பு கூறி**
**ஈசனை தனது கோலம் ஈந்திடு மியல்பால் அந்தக்**
**காசியின் விழுமிதான முதுகுன்ற வரையும் கண்டான் (கந்தபுராணம்-**
**வழிநடைப்படலம்: 295)**

என இடம்பெற்றுள்ளது. இத்திருத்தலமானது அத்திரி, வசிஷ்டர், ஜமதக்னி, கும்பரிஷி, காசிபர், சதக்னர், உரோமர், கண்ணுவர், வர்ச்சர் முதலான தவமுனிவர் பலர் வணங்கிப் பேறு பல பெற்ற சிறப்புடையது. இக்குறிப்பானது முதலாம் திருமுறையில்,

**அறையார்கழ லந்தன்றனை பயில்மூவிலை யழகார்**
**கறையார்நெடு வேலின்மிசை யேற்றானிடங் கருதில்**
**மறையாயின பலசொல்லியொண் மலர்சாந்தவை கொண்டு**
**முறையான்மிகு முனிவர்தொழு முதுகுன்றடை வோமே (முதலாம் திருமுறை:12:5)**

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

மேற்கண்ட பாடலில் அந்தகாசுரனை இறைவனார் மறக்கருணையால் ஆட்கொண்ட அருள்வரலாற்றை திருஞானசம்பந்த நாயனார் பதிவுசெய்துள்ளார். அந்தகனாகிய குறியீடு – ஆணவமலத்தின் வலிமையான பிடியில் ஆட்பட்டு அறியாமையே தனது நிலையாகி பிறப்புக்கு வாயில் அமைக்கின்ற வினைகளைப் பெருக்குகின்ற உயிரின் இருள்மல நிலையினைக் குறிப்பதாகும். இறைவனார் உயிருக்கு மெய்யறிவை ஊட்டி, அறியாமையை நீக்கியருள்வார். அத்தகைய தத்துவ விளக்கத்தை உள்ளடக்கியே இருளாகிய அந்தகனை, இறைவனார் மூவிலைச் சூலத்தால் குத்தி ஆட்கொண்டதாகத் தொன்ம வரலாறு உணர்த்தப்படுவது சைவ மரபு.

'திருமுதுகுன்றத்தை அடைந்து ஆணவம், கன்மம், மாயை ஆகிய பாசங்களால் விளைகின்ற அறியாமை மயக்கம் நீங்கி உய்வோம்!' என்று அடியார்களை ஆற்றுப்படுத்துகின்ற அருள்நோக்கில் திருஞானசம்பந்த நாயனார்,

**விளையாததொர் பரிசில்வரு பசுபாசவே தனையொண்**
**தளையாயின தவிரவ்வருள் தலைவன்னது சார்பாம்**
**களையார்தரு கதிராயிர முடையவ்வவ னோடு**
**முளைமாமதி தவழும்முயர் முதுகுன்றடை வோமே (மேலது திருமுறை:12:3)**

எனப் பாடியுள்ளார். ஆருயிர்களின் பிறவிப்பிணிக்கு திருமுதுகுன்றத்துப்பெருமானார் மருந்தாகின்ற அருள்திறத்தை,

**மாத்தாடிப் பத்தராய் வணங்குந் தொண்டர்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com


**வல்வினைவே றறும்வண்ணம் மருந்து மாகித்**

**தீர்த்தானைத் திருமுதுகுன் றுடையான் தன்னை (ஆறாம் திருமுறை:68:7)**

எனக் குறித்தருளியுள்ளார்.

**தனிமுதலாகிய தகைமை**

முதலாம் திருமுறையின் 'மத்தாவரை நிறுவி' எனத் தொடங்குகின்ற திருமுதுகுன்றத்துத் திருப்பதிகத்தில் திருஞானசம்பந்த நாயனார் சிவனார் பரத்துவத்தை நிறுவியுள்ளார். திருமுதுகுன்றத்துப் பெருமானார், வானவர், மண்ணவர் உள்ளிட்ட அனைத்துயிர்களையும் காக்கவேண்டி பெருங்கருணைத்திறத்துடன் நஞ்சுண்டு அருளினார்.

**'மத்தாவரை நிறுவிக்கடல் கடைந்தவ்விட முண்ட**

**தொத்தார்தரு மணிநீண்முடிச் சுடர்வண்ணன திடமாம்**

**கொத்தார்மலர் குளிர்சந்தகி லொளிர்குங்குமங் கொண்டு**

**முத்தாறுவந் தடிவீழ்தரு முதுகுன்றடை வோமே (மேலது திருமுறை:12:1)**

என்று இறைவனாரின் அறக்கருணைத்திறம் போற்றப்பட்டுள்ளது.

**சோதிப்பிழம்பாகி நின்ற பரத்துவம்**

திருமுதுகுன்றத்துப்பெருமானார், மாலும், நான்முகனும் தேடி அறிய இயலாதவராக, சோதிப் பிழம்பாக முளைத்து எழுந்த பரத்துவத்தையும்,

**இயலாடிய பிரமன்னரி யிருவர்க்கறி வரிய**

**செயலாடிய தீயாருரு வாகியெழு செல்வன்**

**புயலாடுவண் பொழில்சூழ்புனற் படப்பைத்தடத் தருகே**

**முயலோடவெண் கயல்பாய்தரு முதுகுன்றடை வோமே (மேலது திருமுறை:12:9)**

என்று பாடியுள்ளார்.

**குண-குணியாய் நிற்கின்ற தனிமுதல்வன்**

திருமுதுகுன்றத்துப் பெருமான், மூவர்க்கும் முதல்வனாகவும், யாவர்க்கும் தலைவனாகவும், அனைத்துப் பொருளிலும் குண-குணியாக நிற்கின்ற பரத்துவமும் உடையவன்; சுவை ஆறும், இசை ஏழும், குணம் எட்டும், வேதம் நான்குமாகி விளங்குபவன்; எந்நிலையாலும், எவ்வகையாலும் உணர இயலாத அரும்பொருளாக விளங்குபவன்; ஆயினும் பக்திநெறியாகிய நன்னடையால் மட்டுமே உணரத்தக்க எளிமை உடையவன்' என்பதனை,

**மெய்த்தாறு சுவையுமே ழிசையுமெண்**

**குணங்களும் விரும்புநால்வே**

**தத்தாலு மறிவொண்ணா நடை தெளியப்**

**பளிங்கேபோ லரிவைபாகம்**

**ஒத்தாறு சமயங்கட் கொருதலைவன்**

**கருதுமூ ருலவுதெண்ணீர்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**முத்தாறு வெதிருதிர நித்தலும்**

**வாரிக்கொழிக்கும் முதுகுன்றமே (முதலாம் திருமுறை:131:1)**

எனப் பாடியருளியுள்ளார்.

**பாமாலை பாடும் பணி தந்தான்**

திருமுதுகுன்றத்துப்பெருமானே தம்மை நாளும் சொல்மாலையால் பாடி மகிழப் பேறு தந்ததாகிய அருளனுபவப்பெருக்கினை திருநாவுக்கரச நாயனார்,

**எத்திசையும் வானவர்கள் தொழநின்றானை**

**ஏறூர்ந்த பெம்மானை யெம்மா னென்று**

**பத்தனாய்ப் பணிந்தடியேன் தன்னைப் பன்னாள்**

**பாமாலை பாடப் பயில்வித் தானை**

**முத்தினை யென்மணியை மாணிக் கத்தை**

**முளைத்தெழுந்த செம்பவளக் கொழுந் தொப்பானைச்**

**சிந்தனையென் திருமுதுகுன் றுடையான் தன்னைத்**

**தீவினையேன் அறியாதே திகைத்த வாறே(ஆறாம் திருமுறை:68:3)**

எனப் பாடி மகிழ்ந்துள்ளார். திருமுதுகுன்றத்து இறைவனார் பிச்சை உகக்கின்ற பெருமானாக இல்லங்கள்தோறும் எழுந்தருளி அடியார்களின் வல்வினையைப் பிச்சையாக ஏற்றருள்கின்ற திறத்தை திருநாவுக்கரச நாயனார்,

**கழலொலியுங் கைவளையும் ஆர்ப்ப ஆர்ப்பக்**

**கடைதோறு மிடுபிச்சைக் கென்று செல்லுந்**

**திகழொளியைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத்**

**தீவினையேன் அறியாதே திகைத்த வாறே (மேலது திருமுறை:68:6)**

என்று பாடியருளியுள்ளார்.

**அறியாமை மயக்கை அகற்றுகின்ற நாயனார்**

திருமுதுகுன்றத்துப் பெருமானை அறிந்துணராத ஆருயிர்களின் அறியாமையினை திருநாவுக்கரச நாயனார் தமது குறையாக ஏறிட்டுக்கொண்ட அருள்திறத்தை மேற்கொண்ட பாடல் உணர்த்துகின்றது. பெருமானார் பார்த்தனுக்கு அருளவேண்டி, தாமும் தம் தையலும் வேடுவக்கோலத்தை உவந்தேற்றனர். தாமே கானகத்தில் பார்த்தனை நாடிச்சென்று பாசுபதத்தை அருளி ஆட்கொண்டனர்; அத்தகைய அருள் நோக்கில் அடியார்களையும் ஆட்கொண்டு, அவர்களது உள்ளத்தையே தமக்குக் கோயிலாகவும் கொண்டு, தாமே அவர்களுக்கு ஞான குருவாகவும் விளங்கி அருள்வார்; அவ்வகையில் திருமுதுகுன்றத்துப் பெருமானால் தாம் அடியவனாக ஆட்கொள்ளப்பட்ட அருந்திறத்தைத் திருநாவுக்கரச நாயனார்,

**ஊன்கருவின் உள்நின்ற சோதி யானை**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**உத்தமனைப் பத்தர்மனம் குடிகொண் டானைக்**

**கான்திரிந்து காண்டீப மேந்தி னானைக்**

**கார்மேக மிடற்றானைக் கடலைக் காற்றைத்**

**தான்தெரிந்தங் கடியேனை யாளாக் கொண்டு**

**தன்னுடைய திருவடியென் தலைமேல் வைத்த**

**தீன்கரும்பைத் திருமுதுகுன் றுடையான்**

**தன்னைத் தீவினையே அறியாதே திகைத்த வாறே (மேலது திருமுறை:68:4)**

எனக் குறித்தருளியுள்ளார். மேற்கண்ட பாடலில் குறித்தருளிய வண்ணம் திருமுதுகுன்றத்துப் பெருமானை ஞானகுருவாகப் பெற்றுய்ய பக்திநெறியை அறிவுறுத்துகின்ற நிலையில் திருஞானசம்பந்த நாயனார்,

**நின்று மலர்தூவி இன்று முதுகுன்றை**

**நன்று மேத்துவீர்க், கென்று மின்பமே (முதலாம் திருமுறை:93:1)**

என்று குறித்தருளியுள்ளார். பக்திநெறி வழியே பண்படுகின்ற உயிர்களுக்குத் திருமுதுகுன்றத்துப்பெருமான் இரங்கியருள்கின்ற பெருந்திறத்தையும்,

**சுழிந்தகங்கை தோய்ந்ததிங்கட் டொல்லராநல் லிதழி**

**சழிந்தசென்னிச் சைவவேடந் தான்நினைத்தைம் புலனும்**

**அழிந்தசிந்தை யந்தணாளர்க் கறம்பொருளின் பம்வீடு**

**மொழிந்தவாயான் முக்கணாதி மேயமு துகுன்றே (மேலது திருமுறை:53:6,7)**

என்ற பாடல் அடிகளால் உணர்த்தியருளியுள்ளார். பக்திநெறியில் நிலைபெறுகின்ற உள்ளத்தையே திருமுதுகுன்றத்து இறைவனார் கோயிலாகக் கொள்கின்ற கொள்கையினைத் திருநாவுக்கரசு நாயனார்,

**மறவாதே தன்திறமே வாழ்த்துந் தொண்டர்**

**மனத்தகத்தே அனவரதம் மன்னி நின்ற**

**திறலானை திருமுதுகுன் றுடையான் தன்னை (ஆறாம் திருமுறை:68:8)**

எனக் குறித்தருளியுள்ளார்.

**சுந்தரமூர்த்தி நாயனாரின் அருளனுபவம்**

பரவையாரின் வாட்டம் தீரும் பொருட்டு, பன்னீராயிரம் பொன்னை வழங்கியருள வேண்டி சுந்தரமூர்த்திநாயனார் திருமுதுகுன்றத்துப்பெருமானிடத்தில் வேண்டினார். அவர்தம் விண்ணப்பத்தை ஏற்றருளிய பெருமானும் அவ்வண்ணமே பொன்னை வழங்கி அருள்செய்தார். திருமுதுகுன்றத்துப்பெருமானிடத்தில் நாயனார் பணித்த விண்ணப்பமானது தனித்திருப்பதிகமாக ஏழாம் திருமுறையில் இடம்பெற்றுள்ளது.

**உம்பரும் வானவரும் உடனேநிற்க வேயெனக்கு**

**செம்பொனைத் தந்தருளித் திகழும்முது குன்றமமர்ந்தீர்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**வம்ப ருங்குழலாள் பரவையிவள் வாடுகின்றாள்**
**எம்பெரு மானருளீர் அடியேனிட் டளங்கெடவே (ஏழாம் திருமுறை:25:2)**

என்றமைந்த விண்ணப்பத்தின்படி நாயனார் தாம் பெற்ற பொன்னை நாயனார் திருமணிமுத்தாற்றில் இட்டு, திருவாரூர்த் திருக்குளத்திலிருந்து பெற்றுக்கொண்டார்.

**பெருமானிடத்தில் விண்ணப்பம்**

பக்திநெறியால் பணிகின்ற அடியவர்களுக்கு உடனே அருள வேண்டும் என சுந்தரமூர்த்தி நாயனார் பரிந்துரைக்கின்றார். உள்ளம் உருகி உம்மை வணங்குகின்ற அடியவர்களுக்கு நீர் உடனே அருள்செய்யாமல், இன்று செய்வோம்; நாளை செய்வோம் என்று காலம் தாழ்த்துதல் முறையன்று; காலம் பல கடந்தால் அவர்கள் இறந்ததற் பின் நீர் செய்வதும் பயன்தராது; எனவே அவர்கள் வேண்டுங்கால் உடனே அருளி அருள்செய்க!' என்று பரிந்துரைகின்ற அருளுள்ளத்தை,

**நஞ்சி இடைஇன்று நாளையென் றும்மை நச்சுவார்**
**துஞ்சியிட் டாற்பின்னைச் செய்வதென் னடிகேள்சொலீர்**
**பஞ்சி யிடிப்புட்டில் கீறுமோபணி யீரருள்**
**முஞ்சி யிடைச்சங்கம் ஆர்க்குஞ் சீர்முது குன்றரே (மேலது திருமுறை:43:1)**

என்ற திருப்பாடலின் வழி உணரலாம்.

**திருவடிகள் நோகாவோ**

'திருமுதுகுன்றத்துப் பெருமானே! நீர்! தொண்டர்கள் அளவிறந்த புகழால் போற்றவும், வானவர்கள் துதிக்கவும் பெருந்திறம் கொண்டிருந்தும், பழமையான இல்லங்களில் பிச்சையேற்கச் செல்வதும் முறையோ?' என நாயனார் வினவுகிறார்.

**தொண்டர்கள் பாடவிண் ணோர்க ளேத்த உழிதர்வீர்**
**பண்டகந் தோறும் பலிக்குச் செல்வதும் பான்மையே (மேலது திருமுறை: 43:3)**

என்று பாடுவதுமல்லாமல், 'பெருமானார் பிச்சை ஏற்கவேண்டி பல இடங்களிலும் அலைதலால் திருவடிகள் நோகாதோ?' என வினவுபவராக,

**ஏரிக் கனகக் கமல மலரன்ன சேவடி**
**ஊரித் தனையுந் திரிந்தக் காலவை நேரங்கொலோ**
**வாரிக் கட்சென்று வளைக்கப் பட்டு வருந்திப்போய்**
**மூரிக் களிறு முழக்க றாமுது குன்றரே (மேலது திருமுறை:43: 2)**

எனப் பாடியுள்ளார்.

**அறம் வளர்க்கப் பொருள் சேர்க்கின்றீரோ**

முதுகுன்றத்து இறைவரே! உமது மனையாள் ஊர்கள்தோறும் அறம்வளர்கின்ற இயல்புடையவள்; ஆனால், நீரோ ஊர்கள்தோறும் பிச்சை ஏற்கச் செல்வதும் முறையோ?' என்பவராக,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**செட்டிநின் காதலி ஊர்கள் தோறும் அறஞ்செய**

**அட்டுமின் சில்பலிக் கென்ற கங்கடை நிற்பதே (மேலது திருமுறை:43:9)**

என வினவுகிறார்.

இறைவனார் தமக்கு அருளவேண்டி நாயனார் விண்ணப்பிக்கின்றார். நீரும் உமது அடியார்களும் இல்லங்கள்தோறும் ஆடியும் பாடியும் பிச்சையேற்றுப் பொருள் சேர்க்கின்றீகள்; நீர் சேர்க்கின்ற பொருளனைத்தும் உமது பாகத்தாளாகிய உமையாருக்கு மட்டிலும் உரிமையுடையதோ?; அதிலிருந்து சிறிதளவேனும் தமக்குத் தந்தருளவேண்டும் என விண்ணப்பிக்கின்றார்.

**ஆடி யசைந்தடி யாரும் நீரும் அகந்தொறும்**

**பாடிப் படைத்த பொருளெ லாமுமை யாளுக்கோ (மேலது திருமுறை:43:5)**

என்ற பாடலடிகள் சுந்தரமூர்த்தி நாயனார் திருமுதுகுன்றத்துப் பெருமானிடத்தில் கொண்ட பேரன்பின் வெளிபாடாகின்றன. திருமுதுகுன்றத்துப் பெரியநாயகியம்மையார், இறைவனார் தருகின்ற பொருளைக்கொண்டு அறம் வளர்க்கின்ற பாங்கினால் பாலாம்பிகை என்ற பெயரும் கொண்டு விளங்குகிறார். குகைநமசிவாயரது சீடராகிய குருநமசிவாயருக்கு உணவிட்டதால் அப்பெயர் விளங்குவதாக தலவரலாறு உள்ளது.

**முடிவுரை**

திருமுதுகுன்றத்தை திருஞானசம்பந்த நாயனார் பாடியுள்ள, 'மத்தாவரை நிறுவி' ; 'தேவராயும் அசுரராயும்'; 'நின்று மலர்தூவி'; 'மெய்த்தாறு சுவையும்' ; 'தேவா சிறியோம்'; 'முரசதிர்ந்தெழு' என்ற திருப்பதிகங்களில் வானவரும், தவமுனிவரும் இறைவனைப் பணிகின்ற அருள்திறமும், திருமுதுகுன்றத்தின் இயற்கை எழில்சூழலில் இறைமை ததும்புகின்ற அருளழகும், அந்தகனுக்கு அருளிய மறக்கருணையும், தக்கன் வேள்வி தகர்த்த பெருந்திறமும், பார்த்தனுக்குப் பாசுபதம் அளித்தருளிய அருள்பெருக்கும்; முப்புரத்தை எரித்தருளிய பரத்துவ உண்மையும் இடம்பெற்றுள்ளன. திருநாவுக்கரச நாயனாரின், 'கருமணியை' திருப்பதிகத்தில் சிவனார் பரத்துவமும், நாயனாரின் தன்னுணர்ச்சி அனுபவங்களும், சிவத்தை அறியாத சிறுமையின் வெளிப்பாடும் இடம்பெற்றுள்ளன. சுந்தரமூர்த்தி நாயனார் பாடிய, 'பொன்செய்த மேனி' திருப்பதிகத்தில் திருமுதுகுன்றத்துப் பெருமானிடத்தில் அவர் கொண்டிருந்த அன்புரிமையும்; 'நஞ்சிடையின்று' திருப்பதிகத்தில் பிச்சை உகக்கின்ற பெருமானின் திருக்கோலத்தில் நாயனார் கொண்டிருந்த பக்தித்திறமும் இலக்கியநயத்துடன் இடம்பெற்றுள்ளன. 'தமது உரை, திருமுதுகுன்றத்துப் பெருமானது உரை!' என்ற பேரருள் நோக்கில் தேவார மூவரால் அருளிச்செய்யப்பட்டுள்ள மேற்கண்ட திருப்பதிகங்கள் திருமுதுகுன்றத்துப் பெருமானின் திருவடி கூடுவதற்கு இயைந்த கருவியாகும். 'பாடுவார்க்கு அருளும் எந்தை' என்றமைந்த திருமுதுகுன்ற தேவாரத் திருவாக்கு மேற்கண்ட அருளுண்மைக்கு மேலும் வலு சேர்க்கிறது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**பார்வை நூல்கள்**

[1] ஞானசம்பந்தன்.அ.ச., (பதிப்பாசிரியர்), தேவாரத் திருப்பதிகங்கள், கங்கை புத்தக நிலையம், சென்னை – 17. ஐந்தாம் பதிப்பு: ஜனவரி-2005.

[2] வசந்தகுமார். இரா (பதிப்பாசிரியர்)., கந்தபுராணம் (தேர்ந்தெடுக்கப்பெற்ற பாடல் [3] தொகுப்பு), பன்னிரு திருமுறை ஆய்வுமைய வெளியீடு, கற்பகம் உயர்கல்வி கலைக்கழகம், கோயம்புத்தூர் – 21. முதல் பதிப்பு: அக்டோபர்-2014.

[3] வசந்தகுமார். இரா (பதிப்பாசிரியர்)., திருஞானசம்பந்த நாயனார் அருளிய முதலாம் திருமுறை, பன்னிரு திருமுறை ஆய்வுமைய வெளியீடு, கற்பகம் உயர்கல்வி கலைக்கழகம், கோயம்புத்தூர் – 21. முதல் பதிப்பு: டிசம்பர்-2014.

[4] வசந்தகுமார். இரா (பதிப்பாசிரியர்)., திருநாவுக்கரச நாயனார் அருளிய ஆறாம் திருமுறை, பன்னிரு திருமுறை ஆய்வுமைய வெளியீடு, கற்பகம் உயர்கல்வி கலைக்கழகம், கோயம்புத்தூர் – 21. முதல் பதிப்பு: அக்டோபர்-2015.

[5] வசந்தகுமார். இரா (பதிப்பாசிரியர்)., சுந்தரமூர்த்தி நாயனார் அருளிய ஏழாம் திருமுறை, பன்னிரு திருமுறை ஆய்வுமைய வெளியீடு, கற்பகம் உயர்கல்வி கலைக்கழகம், கோயம்புத்தூர் – 21. முதல் பதிப்பு: டிசம்பர்-2015.

[6] விருத்தாசலபுராண மின் நூல் உதவி - www.shaivam.org

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**மதன் குமார். "மூவர் தேவாரத்தில் திருமுதுகுன்றம்."** *தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்,* தொகுதி 3, சிற.இதழ் 3, தொகுதி 3, ஜனவரி 2021, பக்.375-383. டிஓஐ: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.056**

**Cite this Article in English (MLA 8 Style) as:**
**Madhan Kumar. "Thirumuthukundram in Muvar Thevaaram."** *International Journal of Tamil Language and Literary Studies,* Vol. 3: Special Issue - 3, Vol. 3, January 2021, pp.375-383. DOI: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.056**

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். /I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

# இல்லறமைப்பில் சைவம்

# Saivam in Domestic Life

முனைவர் தி.மல்லிகா, உதவிப்பேராசிரியர், தமிழ் உயராய்வு மையம், மன்னர் திருமலை நாயக்கர் கல்லூரி, மதுரை.
Dr T. Mallika, Assistant Professor, Research Centre of Tamil, Mannar Thirumalai Naicker College, Madurai.
ORCiD: https://orcid.org/0000-0002-2402-0263
DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.057

## Abstract

*All living things in the world want bliss and peace. Pleasure is enjoyed by the subjects of the world. The goal of Tamil life is to leave the world and reach the bejeweled feet of the Lord. People suffer for their sins, the outcome of their pleasures. Developing the right spiritual consciousness and attaining union with the Lord ought to be the prime motto of the family men and women in Saiva sect. To attain the Lordship of the Lord one must follow the code of love. Saivam encompasses all living beings in the world to live in unity and render love to others. It also suggests the way of vegetarianism to get the spiritual elevation.*

**Keywords:** Siva, Love, Pleasure, Bliss, Grace, Knowledge, Virtue, Elixir.

**முன்னுரை**

பண்டைக்காலம் முதல் கி.பி.13ஆம் நூற்றாண்டு வரையில் சைவம் வளர்ந்ததும், பின் சிறிதளவில் மறையத் துவங்கியதும் வரலாற்று ஆசிரியர்களால் குறிப்பதற்குரியவை, இந்தியாவின் மிகப் பழைய நாகரிக நகரங்கள் என்று ஆராய்ச்சியாளரால் கூறப்படும் மொகொஞ்சோதாரோ, ஹரப்பா முதலிய இடங்களில் 600க்கு மேற்பட்ட சிவலிங்கங்கள் கிடைத்துள்ளன. சிந்து வெளியிலும், மற்றும் வட இந்தியாவில் பற்பல இடங்களிலும் கிடைத்துள்ளன. இவை அனைத்தையும் ஒன்றுபடுத்திய சர்ஜான் மார்ஷல் என்ற அறிஞர், சைவசமயம் 'மாக்கல் காலம்' அல்லது அதற்கு முற்பட்ட காலம் முதல், இன்றளவும் உள்ள மிகப் பழமையான சமயம் என்று எடுத்துக் காட்டியுள்ளார். சங்க காலத்திலும் 'ஆலமா; செல்வன்' 'முக்கண்ணன்' என்ற பெயர்களால் அழைக்கப்பட்ட சிவபிரானே சிலப்பதிகாரத்திலும், மணிமேகலையிலும் முதலிடம் பெற்றிருக்கிறார். முதற் பல்லவர் காலத்திலும், கோச்செங்கட் சோழன் ஏறத்தாழ எழுபது சிவன் கோவில்களைக் கட்டினான் என்று வரலாறு கூறுகிறது.

**அல்லல் என்செயும்? அருவினை என்செயும்?**
**தொல்லை வல்வினைத் சொந்தம்தான் என்செயும்?**
**தில்லை மாநகர்ச் சிற்றம் பலவானர்க்(கு)**
**எல்லை இல்லதோர் அடிமை பூண்டேனுக்கே"**

என்று நாவுக்கரசரால் துதிப்பாடல் பெற்ற சிவபெருமானது பெருமையை உலகுக்கு எடுத்துக்காட்டும் மதம்தான் சைவம்.

**அப்பரடிகள் கண்டனம்**

திருநீறணிந்தும் உள்ளத்தில் பல தீய எண்ணங்களை உலவவிடும் வேடதாரிகளை, அப்பா; சுவாமிகள் வன்மையாகக் கண்டிக்கிறார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**விறகில் தீயினன் ; பாலில் படுநெய்போல்**
**மறைய நின்றுளன் ; மாமணிச் சோதியான்**
**உறவுகோல் நட்டு உணர்வு கயிற்றினால்**
**முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே!**

என்றபடி, சிவநேசர்கள் அன்பினால் காணக்கூடிய அருட்பெருஞ்சோதியை அறிவிலிகள்,

**உள்ளத்தே நிற்றியேனும், உயிர்ப்புளே வருதியேனும்**
**கள்ளத்தே நிற்றி அம்மா! எங்ஙனம் காணுமாறே?**

என்று பரிதவிக்கிறார்களே! என்பதற்காக அப்பர் வருந்துகிறார்.

**கங்கை ஆடிலென் ; காவிரி ஆடிலென்**
**கொங்கு தண்கும ரித்துறை ஆடிலென்**
**ஓங்கு மாகடல் ஓதநீர் ஆடிலென்**
**எங்கும் ஈசன் எனாதவர்க் கில்லையே**

கங்கையிலும், காவிரியிலும், கன்னியாகுமரியிலும் மட்டும் தானா ஈசுவரன் இருக்கிறான்? கடவுள் இல்லாத இடமில்லை என்ற உண்மையை உணர்ந்து ஒழுகினால் மோசத்திற்கு இடமேது?

**சாத்திரம் பலபேசும் சழக்கர்காள்!**
**கோத்திரமும் குலமும் கொண்டு என் செய்வீர்?"**

என்று வினவுகிறார்.

**கோலும், புல்லும், கையில் கூர்ச்சமும்**
**தோலும் பூண்டு, துயரம் உற்(று) என்பயன்?**
**நீல மாமயி லாடு துறையனே!**
**நூலும் வேண்டுமோ நுண் உணர்ந் தோர்கட்கே?**

என்று பாடிக் குலங் கோத்திரங்களையும், சாத்திரங்களையும் கொண்டு பெருமை பேசும் சாதித் திமிரைக் கண்டிக்கிறார்.

**திலகவதியார் சிறப்பு**

சைவ மதத்தை வளர்க்கப் பாடுபட்டவர்களில் பல பெண் மணிகளுக்கும் இடமுண்டு. அத்தகைய சைவப் பெண்மணிகளின் திலகமென்று போற்றக்கூடியவர், அக்காலத்து அரசனும், பிறரும் திருந்தும்படி உபதேசங்கள் செய்த திருநாவுக்கரசரின் அன்புத் தமக்கை திலகவதியார் என்றால், அவர் பெருமை எத்தகையது! ஒழுக்கங்களில் சிறந்த வேளாளர் குடும்பத்தில் பிறந்த திலகவதி 'மருள் நீக்கி' என்பாரைத் தம் இளவலாகப் பெற்றிருந்தார். இருவரும் ஒன்றுபட்ட மனத்தின்; உள்ளன்போடு சிவனை வணங்கினர். திலகவதியாரைக் கலிப்பகையார் என்ற வீரருக்கு மணமுடிக்க உறுதி பூண்ட நாளில், அரசன் ஆணைப்படி அவர் போருக்குச் சென்று அங்கு உயிர் துறந்தார்.தந்தையையும், தாயையும் இழந்து பரிதவித்த திலகவதி, கலிப்பகையாரையே கணவனாகக் கருதி வேறு மணாளனை ஏற்கவில்லை. தனது இல்லத்தைச் சிவமயமாக, மாக்கோலம், வாயிற் படிகளுக்குத் திருநீறு குங்குமம் மஞ்சள் இவைகள் இட்டு

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

விளங்கச் செய்து, எந்நேரமும் சிவ பூசையிலேயே ஈடுபட்டிருந்தார். சிவபெருமானுக்குத் தம் கையால் திருப்பணிகள் செய்து வந்தார். 'தம் தம்பியார் புறசமயம் புகுந்ததற்கு மனம் வருந்தித் துயருற்று புறசமயக் குழியிலிருந்து எடுத்தாள வேண்டும் என்று சிவபெருமானிடம் பலமுறையும் விண்ணப்பம் செய்தார். (திருநாவுக்கரசர் – சரவண. ஆறுமுக முதலியார் அண்ணாமலைப்பல்கலைக்கழகம் – பதிப்பு 1970, பக் – 49)

இவ்வமயத்தில் அவர் தம்பியார் 'தருமசேனர்' என்ற பட்டத்துடன் சமணசயத்தைத் தழுவி, சைவத்தைப் புறக்கணிக்க ஆரம்பித்தார். இதனால் மனவேதனை அடைந்த திலகவதியார் சிவபெருமானிடம் "இறைவனே! 'சிவமே அன்பு, அன்பே சிவம், இரண்டும் ஒன்றே, வேறல்ல', என்றெல்லாம் சிவநேசர்கள் முழங்கிக் கொண்டிருக்க, இத்தகைய மதத்தில் தேடுகிறான்? ஐயனே! சைவக் குடும்பத்தில் பிறந்தும் அன்னிய மதத்தை நாடும் மனத்தை அவனுக்கு ஏன் அளித்தாய்? அவன் திருந்தும் நாள் எந்நாளோ? என்ற எண்ணி எண்ணி மனம் புழுங்கினார். அவர் வேண்டுகோளுக்குச் செவிகொடுத்த அம்பலத்தரசன் தருமசேனருக்குச் சூலை நோயை உண்டாக்கவும், அதை எவ்வழியிலும், தீர்க்க இயலாமல் தவக்கொழுந்தாகிய தன் தமக்கையின் திருவடியை நாடினார். அம்மையாரின் கையிலிருந்து திருநீறு வாங்கி அணிந்து, ஈசனை வணங்கி ஒரு பதிகம் பாடினார்.

இறைவன் அருளைப் பெற்றார். நோயும், நீங்கிற்று, தேவாரம் பாடினார், திருநாவுக்கரசராய் விளங்கினார். "நீறணித்தார் அகத்திருளும், நிறக்கங்குற் புறத்திருளும், மாறவரும் திருப்பள்ளி எழுச்சியினில்" (திருநாவுக்கரசர் – சரவண. ஆறுமுக முதலியார் அண்ணாமலைப்பல்கலைக்கழகம் – பதிப்பு 1970, பக் – 48) ஆறணிந்த ஈசர் கோயிலினுள் அவரைக் கொண்டு புகுந்தார் திலகவதியார்.

**காரைக்காலம்மையார் பெருமை**

சைவ சமயத்தை வளர்த்த அறுபத்து நான்கு நாயன்மார்களில் ஒருவராகக் காரைக்கால் அம்மையார் விளங்குகிறார். கணவனே கைகூப்பித் தொழும் அளவுக்கு அவர் சிறப்பு வாய்ந்தவர். சிறந்த செல்வக் குடும்பத்தில் பிறந்த அவர் இளவயதிலேயே சிவ பூசையில் ஈடுபட்டுச் சிவனடியார்களுக்கு அமுது படைப்பதில் ஆர்வங் கொண்டிருந்தார். இல்லற வாழ்வில் ஈடுபட்ட பிறகும் தன் இல்லத்தைச் சிவப் பொலிவு தோற்றும்படி செய்வித்துப் பசித்துவரும் சிவனடியார்களை உபசரித்து, உணவும் உடையும் அளித்து மகிழ்ந்து, சைவ சமயத்தின் கொழுந்தாக விளங்கினார்.

பின்பு இறைவன் அருளால் தன் கணவனுக்குக் கனிகள் வரவழைத்துக் தந்ததும், அதைக்கண்டு கணவன் அவரைத் தெய்வமாகத் தொழுது வெளியேறியதும் அனைவரும் அறிந்த ஒன்றாம். பெருஞ் செல்வக்குடியில் பிறந்திருந்தும், செல்வத்துள் செல்வமாக வளர்ந்திருந்தும் உலகப் பொருள்களையோ, உலக இன்பங்களையோ அவர் காதலிக்கவில்லை. சிவனை அடைய வீட்டைத் துறந்து துறவறம் பூண வேண்டும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

என்பதில்லை. இல்லறத்திலிருந்தே சிவனருளை அடையலாம் என்பதைத் தன் கணவனுக்குக் கனிகளை கடவுள் அருளால் வரவழைத்துத் தந்து நிறுவினார்.

**Paramatattan refusing to believe her, asked here to bring another fruit if the previous fruit was given by Lord Siva. Punitavatiyar going inside again appealed to Lord Siva thus: "If you do not bless me with another fruits, what I have told my husband just not becomes false" Karaikkal Ammaiyar (Dr.S.Sasivalli Life – Sketch, Page No.5)**

கடவுளரும் கற்புடைய மங்கையரின் ஆணைக்குக் காத்திருப்பார் என்பது இத்தகைய இல்லத்தரசிகளின் வாழ்விலிருந்து புலப்படும் உண்மையாகும். மேலும் இவர் சிறந்த கல்வியறிவு படைத்தவர். சிறு வயதிலிருந்தே கல்வி கேள்விகளில் சிறந்து இருந்ததினாலும், தமது பக்தியினாலும் திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள், இரட்டை மணிமாலை, அற்புதத் திருவந்தாதி முதலியவைகளை இயற்றியுள்ளார்.

**காலையே போன்றிலங்கும் மேனி ; கரும்பகலின்**
**வேலையே போன்றிலங்கும் வெண்ணீறு – மாலையின்**
**தாங்(கு) உருவே போலும் சடைக்கற்றை ; மற்றவற்கு**
**வீங்கிருளே போலும் மிடறு (அற்.புத. திரு. பாடல் எண் - 65)**

என்ற அம்மையாரின் கவிதை நமக்கு அருள் சுமந்த திருமேனியையும், அதன் தூய்மையையும் காட்டுகிறதல்லவா?

**அறிவானும் தானே, அறிவிப்பான் தானே,**
**அறிவாய் அறிகின்றான் தானே – அறிகின்ற**
**மெய்ப்பொருளும் தானே விரிசுடர் ஆகாயம்**
**அப்பொருளும் தானே அவன் (அற்.புத. திரு. பாடல் எண்.20)**

என்று அம்மையார் கூறிய இறைவனை, 'ஒரு நாமம் ஒரு உருவம் ஒன்றுமிலார்க்கு, ஆயிரம் திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ" என்று பாடப்பெற்ற அருட்சோதியின் அருளைப் போற்றும் சைவ சமயத்தைப் பரப்பப் பற்பல சைவ மடங்களும் சங்கங்களும் தோன்றியுள்ளன.

**சைவ மங்கையர் கடன்**

எந்தச் செயலைச் செய்து முடிப்பதென்றாலும், பெண்கள் துணையை நாடினால் அது எளிதில் முடியும். ஆதலால் இந்தச் சைவசமயக் கோட்பாடுகளை நாம் இல்லற வாழ்க்கையிலேயே கையாளவேண்டும். நமக்குப் பிறக்கும் குழந்தைகளுக்குச் சிறந்த சைவப் பெயர்களான சிவநெறிச் செல்வன், தேவாரச் செல்வன், நெடுமாறன், கண்ணப்பன், கழற்சிங்கன் போன்ற நாயனார் பெயர்களையும், திருமுறைகளில் வரும் அரும் பெயர்களையும் வைக்கவேண்டும். இவ்வாறே பெண் குழந்தைகளுக்குச் சிவ அரசி, மங்கையர்கரசி, திலகவதி, புனிதவதி ஆகிய பெயர்களை வைக்கலாம்.

**சைவர் இல்லறமைப்பு**

தெருவில் போகும்போது பார்க்கிறவர்களுக்கு 'இது சைவர் வீடு' என்று தெரியும்படி மாக்கோலம், திருநீறு, மஞ்சள், குங்குமம் இட்டு விளங்கச் செய்யவேண்டும். திங்கள், வெள்ளி, கிருத்திகை, திருவாதிரை முதலிய நாட்களில் மாவிலை கட்டவேண்டும். செம்மண் இடுதலும் நலம், மாவிலை தூய்மை செய்யும், செம்மண் பூச்சிகள் சேராது காக்கும். இவற்றை எல்லாம்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

மறந்துவிட்ட காரணத்தினால் இன்று நாம் எல்லோரும் வீட்டிற்குள் கரோனா தீ நுண்கிருமியின் காரணமாக முடங்கி கிடக்கின்றோம்.

வீட்டிற்குள் அன்பையும், அறத்தையும், அறிவையும் உணர்த்தும் நல்ல படங்கள் மாட்டப்பட வேண்டும். கீழ்த்தர உணர்வை உண்டாக்கும் சினிமாப் படங்கள் கூடா. பூசை அறை இருத்தல் நன்று. வழிபாட்டுக்கு என்று ஒரு பூசை மாடமேனும் வேண்டும். இயலாதாயின் சுவரில் படங்களை மாட்டித் திரையிட்டு வைத்துக்கொள்ள வேண்டும். பிள்ளையார் பூசை அன்றாடம் செய்தல் வேண்டும். அதற்காக வீட்டில் இரண்டொரு பூச்செடிகளை வளர்க்கலாம். வீட்டை அடிக்கடி பசுச் சாணத்தால் மெழுகவும், சாப்பிட்டதும் அந்த இடத்தைச் சாணமிட்டுத் துடைக்கவும் வேண்டும். வெளியிலிருந்து வீட்டுக்குள் வந்தால் கால் கழுவாமல் உள்ளே போகக்கூடாது. அடுப்பங்கரையை அன்றாடம் சாணமிட்டு மெழுகிக் கோலமும் இடவேண்டும். நம் நெற்றியில் குளித்தவுடன் திரு நீறணியவேண்டும். இவற்றிற்கும் சைவத்திற்கும் என்ன தொடர்பு என்று எண்ணலாகாது. சைவம் பரிசுத்தமானது. சைவர் வீடுகளும் தூய்மையாகத் துலங்க வேண்டும். ஆதலால் இக்கோட்பாடுகளை யெல்லாம் நாம் மேற்கொண்டு உலகின் மிகப் பழமையான சைவமத்ததைக் கண்ணின் கருமணி போற்காத்து வளர்க்க வேண்டும் என்பது இல்லற அமைப்பின் மாண்புகளாகும்.

**சமையல் அறையில் சைவம்**

சமையல் அறைதான் உண்மையாகவே சமயத்தை வளர்க்கின்றது. சமையல் அறைதான் நாயன்மார் பலருக்கும் பெருமையைத் தேடித்தந்தது. இல்லத்தில் வாழ்வரசியாய் இருக்கும் பெண்மணியின் உயிர்நாடியான இடம் சமையலறைதான். தன் கணவனையும் தன் மக்களையும் உற்றார் உறவினரையும் உணவால் மகிழ்விக்கும் இடம் சமையலறையே யன்றோ? **“உண்டி முதற்றே உணவின் பிண்டம்”** என்பது நம் முன்னோர் வாக்கு.

சமையல் தொழில் பெண்களுக்கே சிறப்பாக உரியதாயினும், அறிவுடைய ஆடவரும் அதில் அடிக்கடி பங்கு கொள்வர். ஓய்வு நாட்களில் பல குடும்பங்களில் சமையறையில் கணவர் இருந்து மனைவிக்கு வேண்டும் உதவிகள் செய்வர். கணவர் காய் நறுக்குவார், மகன் வெங்காயம் அரிவான், மகள் தேங்காய் அரைப்பாள், எல்லோரும் மகிழ்ச்சியாகப் பேசிக்கொண்டே சமையல் வேலைகளைச் செய்வர். அன்று எல்லோர் முகங்களிலும் மகிழ்ச்சி துள்ளும். அன்பால் அனைவரும் கட்டுண்டு தத்தம் தொண்டுகளைச் செய்வர். இத்தகைய செயல்கள் எல்லாம் எவ்வகைக் குடும்பங்களில் அமைகின்றதோ அவை சைவக் குடும்பங்களேயாகும். ‘எங்கெங்லாம் அன்பு இருக்கின்றதோ, அங்கெல்லாம் சிவம் இருக்கின்றது’. எனவே, அன்பை வசப்படுத்தும் சமையலை சிவ நெறியை வலுப்படுத்தும் கருவறையாகும்.

**நாயன்மாரும் சமையலறையும்**

மழை கொட்டிக் கொண்டிருந்த நள்ளிரவில் சிவபெருமான் முதிய சிவனடியாராக இளையான் குடிமாறர் இல்லத்திற்கு வந்தார். வீட்டில் அரிசி இல்லை, நெல்லும் இல்லை. உடனே நாயனார் அன்று வயலில் விதைத்த நெல் மணிகளைப் பொறுக்க வயலுக்கு ஓடினார். அம்மையார் கொல்லையில் தாமாக முளைத்திருந்த கீரையைப் பறித்தார். விறகு இல்லாததால் வீட்டின் கூரையில் ஒரு பகுதியைப் பிரித்து, அடுப்பை எரிக்கத் தொடங்கினார். நாயனார் கொண்டு வந்திருந்த நெல்லைக் குற்றிச் சோறாக்கினார், கறி அமுது படைத்தார். “ஒப்பில்லா

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

அடியாரை உண்ண அழைக்கலாம்" (பக் – 63) அடியாரை உவப்போடு உண்பித்தார். இச்சமையலறைத் தொண்டினால்தான் சிவபெருமான் உள்ளம் நெகிழ்ந்தது, வந்த முதியவர் மாதொரு பாகனாகக் காட்சியளித்தார். இங்ஙனம் சமையறைச் சைவமே இளையான்குடி மாறரை வாழ்வித்தது.

"வாளால் மகவரிந்து ஊட்ட வல்வேன் அல்லேன்" என்று பட்டினத்து அடிகள் வியந்து பாராட்டும் அளவிற்குச் சிறுத் தொண்டரை உயர்த்தியது சமையறைச் சைவமேயாகும். தாம் பெற்ற ஒரே மைந்தனை அரிந்து கறி சமைக்க அம்மையார் உடன்பெற்றார். தம் மைந்தனைப் பிடித்துக் கொண்டார். தந்தையார் மைந்தனை அரிந்தார். அம்மையாரும் பணிப்பெண்ணும் இருந்து சமைத்தனர். அவர் தம் சமையலறையின் மகத்துவத்தால்தான் சிறுத்தொண்ட நம்பி செயற்கரிய செயலைச் செய்த பெரியோராகப் போற்றப்பட்டார். 'பிள்ளைக்கறி சமைக்க முடியாது' என்று வெண்காட்டு நங்கை வெறுப்புடன் கூறியிருந்தால், நாயினார் கதி யாதாகியிருக்கும்! சற்றே எண்ணிப் பார்க்கவேண்டும். அவர் உத்தராபதியார் சாபத்திற்கு ஆளாகியிருத்தல் நேரிடும். அங்ஙனம் ஆகாமல் அவரை வாழ்வித்தது சமையலறைச் சைவம் தான்.

**விருந்தோம்பலும் சைவமும்**

முத்தன்ன வெண்ணகையீர்! சைவ ஒழுக்கத்தில் 'விருந்தோம்பல்' ஓர் இன்றியமையாத அங்கமாகக் கருதப்பட்டது. சைவராயினார் பிறவிப்பயன் எய்த வேண்டுமானால் அவர்கள் இரண்டு செயல்களை மேற்கொள்ள வேண்டும். முதலாவது, மதிசூடும் அண்ணலார் அடியார் தமை அமுது செய்வித்தல் கண்ணினால் அவர் நல்விழாப் பொலிவு காண்டல் இரண்டாவதாகத்தான் கருதப்பட்டது. இவ்வாறு சேக்கிழார் பெருமான் அறுதியிட்டுக் கூறுகிறார். இதற்கு அவர் மூலமாகக் கொண்டது. **"ஒட்டிட்ட பண்பின் உருத்திரப் பல்கணத்தார்க்கு அட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்"** சேக்கிழார் அருளிய திருத்தொண்டர் புராணம் என்னும் பெரியபுராணம் – புலவர் எஸ்.சுந்தர் எம்.ஏ., - சகுந்தலை நிலையம், முதல் பதிப்பு, டிசம்பர் – 2001, பக் – 63. என்னும் சம்பந்தரது திருமயிலைத் திருப்பாசுரமாகும்.

**விருந்தோம்பிய தொண்டர்கள்**

வண்ணக்கிளி மொழியீர்! சைவ நங்கையர்களாகிய நாம் படித்து அறிந்து கடைப்பிடிக்க வேண்டிய பெரு நூல் சேக்கிழாரது பெரியபுராணம் என்பதை உளங்கொளல் வேண்டும். கிடைத்தற்கரிய கருவூலம் என நாம் அதனை மதிக்க வேண்டும். அத்திரு நூலில் பல திருத்தொண்டர்களது செயற்கருஞ் செயல்கள் பேசப்பட்டுள்ளன. தொண்டர்கள் சிவப்பேறு பெற்ற விதங்கள் பலதிறப்பட்டனவாகும். அவற்றுள், சிவனடியார்களைப் பேணி, அவர்களுக்கு வேண்டுவன நல்கி, அமுது செய்வித்து, அதனால் முத்தி பெற்ற தொண்டர்கள் ஆண்களேயாயினும், அடியவர்களை அமுது செய்வித்தலில் இவர்களுக்கு உறுதுணையாக இருந்தவர்கள் இவர்களுடைய மனைவிமார்களே ஆவார்கள். இளையான் குடிமாற நாயனார் மனைவியாரும், திருவெண்காட்டு நங்கையும், இயற்பகை நாயனார் மனைவியாரும் இதற்குச் சிறந்த சான்றுகளாவார்கள்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**சேக்கிழார் கூறும் விருந்தோம்பல் முறை**

விருந்தாக வந்த சிவனடியார்களை எவ்வாறு உபசரிக்க வேண்டுமென்பதைச் சேக்கிழார் தமது நூலின் தொடக்கப் பகுதியிலேயே வரையறுத்துக் கூறிகிறார். இளையான் குடிமாற நாயனார் அடியவர்களை உபசரித்த திறத்தைச் சேக்கிழார் அழகுற எழுதிக் காட்டியுள்ளார். “இளையான்தன் குடிமாறனார்க்கும் அடியேன்” (59) ஆடும் கூத்தனின் திருவடிகளைச் சூடும் பண்பை உடையவர்; பயிர்த் தொழில் செய்பவர், சிவனடியார்களை முன் சென்று வரவேற்று கரங்களால் தொழுது, இனிமையான சொற்களைக் கூறி தன் மனைக்குள் அழைத்து, அவர்களின் திருவடிகளை நீரால் கழுவி, இருக்கையில் அமரச் செய்து, வழிபாடு நடத்தி, நால்வகை உணவுகளை ஆறு சுவையோடு அவர்கள் உண்ணுமாறு நாள்தோறும் செய்யும் தன்மையினை உடையவர்.

**கொண்டுவந்து மனைப்புகுந்து**
**குலாவுபாதம் விளக்கியே**
**மண்டு காதலின் ஆதனத்திடை**
**வைத்தருச்சனை செய்தபின்**
**உண்டிநாலு விதத்திலாறு**
**சுவைத்திறத்தினில் ஒப்பிலா**
**அண்டர்நாயகர் தொண்டர் இச்சையின்**
**அமுது செய்ய அளித்துளார்”**

பெரிய புராணம் நன்கு கற்றறிந்த சான்றோர் கவியாதலால் தூய பளிங்கு நீரைப்போல் தெளிந்திருக்கிறது இப்பாடல்.

**முடிவுரை**

மக்கள் வாழப் பிறந்தவர்கள், நாம் வையகத்தில் வாழ்வாங்கு வாழ்ந்து பேரும், புகழும் பெறவேண்டும். இவற்றை மனதிலே வைத்துக்கொண்டு இல்லறம் என்னும் நல்லறத்திலும் அன்பு நெறியாகிய சிவ நெறியை நமது செயலால் தோற்றுவிக்கக் கடமைப் பட்டிருக்கிறோம் என்பதை மறந்து விடலாகாது.

**வையகத்து வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்**
**தெய்வத்துள் வைக்கப் படும்”**

என்னும் திருவள்ளுவர் திருவாக்கு. நம் உள்ளத்திலே நிலைபெற்று, நம்மை நல்வழிப்படுத்தி சிவனடியார்களை போன்றும் அவர்களது மனைவியார்களை போன்றும் அன்பு என்னும் இன்பக் கடலினை அடைய முற்பட வேண்டும்.

**துணை நின்ற நூல்கள்**

[1] தேவாரத் திருக்காட்சிகள் - வ.த. இராம. சுப்பிரமணியம் மீனாட்சி புத்தக நிலையம், மதுரை பதிப்பு – 2007.
[2] தமிழ் இலக்கியங்களில் திருக்கோயில் வழிபாடுகளும் - பன்னாட்டுக் கருத்தரங்கம் ஆய்வுநூல், வேளாளர் மகளிர் கல்லூரி, ஈரோடு.
[3] சமயங்களின் தமிழ்த்தொண்டு – மே. வேங்கடேசன் நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி.) லிட் பதிப்பு – 1999.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

[4] கடவுளைக் காணலாம் - புலவர் நக்கீரன் - வள்ளி பதிப்பகம், மன்னார்குடி.

[5] திருநாவுக்கரசரும், மாணிக்கவாசகரும். ஜி. சுப்பிரமணியபிள்ளை மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், முதற்பதிப்பு – ஆகஸ்டு, 1986.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

மல்லிகா. **“இல்லறமைப்பில் சைவம்.”** *தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 3, சிற.இதழ் 3, தொகுதி 3, ஜனவரி 2021, பக்.384-391. டிஒஐ: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.057**

**Cite this Article in English (MLA 8 Style) as:**
Mallika**. “Saivam in Domestic Life.”** *International Journal of Tamil Language and Literary Studies*, Vol. 3: Special Issue - 3, Vol. 3, January 2021, pp. 384-391. DOI: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.057**

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். /I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

# பிரகாமியம் வழி சிவனை அடைந்த மூலன்
# Transmigration of Soul that Unified Mulan with Shiva

அ.முருகலெட்சுமி, தமிழ்த்துறை உதவிப்பேராசிரியர், ஸ்ரீ.எஸ்.இராமசாமி நாயுடு ஞாபகார்த்தக் கல்லூர், சாத்தூர்.
**A.Murugalakshmi, Sri.S.Ramasamy naidu Memorial College, Sattur.**
ORCiD: https://orcid.org/0000-0002-3094-9626
**DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.058**

## Abstract

*The Lord is the only one who can be the absolute first companion to all living beings that can be born on earth. 'No atom can move without him' is an absolutely true statement and fact. More than any other living being, human beings live this worldly life with the sole aim of attaining each coming Lord. The Siddhas seek to attain the Lord in many ways. One of them is learning the Siddha practice. That is, to learn the Attama Siddhis and surrender his soul to the Lord. This article gives a detailed explanation of its methods and how Mulan reached the Lord through Tirumular's transmigration of the soul.*

**Keywords:** Siddar, Siddhigal, Soul, Piragamiyam, Transmigration, Soul

### முன்னுரை

பூவுலகில் பிறப்பெடுக்கக் கூடிய அனைத்து உயிரினங்களுக்கும் முழுமுதற்துணையாக இருக்கக்கூடியது இறைவன் ஒருவனே. அவனின்றி ஓர் அணுவும் அசையாது என்பது முற்றிலும் உண்மையானவாக்கு. மற்ற உயிரினங்களைக் காட்டிலும் மனிதர்கள் ஒவ்வொருவரும் இறைவனை அடைதல் என்ற ஒன்றை மட்டுமே நோக்கமாகக் கொண்டு இவ்வுலகவாழ்வை வாழ்கின்றனர். சித்தர்கள் பலமுறைகளில் இறைவனை அடைய முயல்கின்றனர். அதில் ஒரு முறைதான் சித்துகளைக் கற்றல். அதாவது அட்டமாசித்திகளைக் கற்று தன் ஆன்மாவை இறைவனிடம் ஒப்படைத்தல். இதன்வழி முறைகள் குறித்தும் திருமூலர் பிரகாமியம் வழி இறைவனை அடைந்த விதம் குறித்தும் விரிவானதொரு விளக்கத்தை தரும்படி அமைந்துள்ளது இக்கட்டுரை.

### சித்தர்கள் குறித்த இலக்கிய செய்தி

சித்தர்கள் மனதின் மீதும் மரணத்தின் மீதும் முழுஆதிக்கம் பெற்றவர்கள். சாகாவரம் பெற்றவர்கள். சிலப்பதிகாரத்தில் சித்தன் என்ற சொல்லுக்கு கிருதகிருத்தியன், சஞ்சிதம், பிராரப்தம், கர்மம், ஆகாம்யகர்மம், நிகாமியகர்மம் என்ற கர்மப்பதிவுகளில் இருந்து தங்கள் உடல், மனம் ஆன்மாவைக் கழுவித்தூய்மை அடைந்தவர்கள் கடமைகளைச் செய்வனே செய்து முடித்தவன் என்று பொருள்படும் படிவிளக்கம் அளிக்கப்பட்டுள்ளது. "கடவுளைக் காணமுயல்பவர்கள் பக்தர்கள் கடவுளைக்கண்டு தெளிந்தவர்கள்சி த்தர்கள்" (தமிழ்க் கலைக்களஞ்சியம் (தெ.பொ.மீ) நந்தி, அகத்தியர், மூலர், புண்ணாக்கீசர், நற்றவத்துப்புலத்தியரும், பூனைக்கண்ணர், நந்தியடைக்காடர், போகர், புலிக்கையீசர், கருவூரார், கொங்கணவர், காலாஞ்சி, சிந்தி, எழுகண்ணர், அகப்பேயர், பாம்பாட்டிசித்தர்,


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

தேரையர், குதம்பையரும், சட்டைநாதர், செந்தமிழ்சேர்சித்தர் என்ற பதினெண்சித்தர்கள் சிவபெருமானிடம் நேரிடையாக ஸ்பரிச தீட்சைவாங்கி பதினெட்டுப்பேரும் சிறப்புப் பெற்றவர்கள் பதினெண்சித்தர்கள்| என்பது பழமையான காலத்திலிருந்தே வழங்கப்பட்டு வருகிறது. ஆனால் இவைதவிர நவநாதசித்தர்கள், ரசசித்தர்கள், மகேஸ்வரசித்தர்கள், சங்கதசித்தர்கள் என்று பலவகையான சித்தர்கள் இருந்திருக்கின்றனர். அனைத்து சித்துகளையும் கற்றுத் தெளிந்தவன் தான் சித்தன் என்ற பெயர் பெறுகிறான். பித்தந் தெளிந்தவன் பக்தன் சித்தந் தெளிந்தவன் சித்தன் மனம், சித்தம், புத்தி, அகங்காரம் என்ற நான்கில் சித்தம் தெளிந்தால் மற்ற மூன்றும் தானே அடங்கி சித்தனாகலாம் என்பது நியதி இவற்றில் முதன்மையானவர் திருமூலர்.

**திருமூலர்**

சேக்கிழார் சுவாமிகளால் புகழப்பட்ட நாயன்மார்களில் ஒருவர் திருமூலர். பதினென்சித்தர்களில் ஒருவராகவும் திகழப்படுகிறார். தமிழக சித்தர்களில் அகத்தியருக்கு அடுத்து தலைசிறந்தவராகக் கருதப்படுகிறார். அணிமா முதலிய எண்வகை சித்திகளும் கைவரப் பெற்ற சுந்தரநாதர் என்ற இயற்பெயர் கொண்ட இவர் சிறந்த ஞானியாகவும் விளங்குகிறார் என்று நம்பியாண்டார்நம்பிகள் திருத்தொண்டர் திருவந்தாதியில் கூறியுள்ளார்.

திருமூரின்திருமந்திரம்:

திருமூலர் இயற்றிய மூவாயிரம் பாடல்கள் பன்னிரு திருமுறைகளில் பத்தாம் திருமுறையாக திருமந்திரம் என்ற பெயரில் அமைந்துள்ளது. இந்நூல் கலிவிருத்தம் என்னும் யாப்பினால் இயற்றப்பட்டுள்ளது. இதில் ஒன்பது தந்திரங்கள் இடம்பெற்றுள்ளது.

**மூலன் உரைசெய்த முப்பது உபதேசம்**
**மூலன் உரை செய்த முன்னூறுமந்திரம்**
**மூலன் உரை செய்த மூவாயிரம்தமிழ்**
**மூலன் உரை செய்த மூன்றும்ஒன்றாமே (திருமந்திரம் -3046)**

என்று கூறியுள்ளார். அதாவது உபதேசம் 30, மந்திரம் 300, தமிழ் 3000 என்ற நூல்களைத் தாம் இயற்றிதாகவும் இவை மூன்றும் ஒரு தன்மை உடையவை என்றும் விளக்குகிறார்.

**அட்டமா சித்திகள்**

திருமூலரின் திருமந்திரத்தில் இடம்பெற்றுள்ள மூன்றாம் தந்திரத்தில் அட்டாங்க யோகம் மற்றும் அட்டமாசித்திகள் குறித்தகருத்துகள் இடம்பெற்றுள்ளன. சுருங்குதல், விரிதல், பெருத்துக்கனமாதல், இலோசதல், வேண்டியதைப்பெறுதல், விரும்பியதைமேற்கொள்ளல், வசியமாக்குதல் வேற்றுருக்கொள்ளுதல் என்ற எண்வகை சாதனைகளை செய்து இறைவனை அடையப் பெறுவது தான் திருமூலரின் திண்ணமாக இருந்தது.

**அணிமாதி சித்திகள் ஆனவை கூறல்**
**அணுவில் அணுவின் பெருமையில் நேர்மை**
**இணுகாத வேகார் பரகாய மேவல்**
**அணுவத்தனை ஒக்கும் தானால் (திருமந்திரம் - 668)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com


அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராப்தி, வசித்துவம், ஈசத்துவம், பிரகாமியம் என்ற எட்டும் எண்வகை சித்திகளாகதன் மூன்றாம் தந்திரத்தில் மூலர் உரைக்கிறார். இவற்றில் அணிமா, மகிமா, இலகிமா ஆகிய மூன்றும் உடலால் எய்தும் சித்திகள். கரிமா, ப்ராபதி, பிரகாம்யம், ஈசத்துவம், வசித்துவம் ஆகிய ஐந்தும் மனதால் எய்தும் சித்திகள்.

**உடலால்எய்தும்சித்திகள்**

அணிமா என்னும் சித்தியால் அணுவைப் போல சிறியதாக தேகத்தை ஆக்கிக்கொள்ள இயலும். கம்பராமாயணத்தில் அனுமன் சிம்ஹிகி எனும் அரக்கியின் வாயினுள் புகுந்து வெளிப்பட்டதை அணிமா சக்திக்கு உதாரணமாகக் கூறலாம். அணிமா என்னும் இந்த ஒரு சித்தியே ஏறத்தாழ எல்லா சித்திகளையும் பெற வைத்துவிடும்.

மகிமா என்னும் சித்தி உண்மைப்பொருளான உயர்வான ஞானத்தை உபதேசித்த அருட்சக்தியுடன் தற்பொருள் ஆகிய சிவத்துவம் சேர ஓராண்டில் கைவரப்பெறும். அண்டமாக விரிந்து கொள்ளும் தன்மை கொண்டது. கண்ணபரமாத்மா விஸ்வரூப தரிசனம் எடுத்து மண்ணுக்கும் விண்ணுக்குமாக நின்றது இந்த மகிமாஆற்றலால் தான். இதனை,

**அடிமூன்றில் இவ்வுலகம் அன்றளந்தாய் போலும்**
**அடிமூன்றிரந் தவனி கொண்டாய் படிநின்ற (இரண்டாம்திருவந்தாதி -5)**

பாடல் வரிகளால் அறியலாம். வாமன அவதாரம் எடுத்து உலகை அளந்த உருவத்தை மகிமா சக்திக்கு எடுத்துக்காட்டாகும். பேருருஎடுக்கும் பேராற்றல் மகிமா சித்தியால் கைகூடும்

பராசக்தியின் அருளால் சாகின்ற காலங்கள் தன்வழி நின்றிடின் கழிந்தோடுகின்ற காலங்கள் சென்றுமறைய தவயோகம் செய்தபடி இருந்தால் ஐந்தாண்டில் மிகப்பெரும் சித்தியான இலகியமா கைவரப்பெறும். காற்றைப் போல இலேசாகும் சக்தி இலகுமா என்பதை இலகியா சித்தியை பெறுபவர்கள் நீர்மீது நடப்பவர்களாகவும், முள்மீது நிற்பவர்களாகவும் ஆகாயத்தில் உலாபவர்களாகவும் வல்லமை பெறுகிறார்கள்.

**ஆகின்ற அத்தனிநாயகி தன்னுடன்**
**போகின்ற தத்துவம் எங்கும் புகலதாய்ச்**
**சாகின்ற காலங்கள் தன்வழி நின்றிடின்**
**மாய்கின்ற ஐயாண்டில்மா இலகுவாகுமே ( திருமந்திரம் - 674)**

**மனதால் எய்தும் சித்திகள்**

புருவ நடுவில் பிராணன் பொருந்தியிருக்கத் தெரிகின்ற ஒளிச்சுடரைக் காணுகின்ற பக்குவம் அடைந்தவுடன் அசைக்கமுடியாத கனமான உடல்பெறும் கரிமா சக்தி கைவரக்கூடும் இதற்கு என்று காலவரையறை இல்லை. கரிமா சக்தியை அடைந்தவர் கற்பாறை போல தரையோடு தரையாக படுத்துக் கொண்டு புயல், இடி, பூகம்பம் வந்தால் கூட அசையாதிருப்பர்.

அகக்காட்சி கண்டநிலையிலேயே ஓராண்டு முயற்சி செய்தால் அணிமா, இலகிமா, மகிமா சித்திகள் கைவரும் அதன்பிறகு ஓர் ஆண்டுக்காலம் முயன்றால் அடையப்பெறுவது பிராப்தி மண்ணில் இருந்து கொண்டே விண்ணைத்தொடுகிற வித்தையாகும் இந்த பிராப்தி சித்தி.

உண்மையான ஞானமாக உள்ளத்தில் உண்டான செல்வம் எது என்றால் வசித்துவம்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

என்கிற சித்தியே. உயர் குலத்துக்கெல்லாம் தான் விரும்பியபடி பரம்பொருளைப் போன்ற மேலான ஒரு நிலையைத் தருகிற அரியபெரிய செல்வமாகும். இதன் முக்கிய குணம் எல்லாவற்றையும் தன்பால் ஈர்த்து வசியப்படுத்தும்.

நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்னும் ஐந்து பூதங்களிலும் நின்று நிலைத்திருக்கும் சதாசிவமாகிய பரம்பபொருள்துணையால், காண்டல், கேட்டல், உண்ணல், உணர்தல், நுகர்தல் என்னும் ஐம்புலன்களின் இச்சையும் அடங்க அடக்கித், தவயோகத்தில் அணிமா முதலான ஆறு சித்திகளும் பெற்ற நிலையில், மேலும் ஓர் ஆண்டு உள்ளம் ஒன்றத் தவயோகம் செய்தால், உலகைப் படைத்த பழம்பெரும் மூலப்பொருளான பரமன் தத்துவநிலை என்பதாகும். ஈசன்தத்துவம் - ஈசத்துவம். ஆக்குதல், அழித்தல், அருளல் முதலான பரம்பொருள் ஆற்றலைத் தருகின்ற சித்தியாகும்.

**பிரகாமியம்**

கூடுவிட்டுக் கூடு பாய்தல் தன்னுடைய உடம்பில் உறையும் உயிரையும், ஆத்மாவையும் எடுத்து வேறொரு உடம்பில் மாற்றி அமைக்கக்கூடிய தன்மைஉடையது என்பதை

ஆனவிளக் கொளி ஆவது அறிகிலார்
மூலவிளக் கொளி முன்னே உடையவர்
கானவிளக் கொளி கண்டு கொள்வார்கட்கு
மேலைவிளக் கொளி வீடுஎளிதா நின்றே (திருமந்திரம் - 683)

பாடல் மூலம் அறியலாம். திருமூலர் இந்த சித்தியை கைவரப்பெற்றவர்.

**பிரகாமியம் வழி சிவனை அடைந்த மூலன்**

திருமூலர் திருக்கயிலாய மலையில் இருந்து புறப்பட்டுத் தென்னாடு வரும் வழியில் பசுமாடுகள் தவிப்பதைப் பார்த்தார். அங்கே இடையன் இறந்து கிடந்தான். திருமூலர் பிரகாமியம் என்னும் சித்து மூலம் இடையனின் உடலில் புகுந்தார். சுந்தரரான இவர் இடையனின் உடலில் புகுந்ததால் மூலன் என்று அவன் பெயரைத் தாங்கிக்கொண்டான். தன் உடலை மறைத்து வைத்துவிட்டு பசுக்களை இல்லத்திற்கு அழைத்துச் சென்றார். திரும்பி வந்து பார்க்கும் பொழுது உடல் அந்த இடத்தில் இல்லை. மூலன் இது இறைவனின் திருவருள் என்று எண்ணி திருவாவடுதுறைத் திருத்தலம் அடைந்து, அங்குஎழுந்தருளியுள்ள செம்பொன்தியாகேசரை வணங்கி, கோவிலின் மேற்குப்பக்கம் உள்ள அரசமரத்தடியில் அமர்ந்து யோகநிட்டை புரிந்து ஆண்டுக்கொருபாடல் என்று மூவாயிரம் ஆண்டுகாலம் வாழ்ந்து மூவாயிரம் தமிழ்ப்பாடல்களைப் பாடி மீண்டும் திருக்கயிலாயம் சென்று இறைவனை அடைந்தார்.

**அட்டமா சித்திகளைக் கற்ற கார்த்திகை பெண்டிர்**

முருகனுக்கு வளர்ப்புத் தாயாக திகழ்ந்த கார்த்திகைப் பெண்கள் அட்டமா சித்திகளை உபதேசிக்கக் கேட்டனர். சிவபெருமான் அவர்களுக்கு கற்றுக் கொடுக்கும்பொழுது அவர்கள் மிகவும் அலட்சியமாக இருந்தனர். அதனை அறிந்த சிவபெருமான் கடுங்கோபம் கொண்டு நீவிர் அறுவரும் பட்ட மங்கை என்னும் தலத்தில் உள்ள ஆலமரத்தின் கீழ் கற்பாறைகளாகக்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

கிடக்ககடவீர் என்று சாபமிட்டார். இறைவனின் சாபம் பெற்ற கார்த்திகைப் பெண்டிர் அறுவரும் மனத்துயரம் மிகுந்தவர்களாய் எம்பெருமானிடம் சாபம் நீங்க வழி ஏதும் உண்டோ என்று ஏக்கத்துடன் கேட்டனர். சிவபெருமான் ஆயிரம் ஆண்டுகள் கழித்து மதுரையில் இருந்துயாம் வந்து சாபத்தைப் போக்கிடுவோம். அப்போது சித்திகளை விளக்கிடுவோம் என்று கூறியருளினார். பட்டமங்கை தலத்தில் உள்ள ஆலமரத்தடியில் கற்பாறைகளாக மாறிக் கிடந்தனர். ஆயிரம் ஆண்டுகள் கடந்தன. சிவபெருமான் தன் இச்சையினால் ஞானாச்சார்ய வடிவம் கொண்டு கார்த்திகைப் பெண்டிர் முன்தோன்றி சாபவினை நீங்குமாறு தம் திருப்பார்வையை நல்கினார். பின் இறைவன் அப்பெண்டிர் அறுவரின் சிரங்கள் மீதும் திருக்கரத்தை வைத்து தௌளத் தெளிவாக அட்டமாசித்திகளை உபதேசித்தருளினார். இறைவன் உபதேசித்த அட்டமா சித்திகளையும் கார்த்திகைப் பெண்டிர் அறுவரும் அன்னை உடையவளை மனதில் இருத்தித் தியானித்து நன்கு பயின்று பின் வான் வெளி வழியே சென்று கயிலாச மலையை அடைந்தனர். .

**நிறைவுரை**

மனித குலமேம்பாட்டுக்கும், மனித வாழ்வுக்கும், மனிதர்கள் புனிதம் அடைவதற்காகவும் உழைத்தவர்கள் சித்தர்கள். சமயப் பற்றினாலும் சிவபெருமானின் அருளினாலும் ஈர்க்கப்பட்ட சித்தர்கள் தம்வாழ்க்கை முழுமையையும் நூல்கள் எழுதுவதிலும், மருந்துகள் கண்டுபிடிப்பதிலும் ஈடுபடுத்தினார். இயற்கையை தம் உலகமாகக் கொண்ட சித்தர்கள் ஒருபோதும் எதைக்கண்டும் அஞ்சியது இல்லை. ஆனால் இன்றைய உலகில் நாம் அனைத்தையும் மறந்து துரிதவாழ்வை நோக்கி நகர்வதனால் நம்முடைய வாழ்வும் துரிதமாகிவிடுகிறது. அதற்கு நாம் செய்ய வேண்டியது இயற்கையோடு இணைந்து வாழ்ந்து இறைவனை அடைந்த திருமூலரைப் பின்பற்றி அவர் நெறியைப் போற்றுவோம்.

**துணைநூற்பட்டியல்**

[1] சித்தர் களஞ்சியம் , கணபதி எண்டர்பிரைசஸ், திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.

[2] அகத்தியர் முதல்வாரியார்வரை சித்தர்கள் 60 பேர்வாழ்வும்வாக்கும் ,பி. எஸ். ஆச்சார்யா, நர்மதாபதிப்பகம், 10, நானாதெரு, பாண்டிபஜார், தி.நகர்சென்னை - 600 017.

[3] திருமூலர் ,திருமந்திரம் மூலமும் விளக்கவுரையும் ,உமாபதிப்பகம்சென்னை - 600 001.

[4] பரஞ்சோதிமுனிவர் அருளிய திருவிளையாடற்புராணம் - எஸ்.எஸ்.மாத்ருபூதேஸ்வரன், நர்மதா பதிப்பகம், 10, நானாதெருதி.நகர. சென்னா - 600 017.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**முருகலெட்சுமி. “பிரகாமியம் வழி சிவனை அடைந்த மூலன்.”** *தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்,* தொகுதி 3, சிற.இதழ் 3, தொகுதி 3, ஜனவரி 2021, பக்.392-397. டிஒஐ: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.058**

**Cite this Article in English (MLA 8 Style) as:**

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

# தமிழ் மரபில் சித்தர்களின் ஐந்தெழுத்து மந்திரம்

# The Five Letter Mantra of the Siddhars in the Tamil Tradition

**முனைவர் மைத்திரிஅன்பு,** தலைவர், தமிழ்மாடம் அறக்கட்டளை, செய்யாறு – 604 407.
**Dr.Mythreanbu,** Trustee, Tamizh Madam Trust, Cheyyar – 604 407.
ORCiD: https://orcid.org/0000-0003-0621-1012
DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.059

## Abstract

*The Siddhars were the greatest men who ever lived on earth. They are the ones who have the power to formalize theology and human ideology. The devotional ethics, beliefs, mantras, rituals, etc., referred by the Siddhas have come under a significant scrutiny for the religious conflicts that prevailed here after the Bhakti movement. In the present context, devotion can help to cultivate various restrictions and differences. In which sacredness is taught through their ideology. Apostasy is not the same for everyone. So religious conflicts exist but the theology referred by the Siddhas manifests itself as thought for ordinary human beings. In this context, this study explores the meaning of the five-letter mantra 'Namasivaya' in the Tamil language.*

**Keywords:** Siddhars, Namasivaya, Five Letter Mantra, Niramozhi Mantra, Tamil Tradition

### அறிமுகம்

மண்ணுலகில் வாழ்ந்த மகத்தான மனிதர்கள். இவர்கள் இறைநெறியியலையும், மானுட சித்தாந்தத்தையும் முறையாக எடுத்துரைக்கும் வல்லமைப் பெற்றவர்கள். பக்தி இயக்கக் காலத்திற்குப் பின்னர் இங்கு நிலவிய சமயப்பூசல்களுக்கு, சித்தர்கள் குறிப்பிடும் பக்தி நெறியியல், நம்பிக்கைகள், மந்திரங்கள், சடங்குகள் முதலானவை குறிப்பிடத்தக்க ஆய்வுப் பார்வையை எட்டியுள்ளன. தற்காலச் சூழலில் பக்திநெறி பல்வேறு கட்டுப்பாடுகளையும், வேற்றுமைகளையும் வளர்க்க உதவக்கூடியதாக இருக்கிறது. இதில் ஒரு புனிதம் கற்பிக்கப்பட்டுள்ளது. அப்புனிதத்துவம் எல்லோருக்கும் சமமானதாக இல்லை. அதனால் சமயப்பூசல்கள் நிலவுகின்றன. ஆனால் சித்தர்கள் குறிப்பிடும் இறைநெறி என்பது சாதாரண மனிதர்களுக்கானச் சிந்தனையாக வெளிப்படுகிறது. இத்தன்மையில் இவ்வாய்வு ‘நமசிவய’ என்னும் ஐந்தெழுத்து மந்திரத்தின் புரிதலை தமிழ் மொழிபோடு ஆராய்வதாக அமைகிறது.

### மந்திரங்கள்

மந்திரங்கள் என்று சொல்லப்படுபவை ஒலிக் கூட்டங்களாகும். உதாரணமாக ‘நமசிவய’ என்ற மந்திரத்தை எடுத்துக்கொள்ளலாம். ‘நமசிவய’ என்னும் இச்சொல் ‘சிவனை வணங்குகிறேன்’ என்ற பொருளைக் குறிக்கிறது. இதன் பொருள் தெரியாமல் இதனை உச்சரிக்கும் பொழுது, அது குறைமொழியாகி விடும். மனித மனங்களிலுள்ள ஆற்றல் பெற்ற சொற்களைப் பலராலும் தேர்ந்தெடுத்துப் பேசமுடிவதில்லை. அவ்வாறு முயற்சித்து பேசும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

சூழலிலும் கேட்பவருக்கு அச்சொல்லின் பொருள் புரியாத பொழுது, 'இதை இப்படிச் சொல்லியிருக்கலாமே' என்று எண்ணத்தோன்றும். இவ்வாறு தோன்றுமளவில் பேசப்படும் அல்லது புரிந்துகொள்ளப்படும் சொற்கள் குறைமொழிச் சொற்களாகின்றன. இதனால்தான், **"குறைமொழியாக இருக்கும் சொற்களைப் பேசுகின்ற நாம் மந்திரங்களைக் காண்பது இயலாத காரியம்" (மந்திரம் என்றால் என்ன? ப.2)** என்று அ.ச.ஞானசம்பந்தன் குறிப்பிடுகிறார். ஆனால் நம் முன்னோர்கள், ஞானிகளாகவும் தபசிகளாகவும் ரிஷிகளாகவும் இருந்து, நிறைமொழியை பேசியிருக்கிறார்கள். தொல்காப்பியர் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே, **"மந்திரங்களைப் பற்றி ஆராய்ந்து அறிந்து, மிகச் சிறந்த கருத்தாக 'நிறைமொழி மாந்தர்' என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளார்" ("நிறைமொழி மாந்தர் ஆணையின் கிளந்த மறைமொழி" - தொல்.செய்.நூ.171 - இதனை வள்ளுவர், "நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து மறைமொழி காட்டி விடும்" -கு.28 என்கிறார்)** இதில் சாதாரணச் சொற்களை எடுத்துக்கொண்டு, அவற்றை தம்முடைய ஆற்றலின் காரணமாக, தன் சக்தி முழுவதையும் அச்சொற்களில் ஏற்றி, **'இவை மந்திரங்களாக ஆகக்கடவன'** என்று ஆணையிடுவதன் வழி நிறைமொழி சொற்கள் 'மந்திரங்கள்' ஆகின்றன என்பதை தொல்காப்பியர் விளக்குகிறார். இத்தகைய மந்திரச் சொற்களைப் பேசியவர்களாக(வும்), பாடல்கள் வழியாக வெளிப்படுத்தியவர்களாக(வும்) பக்தி இயக்கத்தில் தன்னை ஈடுபடுத்திக்கொண்டு வாழ்ந்த திருஞானசம்பந்தர், திருநாவுக்கரர், மாணிக்கவாசர், இராமலிங்க வள்ளலார், திருமூலர், தாயுமானவர், முதலானோர் இருந்துள்ளனர். இதனை சித்தர்களும் வெளிப்படுத்துகின்றனர்.

**மந்திரங்கள் உண்டுநீர் மயங்குகின்ற மானிடர்**
**மந்திரங்கள் ஆவது மறத்தில் ஊறல் அன்றுதான்**
**மந்திரங்கள் ஆவது மதித்தெழுந்த வாயுவை**
**மந்திரத்தை உண்டவர்க்கு மரணம் ஏதும் இல்லையே (சித்தர் பா., சிவவாக்கியர் பா 93)**

என்னும் பாடல் மந்திரத்தை மட்டும் சொல்லும் மனிதர்கள் மயக்கத்தில் இருப்பவர்கள் ஆவர். மாறாக மந்திரம் என்னும் மெய்பொருளை உணர்பவர்கள் மட்டுமே மாயையிலிருந்து விடுபட்டு, மரணத்தை வெல்ல முற்படுவபவர்களாக இருக்கமுடியும் என்று குறிப்பிடுகிறது.

**மந்திர வகைகள்**

பொதுவாக 'மந்திரம்' என்னும் சொல் மனம் + திரம் என்று பிரிந்து, மனதின் திரம் – 'மந்திரம்' என்று உணரப்படுகிறது. அதாவது மனதை உறுதிப்படுத்த அதற்கு கொடுக்கப்படுகின்ற பயிற்சி என்பதாக இதனைப் புரிந்துகொள்ளலாம். இதனை, **"மனனம் + திரயதே – என்று பிரித்து,(மனனம் என்றால் 'நினைப்பது', 'ஜபிப்பது', 'உச்சரிப்பது' எனப்பொருள்) 'திரயதே' என்றால் 'காப்பாற்றுதல்' என்று பொருள். ஆக மந்திரம் என்பது ஜபிப்பவரை அல்லது உச்சரிப்பவரை காப்பாற்றுவது"(சுவாமி பிரபஞ்சநாதன்., மந்திர ஜபத்தின் மகிமை., பக்.9-10)** என்று 'பிரபஞ்சநாதன்' விளக்குகிறார். இவரே மற்றொரு வகையில், **"மந் –**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**என்றால் மனம், திர – என்றால் பிராணன். அதாவது மனத்தையும் பிராணனையும் கலக்கச் செய்வது 'மந்திரம்'"(மேலது)** என்றும் விளக்கம் தருகிறார். பொதுவாக பிரபஞ்சத்தின் தோற்றம் ஒலியிலிருந்து உருபெற்றதாக சமய சாஸ்திரங்களும், அறிவியலும் கூறுகின்றன. அவ்வகையான ஒலிக்கூட்டங்களே மந்திரங்களாகவும் அமைந்திருக்கின்றன. இந்த ஒலிக்கூட்டங்கள் ஒருவகையான அதிர்வலைகளை ஏற்படுத்துவதன் வழியே தெய்வங்களுடன் தொடர்புபட்டு, தெய்வக் குறியீடுகளாகச் செயல்படுகின்றன. அவ்வகையில் மந்திரங்கள்:

(1) **அட்சார்ந்தக மந்திரங்கள்** - எழுத்துக்களில் எழுதாமல், காலந்தோறும் காதுகளின் வழியாக ஒருவர் சொல்ல, ஒருவர் கேட்டு மற்றவர்களுக்கும் அவ்வாறே சொல்லப்பட்டு வரும் முறை.

(2) **அட்சராப்ய மந்திரங்கள்** - எழுத்தில் எழுதப்பட்டு இருக்கும்.

(3) **பீஜ மந்திரங்கள்** - பீஜம் என்பது மனித உடலோடு அதாவது சக்கரங்களின் மத்தியில் ஒலிக்கும் 'இலி'யின் சப்தமாகிய மந்திரமாகும்.

பண்டைய ஞானிகளும் ரிஷிகளும் மந்திரம், தந்திரம், யந்திரம், ஔசதம் போன்ற வழிமுறைகளைச் சாதனைகளில் வெற்றிபெற பயன்படுத்தியுள்ளனர். அவர்கள் நம் ஆதாரச் சக்கரங்களின் மையத்தில் உள்ள பீஜ மந்திரங்கள், அவற்றின் இதழ்களில் ஒலிக்கும் அக்ஷரங்கள் எல்லாவற்றையும் ஞானத்தால் அறிந்து மந்திரங்களை உருவாக்கியுள்ளனர். இம்மந்திரங்கள் பெரும்பான்மையும் யந்திரங்கள், சக்கரங்களில் எழுதப்பட்டுள்ளன. யந்திரங்கள் என்பதை மண்டலம், யந்திரம் என்று இருபிரிவுகளாக பிரிக்கலாம். இதில் மண்டலம் ஆன்ம வரைபடத்தைக் குறிப்பது. இது பேரண்டம் என்று அழைக்கப்படுகிறது. அதேபோல யந்திரம் என்பது ஒரு குறிப்பிட்ட தேவைக்காகவும் நோக்கத்திற்காகவும் பயன்படுத்தப்படுவதாக அமைக்கப்படுவது. திருமூலர் திருமந்திரத்தில் மண்டலங்களை 'சக்கரங்கள்' என்றே குறிப்பிடுகிறார்.

பீஜ மந்திரங்கள் பெரும்பாலும் செப்பு, தங்கம், வெள்ளி உள்ளிட்ட தகடுகளில் எழுதி வைக்கப்பட்டுள்ளது. இதில் அதிகமாக செப்பே பயன்படுத்தப்பட்டுள்ளது. செப்புக்கு மின்கடத்தும் திறம் அதிகம் இருப்பதே இதற்கானக் காரணம். மேலும், **"மின்சாரம் கண்டுபிடிப்பதற்கு முன்பே செப்புவின் இந்த ஆற்றலை அன்றைய முனிவர்கள் அறிந்திருந்தார்கள். அந்த செப்பு ஆற்றலைக் கடத்துவதோடு, தன்னோடு தக்க வைத்துக் கொள்ளவும் வல்லதாகிறது. அதனால் பீஜாட்சரம் எழுதிய செப்புத்தகடின் மேல் விளக்கொளி படும்போது, அது மெல்லிய சக்திக்கு ஆட்படுகிறது. மேலும் இடையறாத மந்திர சப்த அலைகள் அதன்மேல் படும்போது அவைகளை அப்படியே தன்மேல் பதிய வைத்துக்கொள்கிறது. இதைத்தான் மந்திர உருவேற்றுதல் என்கின்றனர்"(மேலது., ப.13)** இவ்வாறு முறைப்படி மந்திரம் உருவேற்றப்பட்ட செப்புத் தகடானது தன்மேல் பதிந்துள்ள ஒலி X ஒளி அலைகளை மின்காந்த அலைகளாகக் கசியவிட்டுக் கொண்டே இருக்கிறது. குறிப்பிட்ட காலம்வரை அந்த சக்தி அதில் நிலைத்திருக்கிறது. மனிதர்களின் பார்வைக்கோ செவிப்புலன்களுக்கோ அச்சக்தி

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

புலப்படுவதில்லை. அந்த நுண்ணிய ஒலி X ஒளி அலைகளின் மின்காந்த சக்தியானது, தகடு இருக்கும் இடத்தில் இருப்பவர்களின் உடம்பிலும் மனதிலும் சில மாற்றத்தைக் உண்டாக்கும். இப்படியான மறைபொருள் இயங்குசக்தியை இத்தகடுகள் பெற்றிருப்பதால் ‘இயந்திரங்கள்’ என்று இதனை முன்னோர்கள் அழைத்துள்ளனர்.

இயந்திரத்தின் தன்மையைப் புரிந்துக்கொள்ளாதவரை அது வெறும் தகடு என்றும்; அதில் கோணல் மாணலாக ஏதோ கிறுக்கப்பட்டுள்ளதாகவும் அறியும் நிலை அறியாமையின் அறிகுறியாகிறது. உண்மையில் யந்திரத்தின் தன்மையை உணரும் பொழுது, அதனால் மனித உடலிலும் மனதிலும் மாற்றத்தை உண்டாக்க முடியும் எனும் நம்பிக்கை வலுப்பெறும். யந்திரத்தில் பதிவாகியுள்ள மந்திரத்தை உணரும் நிலைப்பாட்டையே ‘தந்திரம்’ என்னும் சொல் விளக்குவதாக அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

**‘நமசிவய’ என்னும் ஐந்தெழுத்து மந்திரம்**

‘நமசிவய’ என்னும் ஐந்து எழுத்து மந்திரம், ‘மந்திரம்’ என்ற சொல்லிற்கு உரிய இலக்கணங்கள் அனைத்தும் பொருந்தியதாகவும் எல்லா மந்திரங்களுக்கும் முதன்மையானதாகவும் விளங்குகிறது. தமிழன் கொண்ட இறைக்கொள்கை அனைத்தையும் இம்மந்திரம் உள்ளடக்கியுள்ளது. ‘நமசிவய’ என்னும் ஐந்து எழுத்துக்களில் ஒவ்வொரு எழுத்தும் ஒரு பொருளைக் குறிப்பதாக அமைந்திருக்கின்றது. (ந - ந டப்பு/ம – மறைப்பு/சி – சிறப்பு/வ – வனப்பு/ய – யாப்பு) இப்பொருண்மை தமிழ் மரபுக்குறியதாகும்.

**வடமொழிக்கு பொருந்தாதன்மை**

‘நமசிவய’ என்னும் ஐந்து எழுத்து மந்திரம் ‘பஞ்சாட்சரம் - ஐந்து அட்சரங்களைக் குறிக்கும் சொல்லாட்சி’ என்னும் வகையிலான வடமொழிச் சொல்லிலிருந்து தமிழாக்கம் செய்யப்பட்டதாகும். வடமொழியாளர்கள் இதனை **‘நமஷ்சிவாய’** என்று குறிப்பிடுகின்றனர். இதில் ஆறு எழுத்துக்கள் வருகின்றன. வடமொழியில் சொல்லப்படும் ‘நமஷ்சிவாய’ என்னும் சொல், **‘சிவனுக்கு வணக்கம்’** என்னும் பொருண்மையில்தான் வழங்கப்படுகிறது.

தமிழில் ஐந்தெழுத்தும் இதைத்தான் குறிக்கிறது. மேலும் ‘சிவனுக்கு வணக்கம்’ என்பது ஒரு வாக்கியமாக இருப்பதை தவிர்க்கவே இங்கு **‘பஞ்சாட்சரம்’** என்னும் சொல் பயன்படுவதாகக் கொண்டாலும், இதில் ஐந்து எழுத்துக்களைக் கொண்ட மந்திரம் என்று, குறிப்பிடப்படும் பொருண்மைக்கு **‘நமஷ்சிவாய’** என்னும் வடமொழி எழுத்துக்களின் எண்ணிக்கை அமையவில்லை, தமிழில் சுட்டப்படும் ‘நமசிவய’ என்னும் எழுத்து எண்ணிக்கையே பொருந்த அமைகிறது. எனவேதான் சித்தர்கள் ‘நமசிவய’ என்னும் இறைவணக்கத்தை ஐந்தெழுத்து மந்திரமாகக் கைக்கொண்டுள்ளனர். இதனை,

**ஓம் நம சம்பவே, மயோபவே, நம சங்கராய, மயஸ்கராய,**
**நமசிவாய சிவதராய ஓம்” (யஜூர் வேதம் 4.5.8.1, வேத மந்திரங்கள்)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

என்று **யஜுர்வேதம்** குறிப்பிடுகிறது. இதற்கான பொருள், **"உலக இன்பமாகவும் மோட்ச இன்பமாகவும் இருப்பவரும், உலக இன்பத்தையும் மோட்ச இன்பத்தையும் தருபவரும் மங்கல வடிவினரும், தம்மை அடைந்தவர்களை சிவமயம் ஆக்குபவரும் ஆகிய சிவபெருமானுக்கு நமஸ்காரம்" (மேலது)** என்று சொல்லப்படுகிறது. இதன்மூலம் தமிழில் சொல்லப்படும் ஐந்தெழுத்து மூலமந்திரமான 'நமசிவய' என்பதற்கு வடமொழியில் சொல்லப்படும் 'நமஷ்சிவாய' என்பதற்கும் எந்த தொடர்புமில்லை என்பதும் புலப்படும்.

**நமசிவய – சொற் பொருள் விளக்கம்**

**நம – 'நாம்' என்னும் பால்பகா அஃறிணைப் பெயரின் ஆறாம் வேற்றுமை நிலை, 'நம'. இது, அது என்னும் உருபினை ஏற்கும்போது 'நமது' என வருகிறது. உருபு மறைந்திருக்கும் வேற்றுமைத் தொகையில் 'நம' என நிற்கிறது.**

**சிவ் – சிவன் 'சிவ்' என்னும் சத்தியை அவளிடம் பெற்றுக்கொண்டு அவளோடு ஒன்றாய் ஒருபவன். அதாவது சக்தியுடன் இணைந்திருப்பவன் என்பதை இவ்வொலி குறிக்கிறது.**

**ஆய – ஆயம். ஆய என முடிந்த பின்னர், மீண்டும் 'நம' வந்து சேரும்போது மகர ஒற்று இடையில் தானே வந்துவிடும். அவ்வகையில் 'சிவாய(ம்)நம' என அமைகிறது. அப்பொழுது 'ஆய' என்பது 'ஆயம்' ஆகிவிடுகிறது. ஆயம் என்பது ஆயத்தாராகிய திருக்கூட்டம் என்பதைக் குறிப்பதாகும்" (த.கோவிந்தன்., சித்தர்களின் பூசா விதிகள்., ப.12)**

இவற்றால் 'நம்முடையவை சிவத்திருக்கூட்டம்' என்பதை 'நமசிவய' என்னும் மந்திரம் விளக்குவதை நாம் அறியலாம்.

'நமச்சிவய – நம் அச்சு இவ்-ஆய(ம்)' – அதாவது நமக்கு அச்சாக இருப்பதெல்லாம் நம்முடன் இருக்கும் திருக்கூடம். பிறர் இல்லாமல் நம்மால் தனித்து வாழமுடியாது என்னும் சார்புநிலையை, இது தத்துவார்த்தமாக உணர்த்துகிறது. இதனை 'திருவைந்தெழுத்தின் ஐந்து வடிவங்களுடனும் பொருத்திப் பார்க்கமுடியும். உதாரணமாக,

**தூல பஞ்சாட்சரம் என்பதை – நமசிவய – குறிக்கிறது**
**சூட்சும பஞ்சாட்சரம் என்பதை – சிவயநம – குறிக்கிறது**
**ஆதி பஞ்சாட்சரம் என்பதை – சிவயசிவ – குறிக்கிறது**
**காரண பஞ்சாட்சரம் என்பதை – சிவசிவ – குறிக்கிறது**
**மகாகாரண பஞ்சாட்சரம் என்பதை – சி – குறிக்கிறது (இது ஏக பஞ்சாட்சரம் என்றும் அழைக்கப்படும்)" (சண்முக சுந்தரம்., வழிபாட்டு வரலாறு., ப.21)**

இதிலிருந்து 'நமசிவய' என்னும் ஐந்து எழுத்து மந்திரம் சிவபெருமானைக் குறிக்கும் மற்றொரு பெயராக அமைவதைக் காணலாம்.

**காலமாற்றத்தின் நிலைகேடு**

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

களப்பிரர்கள் கொலை பல செய்தவர்களாக இருந்தாலும், அவர்கள் மூலம் தமிழர்களுக்கு ஒரு உபாயம் நிகழ்ந்ததாக அ.ச.ஞானசம்மதன் குறிப்பிடுகிறார். அந்த உபாயம் யாதெனில், பக்தி இலக்கியத்தின் தோற்றமாகும். பின்னர் களப்பிரர்கள் தமிழகத்தை விட்டு வெளியேறினார்கள். அச்சூழலில் தமிழகத்தில் வடமொழி சிறப்பு பெற்றிருந்த அளவில் தமிழில்லை. அதனால் தான் 4196 பாடல்களைப் பாடிய ஞானசம்பந்தர் 147 இடங்களில் தன்னை 'தமிழ்ஞான சம்பந்தன்' என்றும்; 'முத்தமிழ்விரகன்' என்றும் சொல்லிக்கொள்ள நேர்ந்திருக்கிறது.

இவ்வாறு அப்புலவர்கள் தமிழுக்கு முக்கியத்துவம் கொடுத்ததோடு, சில அடிப்படை பழக்கவழக்கங்கள் வேதத்திற்கு மாறாக உள்ளே வரவும் வழிவகுத்தன. தொடக்கத்தில் தீ வளர்த்தல், தீக்கடவுள், ஒருவனே கடவுள் என்று விவரித்தல், எந்த பொருளாக இருப்பினும் **'ஸ்வாஹா'** என்னும் மந்திரத்துடன் தீயில் போடுதல் என்னும் பழமரபுகளை மாற்றவே இவர்கள் விக்கிரகத்தை உருவாக்கினார்கள். பின்னர் விக்கிரகத்திற்கு பூசைகளும் அபிஷேகங்களும் செய்தனர். இந்த அபிஷேகம் குறித்து பின்வரும் பாடல்களின் கருத்துக்கள் குறிப்பிடத்தக்கன.

**செந்தமிழ் தெய்வமறை நாவர்செழு நற்கலை**
**தெரிந்த அவரோ**
**டந்தமில்கு ணத்தவர்கள் அர்ச்சனைகள் செய்ய**
**அமர்கின்ற அரனூர்( திருமுறை 3., பதிகம் 80 : 4)**

செந்தமிழர்கள் கருவறைக்குள் சென்று அர்ச்சனை செய்தார்கள் என்பதே இதன் பொருளாகிறது. மனிதன் நேரடியாக அர்ச்சனை செய்கின்ற மரபு இங்கு இருந்திருப்பதை இப்பாடல் உறுதிப்படுத்துகிறது. அதேபோல சுந்தரர்,

**இயக்கர் கின்னரர் யமனொடு வருணர்**
**இயங்கு தீவளி ஞாயிறு திங்கள்**
**மயக்கம் இல்புலி வானரம் நாகம்**
**வசுக்கள் வானவர் தானவர் எல்லாம்**
**அயிர்ப்பொன் றின்றிநின் திருவடி யதனை அர்ச்சித் தார்" (தேவ. ஏழாம் திருமுறை., பா.6)**

என்னும் பட்டியலை தருகிறார். இதில் புலி, சிங்கம், நாகத்தோடு எல்லாவற்றையும் சேர்த்துக்கொண்ட பழக்கம் தெரியவருகிறது. இத்தன்மை மாறி, பேதங்கள் வந்ததை உணர்ந்ததால் சித்தர்கள் பலரும் பல்வேறு சித்தாந்தங்களைப் பாடவேண்டிய நிலைக்கு உள்ளாயினர். அவ்வகையில்,

**சமயபேதம் பலவான சாதி பேதங்கள்**
**சகத்தோர்க்கே....(பாம்பாட்டி சித்தர்., பா.99)**
**சாதிப் பிரிவினிலே தீயை மூட்டுவோம் (சிவவாக்கியர்., பா.82)**

என்று சிவவாக்கியர், பாம்பாட்டிச் சித்தர் உள்ளிட்டோர் பாடுகின்றனர். இன்னும் இதனை விரிவுப்படுத்தி கொங்கணச் சித்தர்,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**சாதி பேதங்கள் சொல்லுகி றீர்தெய்வம்**

**தானென் றொருவுடல் பேதமுண்டோ?**

**ஓதிய பாலதி லொன்றாகி யதிலே**

**உற்பத்தி நெய்தயில் மோராச்சு (கொங்கணச்சித்தர்., ப.41)**

என்று சாதிகளை அடித்து நொறுக்க வேண்டுமென்று குரல் கொடுக்கிறார். பண்டையக் காலச்சூழலில் உருவாக்கப்பட்ட தத்துவங்களும் கிரியைகளும் சடங்குகளும் காலமாற்றத்தில் மருவி, மறைந்துபோயின. மிஞ்சியதாக கிரியையும் சடங்குகளும் மக்களைப் பிடித்துக்கொண்டது. அறியாமையில் மூழ்கிய மக்களிடம் சடங்குகள் அளவுக்கு அதிகமான இடத்தைப் பிடித்துக்கொண்டன. உதாரணமாக, 'சிவயநம' என்னும் மந்திரத்தை உச்சரித்து சிவபூசையின் முக்கியத்துவம் சொல்லப்பட்டதைக் குறிப்பிடலாம். பின்னாலில் சிவபூசையின் அவசியத்தையும் செய்முறையையும் பேசவந்தவர்கள் தங்களுக்குள்ளாக,

**தங்கத்திலே லிங்கம் பண்ணி வச்சா இன்னபலன் கிடைக்கும், வெள்ளியிலே பண்ணி வச்சா இன்னபலன் கிடைக்கும். சிவப்புப் பூவைப்போட்டுப் பண்ணினா இன்னபயன், இப்படியெல்லாம் மக்களை நம்ப வைத்துவிட்டு, சிவபூசை என்னும் மரபை பின்னுக்குத் தள்ளி, பொன்பூசை, வெள்ளி பூசை, பொருள் பூசை என்றாக்கிவிட்டனர்" (அ.ச.ஞானசம்பந்தன்.,மேலது., ப.22)**

என்று குறிப்பிடும் அ.ச.ஞானசம்பந்தனின் கூற்று இங்கு ஏற்கத்தக்கதாக அமைந்திருக்கிறது. இந்நிலையில் சித்தர்களும் நாயன்மார்களும் இச்சமயச் சடங்கியலை திட்டத் தொடங்கினர். இதற்கு உதாரணமாக,

**நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே**

**புக்கு நிற்கும்பொன் னார்சடைப் புண்ணியன் ஐந்தாம் திருமுறை., பா.9)**

என்று மனதில் இறைவனை நினைத்து உருகிப் பாடினால் அவன் தானாகவே வந்து நிற்பான் என்றும்;

**பொக்க மிக்கவர் பூவுநீ ருங்கண்டு**

**நக்கு நிற்பன் அவர்தம்மை நாணியே (மேலது)**

அவ்வாறு செய்வதை விட்டுவிட்டு, வஞ்சகனின் பூவையும் நீரையும் இறைவன் வெறுப்புற்றான் என்பதை 'நக்கு நிற்பன்' என்று நாவுக்கரசர் குறிப்பிடுகிறார். பலரையும் ஏமாற்றி தானும் ஏமார்ந்து இறுதியில் என்னையும் ஏமாற்ற தொடங்கிவிட்டாயே என்று ஆண்டவன் சிரிப்பதாக இங்கு இவர் குறிப்பிடுகிறார். வந்ததன் பொருளையும் சென்றதன் கணக்கையும் அறியாத மூடர்களாக இருக்கும் மக்களை இவர்கள் சாடும் பொருட்டு இவ்வாறு பேசியிருக்கிறார்கள் என்பதை அறிந்துக்கொள்ள முடிகிறது,

**ஆய்வுரை**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

'நமசிவய' என்னும் ஐந்தெழுத்து மந்திரம் எல்லாச் சமயங்களுக்கும் பொருந்துகிறது. இதைத் தமிழில் ஆக்கியிருப்பதால் தமிழ்மந்திரம் என்று சித்தர்கள் குறிப்பிடுகின்றனர். மேலும் இம்மந்திரம் வடமொழிக்கு பொருந்தவில்லை. இறைவனை அறிதல், அடைதல், உணர்தல் என்ற நிலையில் வளர்ச்சியுறும் நிலையை மந்திரங்கள் குறிப்பிடுகின்றன. இந்நிலை இன்றைய காலமாற்றத்தால் சாதி, மத வேறுபாடுகளையும் ஏற்றத்தாழ்வுகளையும் ஏற்படுத்தும் வகையில் இருப்பதை சித்தர்கள் சாடுகின்றனர். 'நமசிவய' மந்திர விளக்கத்தின் கீழ், சித்தர்கள் 'இல்லை' என்ற ஒன்றை நிரூபிக்கப் பேசும் பேச்சிலும், கேள்வியிலும் அதன் நிரூபம் மறைந்திருப்பதை உணரமுடிகிறது. அறத்தின் அடிப்படையை, சிந்தனையாகக் கொள்ளாமல் சிவ மந்திரத்தை ஓதுவதில் பயனில்லை என்று சிவவாக்கியர் உள்ளிட்ட சித்தர்கள் குறிப்பிடுகிறார்.

**துணைநூற் பட்டியல்**

[1] இராமநாதன்.அரு. (ப.ஆ)., சித்தர் பாடல்கள், பிரேமா பிரசுரம்.,சென்னை-24, 2012.

[2] த.கோ.கோவேந்தன்., (ப.ஆ)., சித்தர் பாடல்கள்., பூம்புகார் பதிப்பகம், சென்னை, 1979.

[3] ச.வே.சு., (உ.ஆ)., தொல்காப்பியம், மணிமேகலை பிரசுரம், சென்னை, மறுபதிப்பு 1998.

[4] சுப்பிரமணியபிள்ளை.கே (ப.ஆ)., திருநாவுக்கரசர் தேவாரம், திருப்பனந்தாள் மடம்.

[5] நாராயண வேலுப்பிள்ளை (உ.ஆ)., பன்னிருத்திருமுறைகள்., வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, முதல் பதிப்பு 1995.

[6] கோவேந்தன்.த., சித்தர்களின் பூசாவிதிகள்., சங்கர் பதிப்பகம், சென்னை, 2001.

[7] ஞானசம்பந்தன்.அ.ச.,மந்திரம் என்றால் என்ன?, கங்கை புத்தகநிலையம், சென்னை, 2005.

[8] பிரபஞ்சநாதன்., மந்திர ஜபத்தின் மகிமை, ஓம்பிராபிக்ஸ், சென்னை, முதல் பதிப்பு 2018.

[9] சண்முகசுந்தரம்., கடவுள் வழிபாட்டு வரலாறு., புதுவை பைந்தமிழ் பதிப்பகம், புதுச்சேரி,

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**மைத்திரிஅன்பு. "தமிழ் மரபில் சித்தர்களின் ஐந்தெழுத்து மந்திரம்."** *தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 3, சிற.இதழ் 3, தொகுதி 3, ஜனவரி 2021, பக்.398-406. டிஒஐ: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.059**

**Cite this Article in English (MLA 8 Style) as:**
**Mythreanbu. "The Five Letter Mantra of the Siddhars in the Tamil Tradition."** *International Journal of Tamil Language and Literary Studies*, Vol. 3: Special Issue - 3, Vol. 3, January 2021, pp.398-406. DOI: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.059**

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். /I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

# திருமூலரின் சிவநெறி

## Thirumoolar's Shaiva Principle

**ச.மோனிஷா,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, ஸ்ரீ.எஸ்.இராமசாமி நாயுடு ஞாபகார்த்தக் கல்லூரி, சாத்தூர்
**S.Monisha,** Assistant Professor of Tamil, Sri S.Ramasamy Naidu Memorial College, Sattur.
ORCiD: https://orcid.org/0000-0003-2886-2780
DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.060

## Abstract

*Devotion is the virtue of love that has been dedicated to the Lord. Dictionaries define devotion as faith, worship or love. Disciples and devotees who have great faith in the Lord love him very dear to their heart. They constantly merge in remembrance of the Lord. When their love for the Lord matures, they praise the Lord. Songs related to devotion in Tamil literature are plenty. It is seen in many spiritual literary works as verses. Thera are sixty three Nayanmars. Thirumoolar is one of the much respected siddars. His "Thirumanthiram" deals with the spiritual philosophies. It enunciates the Shaiva principles to lead a good life. They are related to science and universe. This article focuses Tirumular's spiritual philosophies and examines Tirumular's Shiva neri (principle).*

**Keywords:** Lord Siva, Nayanmarm Thirumoolar, "Thirumanthiram" Spiritual Philosophy

### முன்னுரை

பக்தி எனப்படுவது இறைவனிடத்தில் செலுத்தப்படும் அன்பேயாம். பக்தி என்பதற்கு விசுவாசம், வழிபாடு, அன்பு என்று அகராதிகள் பொருள் தருகின்றன. உளவியல் அடிப்படையில் நோக்கும் பொழுது பக்தி என்பது சந்தேகம் இல்லாத நம்பிக்கை என்றே கருதப்படுகிறது. இறைவனிடம் நம்பிக்கை மிகுந்து அன்பு கொண்ட அடியவர்கள் இடையறாது இறைவனை நினைந்து உருகுவர். இறைவன் மீதுகொண்ட அன்பு முதிரும்பொழுது இறைவனைப் புகழ்ந்து பாடல் பாடுகின்றனர். தமிழ் இலக்கியங்களில் பக்திதொடர்பான பாடல்கள் பல பாடப்பட்டுள்ளன. இவற்றின் தொகுப்பே நாயன்மார்களின் திருமுறையாகவும் ஆழ்வார்களின் பிரபந்தமாகவும் வடிவம் பெற்றுள்ளன. நாயன்மார்கள் அறுபத்து மூவருள் திருமூலர் இயற்றிய நூல் திருமந்திரம். இந்நூலில் திருமூலர் கூறும் ஆன்மீக தத்துவங்கள் பேரண்டத்தோடும் அறிவியலோடும் தொடர்புடையன. பரம்பொருளாம் இறைவனை தன்னுள் உணர்கையில் கிட்டும் ஆன்மபலனை இவர் தந்திரங்களின் வழி மெய்பிக்கிறார். திருமூலரின் ஆன்மீக தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டு திருமூலர் உணர்த்தும் சிவநெறி என்ற நோக்கில் ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

### திருமூல நாயனார்

திருமூலர் ஒரு தவயோகி எனவும், திருக்கயிலையிலிருந்து புறப்பட்டு அகத்திய முனிவரை காண்பதற்காக தென்னாடு வந்ததாகவும் கூறப்படுகிறது. திருத்தொண்டர்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

புராணத்தில் சேக்கிழார் பெருமான் திருமூலர் குறித்த செய்திகளை எடுத்துரைக்கிறார். அஃதாவது திருமூலரின் இயற்பெயர் சுந்தரநாதர். இவர் அகத்திய முனிவரைக் காண்பதற்காக கயிலையிலிருந்து தென்னாடு பயணிக்கிறார். காவிரி ஆற்றங்கரை வழியாக சென்று கொண்டிருக்கையில் ஒரு காட்டில் மாடுமேய்க்கும் மூலன் என்பவன் இறந்து கிடப்பதைக் காண்கிறார். அவன் அருகில் மாடுகள் கண்ணீர் விட்டபடி நின்றிருந்ததைக் கண்ட சுந்தரநாதர் தனது வித்தையால் தன் உடலிலிருந்து உயிரை மூலனின் உடம்பினுள் செலுத்துகிறார். தனது உடலை ஒரு புதரில் எவரும் காணாத முறையில் மறைத்து வைக்கிறார். மூலனின் உடலிலிருந்து மாடுகளை உடைமையான வீடுகளில் விட்டுவிட்டு தன் உடலை மறைத்துவைத்த புதர் அருகே வந்தார். அங்கு தன் உடல் இல்லாத நிலைமையில் மூலனின் உடலிலே இருக்க நேர்ந்தது. அன்று முதல் இவர் திருமூலர் என அழைக்கப்பட்டார். திருத்தொண்டர் திருவந்தாதியில், “குடிமன்னு சாத்தனூர் கோக்குலம் மேய்ப்போன் குரம்பை புக்கு” (திருத்தொண்டர்திருவந்தாதி:1162) என்ற பாடலில் மூலன் என்பவன் சாத்தனூரைச் சேர்ந்த இடையன் என்பது புலப்படுகிறது. நாயன்மார் அறுபத்து மூவருள் காலத்தால் முந்தியவர் இருவர். காரைக்கால்அம்மையார் மற்றும் திருமூலர் ஆவர். திருமூலர் தமது பாடல் ஒன்றில்,

**இருந்தேன் இக்காயத்தே எண்ணிலிகோடி**
**இருந்தேன் இராப்பகல் அற்றஇடத்தே (திருமந்திரம்:80)**

மேற்கண்டவாறு குறிப்பிட்டுள்ளார். இதிலிருந்து இவர் முந்திய காலத்தவர் என அறியப்படுகிறது. அப்பர், சுந்தரர் தம் பாடல்களில் திருமூலர் இடம்பெறுவதிலிருந்து இவருடைய காலம் கி.பி.5 ஆம் நூற்றாண்டாக இருக்கலாம் என ஊகிக்கப்படுகிறது.

**திருமந்திரம்**

திருமுறைகள் சைவ சமயத்தின் மறுமலர்ச்சியை வளர்ச்சியை எடுத்துரைப்பதை அடிநாதமாகவும் இறையின் மாண்பை விளக்குவதை நோக்கமாகவும் கொண்டு விளங்குகிறது. இதில் பத்தாம் திருமுறையான திருமந்திரம் மூவாயிரம் பாடல்கள் மூலம் ஆன்மீக தத்துவங்கள் மட்டும் அல்லாது அறம், அறிவியல், மருத்துவம் போன்ற பல்துறை சார்ந்த செய்திகளையும் விளக்குகிறது. திருமந்திரம் சைவசமயத்திற்கு மட்டுமே உரிய நூலாக இல்லாமல் எல்லாமக்களின் வாழ்வுக்கும் பயன்தரும் பொதுமறையாகவே விளங்குவதை,

**தேவர் குறளும் திருநான்மறை முடிவும்**
**மூவர் தமிழும் முன்மொழியும் - கோவை**
**திருவாசகம் திருமூலர் சொல்லும்**
**ஒருவாசகம் என்று உணர் (நல்வழி:3)**

மேற்கண்ட பாடல் வழியாக அறியமுடிகிறது. மேற்கண்ட பாடலில் வரிசைப்படுத்தப்பட்டுள்ள அனைத்து நூல்களும் மனிதனை நல்வழிப்படுத்தக்கூடியன.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**நூல் அமைப்பு**

சைவசமயக் கருத்துக்களைக் கொண்ட திருமுறை தொகையால் பன்னிரண்டாகவும், பாடிய அடியவர்களின் எண்ணிக்கையால் இருபத்தி ஏழாகவும் பகுக்கப்பட்டுள்ளது. திருமூலர் இயற்றிய திருமந்திரம் பத்தாம் திருமுறையாக வைக்கப்பட்டுள்ளது. தமிழ் ஆகமம் எனக் குறிப்பிடப்படும் திருமந்திரம் ஒன்பது தந்திரங்களாக பிரிக்கப்பட்டுள்ளது. இதன் முதல்நான்கு தந்திரங்கள் சிவஞானம் பெற விரும்புபவர்கள் தம்மை தகுதிபடுத்தும் முறைகளை விளக்குகின்றன. ஐந்தாம் தந்திரம் சைவ சித்தாந்த பொருளை உணர்த்துகிறது. அடுத்த நான்கு தந்திரங்கள் ஞானம் பெறுவதன் நற்பயன்களை விவரிக்கின்றன.

**பரம்பொருளை நாடுதல்**

மனிதனானவன் தனது ஐம்புல இச்சைகளையும் அடக்கி வாழ்வது அவசியம். புலன்களின் விருப்பத்திற்கிணங்க மனம் செயல்பட்டால் வாழ்வு முழுமை பயனைப் பெறாது. ஐம்புலன்களையும் மனிதன் தனது கட்டுப்பாட்டில் நிலைபெறச் செய்தல் அவசியம். இச்செயல்பாடு பரம்பொருளான சிவபெருமானை மனத்தினால் நினைந்து அவனை நாடி அவன் திருவடி பற்றியவர்களால் மட்டுமே சித்தம் பெறும் என்பதனை,

**தானே புலன் ஐந்தும் தன்வசமாயிடும்**
**தானேபுலன் ஐந்தும் தன்வசம்போயிடும்**
**தானே புலன் ஐந்தும் தன்னில்மடைமாறும்**
**தானே தனித்து எம்பிரான்தனைச் சந்தித்தே (திருமந்திரம்:140)**

திருமூலர் மேற்கண்ட பாடலில் இறையருள் பெறுதலின் பலனை அறிவிக்கிறார். இதன்மூலம் புலனடக்கம் என்பது மனித உயிர்களின் உயர்வான வாழ்வுக்கு அவசியமானதொன்று என்பது புலப்படுகிறது.

**உடல் – இறைவனின் உறைவிடம்**

திருமூலர் உடலினையே இறைவன் குடிகொள்ளும் ஆலயமாகக் கருதுகிறார். சிவபெருமான் எழுந்தருளியுள்ள இடமாக மனித மனத்தினைச் சுட்டுகிறார். இறைவனை உளத்தில் வைத்து வழிபடும் முறையை திருமூலர் வலியுறுத்துவதை,

**உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்**
**வள்ளல் பிரானாற்கு வாய்கோபுரவாசல்**
**தெள்ளத் தெளிவார்க்கு சீவன் சிவலிங்கம்**
**கள்ளப்புலன் ஐந்தும் காளாமணி விளக்கே (திருமந்திரம்:1863)**

என்ற பாடல் எடுத்துக்காட்டுகிறது. உள்ளம் என்பது கருவறை. உடல் என்பது ஆலயம். உயிர்களுக்கு அருளை வழங்கிடும் இறைவனை வணங்கிட கோபுரவாசலாக அமைவது வாய். சிவனே உயிராக கருதப்படுகிறான். மனிதன் தன்னுள்ளே இறைசக்தியை உணரவேண்டும் என்பதே திருமூலர் கூறும் ஆன்மீகமாகும்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**சுயம் உணர்தல்**

இறைவன் தனக்குள்ளே இருக்கிறான். தமது உடலே இறைவன் குடிகொண்ட கோயில் என ஒருவன் எண்ணுவதற்கு அவன் தன்னை அறிந்திருக்க வேண்டும். தன்னை உணர்ந்தவனால் மட்டுமே பரம்பொருளை தனக்குள் உணரமுடியும் என்பதை,

**தன்னில் தன்னை அறியும் தலைமகன்**

**தன்னில் தன்னை அறியத் தலைப்படும்**

**தன்னில் தன்னைச் சார்கிலன் ஆகில்**

**தன்னில் தன்னையும் சார்தற்கு அரியவே (திருமந்திரம்:2349)**

என்ற பாடல் மூலம் திருமூலர் உரைக்கிறார். தன்னுள்ளே தன்னை அறியமுயலும் ஆன்ம ஞானம் பெற்ற ஒருவன் தன்னிடமுள்ள மனஅழுக்குகளை நீக்கி வாழ்வான். இவ்வாறு இருப்பவனை இறைவன் தேடிவருவான். தன்னை உணராத மக்களின் சிந்தையிலும் கூட இறைவன் சேரமாட்டான் என்பது திருமூலர் கருத்து. மனஅழுக்குகளை நீக்கி தன்னை உணர்தல் என்பது இறைமையை உணர்த்தக் கூடிய ஆற்றலை அழிக்கவல்லது என்பது புலனாகிறது.

**அறிவும் ஆருயிரும்**

இறைவனை தனக்குள் உணர்பவனால் மட்டுமே இறையருளை முழுமையாகப் பெறமுடியும் என திருமூலர் கூறுகிறார். இறையருளைப் பெறுவதற்கும் தன்னை உணர்வதற்கும் அறிவு என்பது அவசியம். அறிவு வடிவமே ஆருயிர். அறிவாகிய ஆருயிரை அறிவைக் கொண்டு அறிவதே பேரறிவு என்பதனை,

**அறிவுக்கு அழிவில்லை ஆக்கமும் இல்லை**

**அறிவுக்கு அறிவல்லது தோரம் இல்லை**

**அறிவே அறிவை அறிகின்றது என்றிட்டு**

**அறைகின்றன மறை ஈறுகள் தாமே (திருமந்திரம்:2358)**

என்ற பாடலின் வழி திருமூலர் குறிப்பிடுவதை அறியமுடிகிறது. அறிவுக்கு ஆக்கமும் இல்லை வளர்ச்சியும் இல்லை. ஆக்கம் இல்லாத ஒன்றுக்கு அழிவு என்பது கிடையாது. பூதத்தாழ்வாரும் "ஞானத்தால் நன்குணர்ந்து நாரணன்றன் நாமங்கள்" (இரண்டாம்திருவந்தாதி:2183) எனக் கூறியிருக்கிறார். அறிவு தன்னை உணர்வதற்கும் தனக்குள் உள்ள இறைசக்தியை உணர்ந்து வழிபடுவதற்கும் அடிநாதமாக அமைகிறது. பரம்பொருளான சிவனை இம்மார்க்கம் வழியாக திருமூலர் கண்டுணர்ந்துள்ளார் என்பது புலனாகிறது.

**அன்பே சிவம்**

பரம்பொருளை அறிவினால் தமக்குள் உணர்ந்து வழிபட வேண்டும் எனக் கூறிய திருமூலர் சிவனை அன்பு வடிவானவன் எனக் கருதுகிறார். அன்பு வேறு சிவம் வேறு என்ற

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

சிந்தனை கொண்டோர் அறிவிலிகள் ஆவர். அன்பு தான் சிவம் என்பதை உணர்ந்தோர் அன்பின் வடிவமாகவே திகழ்வர் என்பதனை,

**அன்பும் சிவமும் இரண்டென்பார் அறிவிலார்**
**அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்**
**அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்**
**அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே (திருமந்திரம்:270)**

அன்பே சிவமாவதனை மேற்கண்ட பாடலில் திருமூலர் குறிப்பிட்டிருப்பதனை அறியமுடிகிறது. அன்பு வடிவினனான சிவன் தனக்குள் இருக்கும் போது உயிர்களிடத்தும் இவ்வன்பு செலுத்தப்படுகிறது. மேலும் மனமானது நல்வழியைப் பின்பற்ற வழிவகுக்கிறது.

**நீதி வழிப்பட்ட தவநெறி**

சிவன் அன்பு வடிவானவன் என்பதை உணர்ந்த மனம் அன்பு நெறியில் செல்ல எத்தனிக்கிறது. அன்பினால் உயிர்களை அணுகும் பொழுது தமக்குள் உள்ள தீயனவெல்லாம் அழிக்கப்படுகிறது. இதுவே சிறந்த தவநெறியாகவும் கொள்ளப்படுகிறது. திருமூலர் இதனை,

**கொல்லான் பொய்கூறான் களவிலான் எண்குணன்**
**நல்லான் அடக்கம் உடையான் நடுச்செய்ய**
**வல்லான் பகுத்துண்பான் மாசிலான் கள்காமம்**
**இல்லான் அயமத்திடை நின்றானே (திருமந்திரம்:554)**

என்ற பாடல்வழி குறிப்பிடுகிறார். தனக்குள் சிவத்தை உணர்ந்த ஒருவன் கொலைத்தொழில் புரிவதில்லை, பொய் சொல்வதில்லை, பிறர் பொருள் மேல்விருப்பம் கொண்டு திருடுவதில்லை, மது மீதும் மாது மீதும் விருப்பம் கொள்வதில்லை. நற்பண்புகள் கொண்டோனாக, நடுவுநிலை தவறாதவனாக, எதையும் ஆராய்ந்து செயல்படுபவனாக விளங்குவான். இதனையே சிறந்த தவநெறியாகவும் சிவநெறியாகவும் திருமூலர் கருதுகிறார். இதனை வள்ளுவர்,

**நல்லாறு எனப்படுவது யாதெனின் யாதொன்றும்**
**கொல்லாமை சூழும் நெறி (குறள்:324)**

என்ற குறட்பா மூலம் எடுத்துரைக்கிறார். திருமூலர் கூறிய கொலைத்தொழில் புரியாமல் இருப்பதை சிறந்த அறநெறியாக வள்ளுவர் குறிப்பிட்டிருப்பது கவனிக்கதக்கது. இதுபற்றி ஏலாதியில், “கொலைபுரியான் கொல்லான் புலால்மயங்கான்” (ஏலாதி:3) கணிமேதாவியார் கூறியதாவது கொலைத்தொழிலை விரும்பாதவனும் கொலைத்தொழில் புரியாதவனும் மண்ணுலகில் மட்டும்அல்லாது தேவலோகத்திலும் போற்றுதலுக்குரியவன் என்கிறார்.

**சிவநெறியின் மாண்பு**

திருமூலர் தன்னையார் என உணர்ந்தபிறகு வேறு எதையும் உணரஅவசியம்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

இல்லாமல் போனதாகக் குறிப்பிடுகிறார். தன்னை உணர்ந்த ஒருவனுக்கு இறைவனின் வல்லமையால் அனைத்தும் உணர்த்தப்பட்டுவிடும் என்பதே இதன்பொருள் என,

என்னை அறிந்திலேன் இத்தனை காலமும்
என்னை அறிந்தபின் ஏதும் அறிந்திலேன்
என்னை அறிந்திட்டு இருந்தாலும் கைவிடாது
என்னைவிட்டு என்னை உசாவுகின்றானே (திருமந்திரம்:2366)

மேற்கண்ட பாடல் வழி எடுத்துரைக்கிறார். தன்னை உணரமுற்படாமல் இருந்திருந்தாலும் இறைவன் உணர்த்தியிருப்பான் என அவர் உரைப்பதிலிருந்து தன்னை அணுகியவர்க்கு இறைவன் நல்நெறிவழங்குவான் என்ற பரம்பொருளான சிவனின் மாண்பு எடுத்துரைக்கப்படுகிறது.

**தொகுப்புரை**

மனிதனாகப் பிறந்த அனைவரும் ஒரு பயனை உலகிற்கு நல்க வேண்டும், அதற்கானதே இப்பிறப்பு எனக் கருதப்படுகிறது. இத்தகைய சூழலில் இறைவுணர்வோடு பிறருக்கு தீயன விழைவிக்காமல் வாழ்தல் அவசியம். தீய எண்ணங்கள் மேலோங்காமல் இருக்க வேண்டுமெனில் பரம்பொருளை உள்ளுணர வேண்டும். சிவனை தனக்குள் குடியமர்த்திய நெஞ்சம் அன்பு வழியை பேணும். அன்பினால் உயிர்களை அணுகுவோர் பிறர் துன்புறுவதை விரும்பமாட்டார். பல நீதிநூல்களும் இதனையே ஆமோதிக்கின்றன. திருமூலர் கூறும் சிவநெறியானது அறம் வழிப்பட்டதாகத் திகழ்கின்றது. தன்னை உணர்ந்த ஒருனிடம் இறையருள் மிகுந்திருக்கும் என அவர் எடுத்துக்கூறுகிறார். மந்திரம் ஓதுவதன் பயனாக அருளை வழங்குவான் இறைவன். அத்தகைய பரம்பொருளை தமக்குள் உணர்ந்துவிட்டால் எல்லாம் சித்தியாகும் என்பதனையே உணர்த்துகிறது திருமந்திரம்.

**துணைநூல்பட்டியல்**

[1] திருமூலர் திருமந்திரம் - ஞா. மாணிக்கவாசகன், உமாபதிப்பகம், 18, பவளக்காரத்தெரு, சென்னை– 600001.

[2] திருக்குறள், பி.எம்.சி. மெர்கன்டைல் பிரைவேட் லிமிடெட், 14,ராஜன் ரோடு, மதுரை.

[3] பன்னிரு திருமுறை- கழக வெளியீடு, சென்னை.

[4] பதிணெண் கீழ்க்கணக்கு- முல்லை நிலையம், 9, பாரதிநகர் முதல்தெரு, தி.நகர், சென்னை.

[5] நாலாயிர திவ்ய பிரபந்தம் - கங்கை புத்தக நிலையம், 23,தீன தயாளு தெரு, தியாகராய நகர், சென்னை – 17

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

# காரைக்கால் அம்மையாரின் பக்தி நெறி

## Devotion of Goddess Karaikal Ammaiyar

**முனைவர் ம.வனிதா,** உதவிப்பேராசிரியர், தமிழாய்வுத்துறை, தெய்வானை அம்மாள் மகளிர், கல்லூரி, விழுப்புரம்
**DR.M.Vanitha**, Assistant Professor, Department of tamil, Theivanai Ammal College for Women, Villupuram
ORCiD: https://orcid.org/0000-0002-9991-1407
DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.061

## Abstract

*In the Shaiva sect, Lord Shiva is worshiped as the absolute deity. "Periyapuranam" reveals the devotion of sixty-three Nayanmars evincing the true dedication of them. Among them, three of the Nayanmars are women, Karaikkal Ammayar, Isaignaniyar and Mangaiyarkarasiyar. The foremost of them is the Nayanmar saint Karaikal Ammaiyar She from her early age, was obliged to do charity for the Sivanadiyars and spend her time with devotion to Lord Shiva and cultivate a strong Shaiva devotion along with homelessness. This research paper is based on the study of the history of the Nayanmar saint Karaikal Ammaiyar and the grace of divinity endowed upon her.*

**Keywords:** Devotion of Goddess, Karaikal Ammaiyar

### முன்னுரை

சைவ சமயம் தழைத்தோங்க சமய பெரியோர்கள் பலர் தனது அரும்பணியை மேற்கொண்டார். முற்காலத்தில் காரைவனம் என்ற பெயரில் அழைக்கப்பட்ட காரைக்கால் நகரில் வாழ்ந்த தனதத்தன் தர்மவதி தம்பதியருக்கு மகளாக பிறந்தவர் புனிதவதியார். சிறுவயதில் இருந்தே தனது சிந்தை முழுவதும் சிவபெருமானை மனம் உருவி வழிப்பட்டு வந்தவர். பரமதத்தன் என்பவரை மணந்த அம்மையார் தனது இல்லறகடமையோடு பக்தி நெறியையும் மேற்கொண்டு வாழ்ந்து இறுதியில் இறைவன் அருளால் ஆட்கொள்ளப்பட்ட நிலையை எடுத்து கூறுவது இவ் ஆய்வின் நோக்கமாகும்.

### அம்மையாரின் இளமைக்காலம்

காரைக்காலில் வணிக குலத்தில் பிறந்த புனிதவதியார் தனது சிறுவயது முதல் சிவன் பூசையிலும் ஈடுபாடு கொண்டு காணப்படுகிறார். தனது வயதினை ஒத்த பெண் பிள்ளைகளோடு விளையாடும் எண்ணம் இன்றி சிவபெருமான் மேல் பக்தி அன்புபோடு அவரின் திருவடிக்கு ஆட்டும் எல்லையற்ற பேரன்பு நிறைந்த இனிமையான சொற்களை பேசினார்.

**பணியவணிவார் கழற்கடிமை பழகிவரும் பாங்குபெறத்**
**தணிவில் பெரு மனக்காதற்றதும்ப வரு மொழிபயின்றார் (பெரிய .காரை பா.எண் 3)**

என்ற அம்மையாரின் பாடல் வழி பரம்பொருள் மீது கொண்ட பக்தியை சேக்கிழார் பதிவு செய்துள்ளார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**சிவபக்தி**

"பிறவாக்கை பெரியோன்" என்ற பெருமைக்குரிய எம்பெருமானின் மீது பக்திகொண்ட அம்மையார் சிவனடியாருக்கு தொண்டு செய்வதை தனது பெரும்பணியாக மேற்கொண்டு வந்தார். குழந்தைப் பருவத்தில் அவருக்கு உள்ள சிவ பக்தியை அம்மையார் பாடிய அற்புதத்திருவந்தாதியே சான்றாக அமைகிறது.

**பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாங்காதல்**
**சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன் (சி.கே.சுப்பிரமணிய முதலியார் (உரை) பெரியபுராணம் - ப.85)**

தனது சிந்தை முழுவதும் சிவனையே அன்றி வேறொன்றும் அறியாத பெண்ணாகவே வாழ்ந்தவர் அம்மையார்.

**இல்லறவாழ்வு**

அழகு தன்மையுடன் விளங்கிய புனிதவதியார் திருமணப் பருவம் எய்திய நிலையில் பெற்றோர் அவருக்கு திருமணம் செய்துவிக்க கருதினர். அந்நிலையில் நாகப்பட்டினத்தில் வாழ்ந்த நிதிபதி என்னும் பெருங்குடி வணிகரது மகன் பரமதத்தனுக்கு புனிதவதியாரை மணம் முடித்துவைத்தனர். திருமணம் ஆன பெண்கள் கணவர் வாழும் ஊருக்கு செல்வதே மரபு. ஆனால் தனதத்தன் தனது ஒரே மகன் தன்னருகே வாழவேண்டும் என்ற எண்ணத்தில் காரைக்காலில் இருவரும் வாழ இல்லம் அமைத்துத் தர இருவரும் தங்களது இல்லறநெறியை தொடங்கினார்.

**பொங்கலிநீர் நாகையினில் போகாமே கணவன் உடன்**
**அங்கண் அமர்ந்து இனிது இருக்க அணி மாடம் மருங்கு**
**அமைத்தான் (பெரிய .காரை பா.எண் 11)**

தனது இல்லற வாழ்க்கையை இனிதாக தொடங்கிய புனிதவதியார் சிவபெருமானின் திருவடியிடத்து நீங்காத பக்தி உடையவராகவும் இல்லறத்தின் மாண்பு சிறிதும் பிறழாமல் போற்றி வாழ்வை மேற்கொண்டார்.

**இல்லறநெறியும் அடியாருக்கு செய்த தொண்டு**

சிவபெருமானுக்கு தொண்டு செய்வதைவிட சிவனடியாருக்கு தொண்டு செய்வதே மேன்மை என கருதியவர் நாயன்மார்கள் இதற்கு இணங்க காரைக்காமல் அம்மையாரும் சிவபூசையோடு, சிவனடியாருக்கு திருவமுதளித்தும், அடியவருக்கு பொன், நவமணி போன்றவற்றை அன்போடு கொடுத்து பெருமகிழ்வு அடைந்ததோடு, பெருமானின் திருவடிமீது பக்தி கொண்டவராக திகழ்ந்தார்.

இந்த நிலையில் பரமதத்தன் தனக்கு கிடைத்த மாங்கனிகளை தனது மனைவிக்கு கொடுத்து அனுப்ப அக்கனியை பெற்றுக்கொண்ட புனிதவதியார். சிவனடியாரின் பசியை போக்க நினைத்தார். இல்லத்தில் திருவமுது மட்டுமே தயாராக இருந்த நிலையில் கணவன்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

கொடுத்தனுப்பிய இரண்டு மாங்கனிகளில் ஒன்றை சிவனடியாருக்கு இட்டு உணவளித்தார். உணவு உண்ட சிவனடியார் புனிதவதியாரை மனதார வாழ்த்திச் சென்றார்.

**மூப்புறும் அத்தளர்வராலும் முதிர்ந்து முடுகிய வேட்கைத்**

**தீப் பசியின் நிலையாலும் அயர்ந்து அணைந்த திருத்தொண்டர்**

**வாய்ப்புறு மென்சுவை அடிசில் மாங்கனியோடு இனிது அருந்திப்**

**பூப்பயில் மென்குழல் மடவார் செயல் உவந்து போயினார் (பெரிய .காரை பா.எண் 20)**

**ஈசனின் அருளைபெற்றமை**

இல்லத்திற்கு உணவருந்த வந்த தனது கணவனுக்கு உண்கலத்தில் அடிசிலும், கறிகளும் இட்டு, சிவனடியார் உண்டது போக எஞ்சியிருந்த ஒரு மாங்கனியை படைத்தார். இனிமையான கனியை உண்ட பரமதத்தன் இன்னொரு கனியை இடுக என்றதும் செய்வது அறியாது புனிதவதியார் இறைவனை மனம் உருகி வேண்டினார். இறைவன் அருளால் அதிமதுர மாங்கனி கரத்தில் வந்தது. அதனை தன் கணவன் உண்கலத்தில் இட்டார். அதனையும் உண்ட பரமதத்தன் இந்த கனியின் சுவை பன்மடங்கு அதிகமாகவும் உள்ளது. இதனை பெற்றது எங்கே என்ப கேட்க இறையருளால் பெற்ற கனி என்று கூறியவுடன் பரமதத்தன் தெளிவு பெறாத நிலையில் புனிதவதியாரை நோக்கி இக்கனி நீண்ட சடைமுடியை உடையவன் அருளால் கிடைத்தது என்றால் மற்றொரு கனியையும் அழைத்து தருக என்றான்.

புனிதவதியார் கணவனிடம் உண்மையை விளக்கும் நிலையில் மீண்டும் இறைவனிடம் வேண்டி நிற்க மற்றொரு கனிகரத்தில் வந்து மாயமாக மறைந்தது. இறைவனின் அருள் தன்மையை புனிதவதியாரிடம் கண்ட பரமதத்தன் தெய்வப்பெண் என்று கருதி அவரைவிட்டு நீக்கி வாழ்ந்தான்.

**பேய்வடிவம் ஏற்றல்**

புனிதவதியாரின் பக்தி தன்மையை உணர்ந்த பரமதத்தன் வேறொரு பெண்ணை திருமணம் செய்து கொண்டு தனக்கு பிறந்த பெண் குழந்தைக்கு புனிதவதி என்று பெயரிட்டு அழைத்தார். புனிதவதியாரின் உறவினர்கள் பரமதத்தன் தேடிவர "இவர் மானிடரல்லர் நற்பெருந்தெய்வம் என்றார்". அதனைக் கேட்ட புனிதவதியார் அழகுதன்மை நீங்க பேய் உருவம் அடியேனுக்கு தந்து அருள்க என சிவபெருமானிடம் வேண்ட பேய் வடிவம் கொண்டு விண்ணும், மண்ணும் வணங்கத்தக்க சிவகன வடிவம் பெற்றார் புனிதவதியார்.

**ஊன் அடை வனப்பை எல்லாம் உதறி ஏற்பு உடம்பே ஆக**

**வானமும் மண்ணும் எல்லாம் வணங்கும் பேய் வடிவம் ஆனார் (பெரிய.காரை பா.எ 49)**

பேய் உருவம் கொண்ட அம்மையாய் தலையினால் நடந்து சென்றதை கண்ட பெருமான் அம்மையே என்று அழைக்கலானார்.

**அங்கணன் அம்மையே என்று அருள் செய் அப்பா என்று**

**பங்கயச் செம்பொன் பாதம் பணிந்து வீழ்ந்து எழுந்தார் (பெரிய .காரை பா.எ 58)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

சிவஞானமும் பக்திநெறியும் பெற்ற அம்மையார் அற்புதத் திருவந்தாதி, திரு இரட்டை மணிமாலை, திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் பாடினார். இவை பதினொறாம் திருமுறையில் இடம்பெற்றதைக் குறிப்பிடத்தக்கது. அற்புதத்திருவந்தாதியில் தான் சிவனுக்கு ஆட்பட்ட நிறம், சிவனின் இயல்புகள் தோற்றப் பொலிவு குறித்து புகழ்ந்து பாடியுள்ளார்.

**முடிமேற் கொடுமதியான் முக்கணான் நல்ல**

**அடிமேற் கொடுமதியோங் கூற்றைப் படிமேற்**

**டுனியவல மாமடிமை கொண்டாடப்பெற்றோம்**

**இனியவது முண்டோ எமக்கு (அற்புதத்திருவந்தாதி பா.எண் – 69)**

**ஐந்தெழுத்தின் மகிமை**

காரைக்கால் அம்மையார் சிவபெருமானின் ஐந்தெழுத்தின் பெருமையைப் பற்றி திரு இரட்டை மணிமாலையில் எடுத்துரைக்கிறார்.

**அண்டத்தான் ஆதிரையான் ஆலயம் உண்டி கொண்ட**

**கண்டத்தான் செம்பொற் கழல் (பெரிய .காரை பா.எண் 3)**

இறைவனின் திருநாமமான ஐந்தெழத்து மந்திரத்தினை இடைவிடாமல் ஓதினால் சிவபெருமானின் அருளை பெறமுடியும் என்கிறார். சைவ சமயத்தில் பெண்கள் இறை பக்தியோடு ஆலயத் திருப்பணியில் ஈடுபட்டு இருந்தனர். அவர்களில் காரைக்கால் அம்மையாரும் ஒருவர்.

**கோவிலுக்கே தங்களை அடிமையாக்கிக்**

**கொண்டு இறைப்பணி புரிந்துள்ளனர் (திரு இரட்டை மணிமாலை பா.எ.10)**

என்று புலப்படுகிறது. காரைக்கால் அம்மையார் சிவபெருமானிடம்,

**பிறாவாமை வேண்டும் பிறப்பு உண்டேள் உன்னை**

**யெஞ்ஞான்றும் மறவாமை வேண்டும் (பெரிய .காரை பா.எ 60)**

என்று கூறுவதன் மூலம் அம்மையாரின் இறைப்பக்தியை உணர முடிகிறது.

**அம்மையார் வழிபாடு**

அறுபத்து மூன்று நாயன்மார்களில் முதன் முதலாக வணங்கப்பட்ட நாயன்மார்களில் முதன்மையானவர் காரைக்கால் அம்மையார் ஆவார்.

**தமிழ்நாட்டில் முதன் முதலில் வணங்கப்பெற்ற சைவ நாயன்மார்**

**காரைக்கால் அம்மையார் (கே.கே.பிள்ளை தமிழக வரலாறும் மக்கள் பண்பாடு ப.எண் – 312-319)**

வணிகர்கள் “காரைக்கால் பேயை” குலதெய்வமாக போற்றி வழிபட்டனர் என்று

**அம்மையாரின் சிலைகள் செம்பிலும் கல்லிலும் செய்யப்பெற்று**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**கூத்தர்பிரான் திருமுன்னர் வழிபாட்டிற்கு வைக்கபட்டன (க.த. திருநாவுக்கரசு தென் கிழக்கு ஆசிய நாடுகளில் தமிழ்பண்பாடு ப.எண் – 189)**

அம்மையாரின் வழிபாடு தமிழ்நாடு தவிற பிறநாடுகளிலும் நடைமுறையில் உள்ளது. மாங்கனி திருவிழா காரைக்காலில் கொண்டாடப்பட்ட வருகிறது.

**முடிவுரை**

வணிக குலத்தில் பிறந்து வளர்ந்த புனிதவதியார் இல்லநெறியை போன்று பக்தி நெறியை கடைபிடித்து தெய்வத்தன்மை உயர்ந்த நிலையை இவ் ஆய்வு மூலம் அறிய முடிகிறது. இறைவன் மீது கொண்ட பக்தியின் காரணமாக அம்மையார் பாடிய பாடல்கள் பக்தி இலக்கியத்திற்கு முன்னோடியாக திகழ்கிறது. இளமை பருவம் தொட்டே சிவன் மீது கொண்ட பக்தியையும் அடியாருக்கு செய்து கொண்டிருப்பது புலப்படுகிறது. தனது பக்தியின் மேன்மையால் இறைவனால் "அம்மையே" என அழைக்கப்பட்ட நிலையையும் தெய்வ நிலைக்கு உயர்ந்த நிலையையும் ஆய்வு முடிவாக தரப்பட்டுள்ளது.

**துணைநுற்பட்டியல்**

[1] புலவர் பி.ரா.நடராசன் பெரியபுராணம் மூலமும் உரையும் ,உமா பதிப்பகம்- பதிப்பு 2008.

[2].டாக்டர.எம் எஸ் சாந்தா .கன்னடத்தில் காரைக்கால் அம்மையார் வரலாறு. உலகத்தமிழராய்ச்சி நிறுவனம் சென்னை.

[3] சுப்புலெட்சுமி.ந பெரியபுராணத்தில் பெண்மை .பாரி நிலையம் சென்னை பதிப்பு1966.

[4] அ.ச.ஞானசம்பந்தன் அறுபத்து மூன்று நாயன்மார் கதைகள்.முல்லைப்பதிப்பகம் 2012.

[5] ஆறுமுக நாவலர், பெரியபுராணம், முல்லை நிலையம் சென்னை-600017,1977.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**வனிதா. "காரைக்கால் அம்மையாரின் பக்தி நெறி."** *தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்,* தொகுதி 3, சிற.இதழ் 3, தொகுதி 3, ஜனவரி 2021, பக்.414-419. டிஒஐ: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.061**

**Cite this Article in English (MLA 8 Style) as:**

**Vanitha. "Devotion of Goddess Karaikal Ammaiyar."** *International Journal of Tamil Language and Literary Studies*, Vol. 3: Special Issue - 3, Vol. 3, January 2021, pp.414-419. DOI: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.061**

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். /I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

## யுகங்கள் கடந்த காமபுரி சுயம்புநாதர்

## The Immortal Kamapuri Swambunathar

**தே.வித்யா,** முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை, அறிஞர் அண்ணா அரசு கலைக் கல்லூரி, செய்யாறு.
**D.Vidhya**, Ph.D Scholar, Full Time, Tamil Department, Arignar Anna Govt. Arts College, Cheyyar.
ORCiD: https://orcid.org/0000-0002-0634-5654
**முனைவர் கு.சீனுவாசன்,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, அறிஞர் அண்ணா அரசு கலைக் கல்லூரி, செய்யாறு.
**Dr.K.Srinivasan,** Assistant Professor, Tamil Department, Arignar Anna Govt. Arts College, Cheyyar.
ORCiD: https://orcid.org/0000-0001-8392-1662
**DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.062**

## Abstract

*Lord Chandrasekara has established as swambu in the place Kamapuri, near to Arani in Thiruvannamalai District. According to the chronology of the holy places, the God is considered Immortal and surpassed many Ages. He blesses the ones who come to his refuge. People pray the God to get his blessings in pious manner. The Mahila Tree is the holy tree of this holy place and has five Theerthas to evade the karma of the devotees. This article tries to bring down the facts about the temple and the God Shiva in Chandrsekara form.*

**Keywords:** Kamapuri, Lord Chandrasekara, Immortal, Thiruvannamalai

### முன்னுரை

திருவண்ணாமலை மாவட்டம், ஆரணிக்கு அருகில் அமைந்துள்ள காமபுரி, காமநகர் என்றெல்லாம் போற்றப்பட்ட காமக்கூரில் சுயம்புநாதராக எழுந்தருளியிருக்கிறார் சந்திரசேகரர். தலபுராணத்தின் வழியாக யுகங்களை கண்ட இறைவனாக காட்சி அளிக்கிறார். தேவர்களும், முனிவர்களும் வணங்கிய திரிபுரசுந்தரி அம்மனும், அருணகிரிநாதர் தன் திருப்புகழால் பாடப்பெற்ற சண்முகரும், முதல் தாண்டவமான சதுரத்தாண்டவத்தில் காட்சியளிக்கும் நடராஜரும் தனித்தனி சன்னதியுடன் தன்னை நாடி வரும் பக்தர்களின் குறைகளை கலைந்து, வரங்களை தருவதாக நம்பப்படுகிறது. தலவிருட்சம், மகிழமரமும், பஞ்ச தீர்த்தங்களும் ஓங்கி உயர்ந்த மதில் சுவரும் இன்றும் காட்சியளிக்கிறது.

### ஊர்-பெயர்க்காரணம்

திருவண்ணாமலை மாவட்டம் ஆரணி வட்டம் காமக்கூரில் சந்திரசேகர ஆலயம் அமைந்துள்ளது.

**நத்திதனை நினைப்பவருக் கெத்திசையுந் தொழுங்காம**
**நகரிலோங்கு முத்திதனைக் கொடுப்பவனை யிளம்பிறை**
**நாயகனடியை முன்னுவாமே (காமநகர்ப்புராணம் பாடல்-3)**
**சேலோங்கு புனல்வளங்க ளுறுங்காம புரியடியர்**
**சேவை செய்ய (காமநகர்ப்புராணம் பாடல்-4)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

காமநகர், காமபுரி என்றெல்லாம் இவ்வூருக்கு முற்காலத்தில் பெயர் இருப்பதாகக் காமநகரப் புராணம் மூலம் அறிய முடிகிறது.

**பாகேத் தேசொற் பாகத்தாளைப் பாரித்தார் நற்குமரேசா**

**பாரிற் காமத்தூரிற் சீலப் பாலத் தேவப்பெருமாளே (அருணகிரி நாதர் – திருப்புகழ்)**

அருணகிரிநாதர் திருப்புகழில் காமத்தூர் என்று குறி;ப்பிடுகிறார். பேச்சு வழக்கில் இன்று காமக்கூர் என்று அழைக்கப்படுகிறது.

**கோயிலின் அமைப்பு**

கோயிலின் முகப்பில் அரியதாகக் காணக்கூடிய நான்குநிலை ராஜகோபுரம் காட்சியளிக்கிறது. உள்ளே நுழைந்தால் கொடிமரமும், பெரிய நந்தியும் உள்ளது. விஜய விநாயகரும் அவரைத் தொடர்ந்து இருபத்தைந்து கால் மண்டபமும் கருவறையில் இறைவன் இளம்பிறையினார் என்னும் சந்திரசேகரர் சுயம்பு திருமேனியாக சதுர ஆவுடையாரில் காட்சி தருகிறார். மிகப் பெரிய சிலையாகிய துவாரபாலகரான ஜெயன் விஜயன் அருகில் எங்கும்

**காணக்கிடைக்காத நின்ற கோலத்தில் நடராஜர் நான்கு கரங்களுடன் மேல் வலது கரத்தில் உடுக்கையும், மேல் இடது கரத்தில் அக்னிஜ்வாலையும், கீழ் வலது கரத்தில் அபயஅஸ்தம், கீழ் இடது கை தொங்கவிடப்பட்ட நிலையிலும் முதல் தாண்டவமான சதுர தாண்டவத்தில் தோற்றமளிக்கிறார்… (வேலாயுதம் – தகவலாளி, காமக்கூர்)**

அதே இருபத்தைந்து கால் மண்டபத்தில் அபயவரத அஸ்டத்துடன் அன்னை அமிர்தாம்பிகை வரம் தருகிறார். சக்தியின் (அமிர்தாம்பிகை) கட்டுப்பாட்டில் இருக்கும் நவக்கிரகங்களும் பெரிய சிவன் சேர்ந்து அன்னைக்கு அருகில் இடம் பெற்றிருக்கிறது.

பிரகாரத்தில் அறுபத்து மூன்று நாயன்மார்கள் சிலையும், கோவிலின் காவல் தெய்வமாகிய சப்த மாதாக்கள் தனித்தனி சிலையாக எழுந்தருளிருக்கின்றனர். வில்வ மரத்தடியில் நாக கற்சிலைகள் பலவும் காணமுடிகிறது. அருணகிரிநாதரால் பாடப்பெற்ற வள்ளி> தெய்வானை உடனுறை சண்முகர் வீற்றிருக்கிறார். சகஸ்கரலிங்கம் (1008 லிங்கம்) பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. பாண்டசூரனை வதம் செய்து உக்கிரமான திரிபுர சுந்தரி சாந்தமாக குங்குமப்பூக்கள் நிறைந்த இவ்வனத்தில் வந்து அமர்ந்தாள். அம்மன் உக்கிரத்தை குறைக்க அத்வைத கொள்கைகளைப் பரப்பிய ஆதிசங்கரர் இத்தலத்தில் தனித்து காட்சிதரும் "திரிபுரசுந்தரி அம்பாளுக்கு ஸ்ரீ சக்கரம் நிர்மானித்து பல பூஜைகளைச் செய்து வழிபட்டுள்ளார்" (மணிகண்டன் அய்யர் - தகவலாளி சைதாப்பேட்டை)

இன்றளவும் பூஜைகள் செய்யப்படுவதை பார்க்க முடிகிறது. காஞ்சிபுரத்தில் வீற்றிருக்கும் காமாட்சி அம்மன் போலவே பத்மாசனத்தில் திரிபுரசுந்தரி எழில் கொஞ்சும் பதினாறுகால் மண்டபத்தில் வீற்றிருக்கின்றாள். அன்னைக்கு அருகில் சப்தஸ்வரங்களை உள்ளடக்கிய ஒற்றை துவார பாலகியும், எதிரில் ஸ்ரீயாளியும் காண முடிகிறது. தலவிருட்சமாக மகிழமரம் திகழ்கிறது. பரிவரமூர்த்தங்களாக நர்த்தன கணபதி, தட்சிணாமூர்த்தி, மகாவிஷ்ணு,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

பிரம்மன், விஷ்ணுதுர்கை, சண்டிகேஸ்வரர், காலபைரவர் தனித்த நிலையில் சூரியபகவானும் காணமுடிகிறது. மதில் சுவரில் 63 நாயன்மார்களை விளக்கும் சிற்பங்களும், யாளிகள் சிங்கங்கள், ரிஷபங்கள், நாட்டிய பெண்மணிகள், மகாபாரத ராமாயணக்கதை மாந்தர்களும் விநாயகர், முருகர் போன்ற கடவுள் சிற்பங்கள் காணப்பெறுகின்றன. முக்தி தரும் தலங்களில் இது ஒன்றாக கருதப்படுகிறது.

**ஓலைச்சுவடிகளும் காமநகர் புராணம்**

காமக்கூர் மங்களக் கவிராயர் திரு.கந்தப்பிள்ளையவர்கள் எழுதி வைத்திருந்த ஏட்டுப்பிரதியே மூலாதாரமாகும். கி.பி.1831-ல் அப்பு முதலியவரால் வெளிக்கொணரப்பட்டு சுந்தரப்பிள்ளை அவர்களால் கண்டறியப்பட்டது. காமநகர் புராணம் கடவுள் வாழ்த்து, புராண வரலாறு மற்றும் ஒன்பது சருக்கங்களைக் கொண்டதாக விளங்குகிறது.

**சந்திரன் பேறுபெற்ற சருக்கம்**

தக்ஷ்ஷனிடம் சாபம் பெற்ற சந்திரன் தன்னுடைய பதினாறு கலையும் தேய ஆரம்பித்த பொழுது நன்மதியின் காரணமாக இந்நகரை அடைந்து பாபந்தீர் தீர்த்தத்தை உண்டாக்கி சுயம்பு நாதரை வழிபட்டு வரும் வேளையில் இறைவன் தோன்றி அவனுக்கு அருள்புரிந்து தன்னுடைய சடைமுடியில், “அக்கலை ஒன்று மாத்திரம் என்று மழியாது என்று விடைகொடுத்து மறைந்தார்” (காமநகர்ப்புராணம் - ப.எண்.-6) அது முதல் “சுயம்பு நாதருக்கு சந்திரசேகரர் என்றும் இளம்பிறையானார் என்றும் பெயர் வழங்குகிறது” (வேலாயுதம் – தகவலாளி, காமக்கூர்)

இத்தீர்த்தத்தில் மூழ்கியவர்களுக்கு எல்லாம் பாவமும் நீங்கும் என்பது ஐதீகம். இன்று தீர்த்தத்தைப் பாப்பாத்தி குட்டை என்று பெயரளவில் மட்டுமே அவ்வூர் மக்களால் அழைக்கப்படுகிறது.

**குமாரக்கடவுள் அருள் பெற்ற சருக்கம்**

கைலாசத்தில் வீற்றிருக்கும் சிவனை தரிசிக்க வந்த பிரம்மனை முருகன் இடைமறித்து உன் தொழில் என்னவென்று வினவ, பல்வேறு கேள்விகளைக் கேட்டதற்கு மௌனமாக இருந்த பிரம்மனைச் சிறையில் அடைத்து அவர் தொழில் இவர் செய்ததை அறிந்;த சிவபெருமான் பிரணவத்தின் பொருள் யாது என முருகனிடம் வினவ, அதற்கு விடைதருவதாகக் கூறி, சீடனாக அமர்ந்து குருவாக முருகன் நின்று உபதேசித்தார். அப்படி உபதேசித்தவுடனே குமாரனைப் பார்த்து நீயெனக்கு மேல் சாமியாயிருந்து உபதேசம் செய்த காரணத்திற்காக நீ பதினாறாயிரம் பிறவியெடுக்கக் கடவதென்று சாபமிட்டார். அச்சாபம் நீங்க “இந்நகருக்கு வருகை தந்து குமாரதீர்த்தத்தை உருவாக்கி பலநெடுங்காலமாக சந்திரசேகரை வழிபட்டு வரும் நேரத்தில் உமாதேவி இறைவனிடம் முறையிட்டு சாபத்தை அழித்து மறுசாபம் கொடுக்க வேண்டும்” என்று கேட்க

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**எம்பிறானார் மனமிறங்கி அவர்முன் தோன்றி நீ போய் சீர்காழியில் பிராமணப் பிள்ளையாய் அவதாரஞ்செய்து யாம் எழுந்தருளி இருக்கும் ஆலயங்கள்தோறும் சென்று எம்மீது பதினாறாயிரம் பதிகம் பாடி எம்மை வந்து அடைவாயாக என்று விளம்பினார். (காமநகர்ப் புராணம் - ப.எண்.-7)**

இத்தீர்த்தம் செட்டியென்னும் குமாரக் கடவுளால் சிருஷ்டிக்கப்பட்டதனால் இப்போது செட்டிக்குளம் என்று வழங்குகின்றது. புராண நூலில் சான்று காட்டப்பட்டள்ளது.

**விவஸ்வான் வலம்புரிந்த சருக்கம்**

கிருதயுகத்தில் அயோத்தியை ஆட்சிபுரிந்த விவஸ்வான் என்ற மன்னனின் எதிரியாக விளங்கிய அதிசுரன் போரில் தோற்கடித்த காரணத்தினால் பல சிவாலயம் சென்று வழிபட்டு வரும்வேளையில் இந்த காமநகரை அடைந்து கார்த்திகை சோமவாரத்தில் பூச நட்சத்திரத்தில் ஒரு தீர்த்தத்;தை உண்டாக்கி முந்நூறு நாள் மூழ்கி இளம்பிறைநாதரை வழிபட்டார். “ஒரு நாள் இறைவன் கனவில் தோன்றி என் பீடத்தைப் புதுப்பித்து தருவாயாக” (காமநகர்ப்புராணம் - ப.எண்.-14) என்று அருளிச் செய்து மறைந்தார். ஆலயத்தைப் புதுப்பித்தார். அதன்பலனாக சூலாயுதத்தை வரமாகப் பெற்று எதிரியை அழித்தார். இவர் உருவாக்கிய குளத்தில் மூழ்கியவர்கள் இஷ்ட சித்தியடைவார்கள் என்பது நம்பிக்கையாகும். காலப்போக்கில் பேச்சு வழக்கில் விவஸ்வான் தீர்த்தம் என்பது வீராப்புளிக் குட்டையென்று மக்கள் அழைக்கின்றனர்.

**இரதிதேவி வரம்பெற்ற சருக்கம்**

கைலாயத்தில் கடும்தவம்புரிந்த சிவனின் யோகநிஷ்டையை மன்மதன் பஞ்சபாணங்களால் கலைத்தான். இறைவன் நெற்றிக்கண் மூலமாக அவனை எரித்து சாம்பலாக்கினான். கலங்கிய ரதிதேவி இச்சேத்திரம் அடைந்து காசியில் இருக்கும் கங்கை நதிக்கு நிகரான கமண்டல நதியில் மூழ்கி தினந்தோறும் 108 பிரதஷ்ணம் செய்தாள். பங்குனி மாதத்தில் உத்திர நட்சத்திரத்தில் கணவன் உன் கண்ணுக்கு மட்டுமே காட்சி தருவான் என்று வரம் வழங்கினார் என்று காமநகர் புராண நூல்வழி அறியலாம்.

**அத்தி மலர்ந்த சருக்கம்**

காசிக்கு சென்ற வழிபோக்கர்கள் இவ்வாலயத்தை அடைந்து வழிபாடு செய்தனர். அப்போது வழிபோக்கன் ஒருவன் அஸ்தி கலசத்தைப் பிரித்து பார்க்க அலரி மலராய் காட்சி தந்தது. இதைப் பார்த்து அதிசயப்பட்ட வழிபோக்கனுக்கு அசாரீ ஒலியாக இறைவன் காசியை போன்றே இதுவும் புனிதமான நதியாகும். எனவே, அஸ்தியை கமண்டல நாகநதியில் கரைத்துவிடு என்று கூறினார்.

**இதங்காமபுரீ காசி விஸ்வேஸோ சந்திரசேகர**
**கமண்டலத்தீகங்கா அமிர்தாம்பா அன்னபூர்ணிகா (காமநகர்ப்புராணம் - ப.எண்.-24)**

**அருச்சுனன் பாவம் தீர்த்த சருக்கம்**

மகாபாரதத்தில் பதினேழாம் நாள் போரின் பொழுது தருமரைப் பரிகாசம் செய்ததனால்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

அருச்சுனனுக்குச் சாபம் ஏற்பட்டது. இச்சாபம் நீங்க கிருஷ்ணர், அர்ஜுனனுக்கு உபயம் கூறினார். "ஜவ்வாதி மலைக்கு கிழக்கு, பாலாற்றுக்குத் தெற்கு, சேயாற்றுக்கு வடக்கு, அகத்தியர் பூசித்த முள்ளிவத்திற்கு மேற்கு இதன் மத்தியில் கமண்டல நதிக்கரையில் தேவர்களால் பூஜிக்கப்பட்ட காமபுரியென்று ஒரு தலமிருக்கிறது" அத்தலம் நினைத்தவர்க்கு நினைத்தபடி அளிக்க வல்லது. அதில் எழுந்தருளியிருக்கும் சிவபிரான் தானேயுண்டானவர். அப்பரமனுக்கு இளம்பிறைநாதனென்றும், சந்திரசேகரரென்றும் சுயம்புலிங்கேசரென்றும் பெயருண்டு. அவனுடைய பேரால் ஒரு தீர்த்தமுண்டாக்கி அதில் உற்பத்தியாகும் திருமஞ்சனத்தை இறைவனுக்கு அபிஷேகமும் செய்தும், ஒருமண்டலத்திற்கு 108 பிரதஷ்ணங்கள் செய்துவந்தால் உன் பாவம் நீங்கும் என கிருஷ்ணர் உபயம் கூறினார். அவ்வாறே செய்ததால் அருச்சுனன் பாவம் நீங்கியது.

**சோழச் சருக்கம்**

ஜெயங்கொண்ட சோழன் தலயாத்திரையாக இராமேச்சுரம், திருக்கடையூர், சிதம்பரம்> திருப்பாதிரிப்புலியூர், திருவண்ணாமலை போன்ற சிவதலங்களைத் தரிசனம் செய்துவரும் வேளையில் சந்திரன், ரதிதேவி போன்றவர்களால் பூஜித்து பேறுபெற்ற இக்காமநகரை அடைந்தான். "இறைவன் ஒருநாள் கனவில் தோன்றி ஆலயத்தை செப்பிடுவாயாக" என்று கூறினார். அம்மன்னன் கலைகளில் கைதேர்ந்த சிற்பிகளைக் கொண்டு மகாமண்டபம், கல்யாணமண்டபம், கர்ப்பகிரகம், யாகசாலை, மடப்பள்ளி முதலியவற்றைப் புதுப்பித்து சுவாமிக்கு நித்ய நிவேதனங்களுக்கு நிலங்களை வழங்கினார். ஐந்நூறு தீபமிடுவதற்காகப் புங்கம்பாடியென்னும் நகரத்தையும் தானஞ்செய்து, மேளதாளம் பூரிசின்னம் முதலிய வாத்தியங்களையும், கணிகை மாதர்கள், வேதியர் முதலியவர்களையும் இன்னும் மற்ற சிவத்தொண்டு செய்யும் பரிசனங்களையும் ஏற்படுத்தி அவரவர்களுக்கு வேண்டிய நிலங்களை வழங்கினார் என காமநகர் புராண நூல்வழி அறியலாகிறது.

**காமக்கோட்டி சருக்கம்**

காமபுரி சிவன் கோவிலுக்குப் பதினாறு கணிகை குலபெண்கள் அனுதினமும் சேவை புரிந்தார்கள். அதில் ஒருத்தி காமகோட்டியாவள். அவள் மீது மற்ற கணிகை பெண்கள் பொறாமை கொண்டனர். அதன் வெளிப்பாடாக ஒருநாள் ஒரு ஆணிடம் பேசியதைக் கண்ட மற்ற பெண்கள் அவள்மீது சோழமன்னனிடம் புகார் அளித்தனர். நீ, இனிமேல் சிவாலயத் தொண்டு செய்யக்கூடாதென்று கட்டளையிட்டான். மனமுடைந்த காமகோட்டியவள் சிவாலயம் எதிரில் நின்று "முப்புரத்தை யெரித்தது சத்தியமானால் என் முன்னிற்கவேண்டும். எமனையுதைத்தது சத்தியமானால் என் எதிர் நிற்கவேண்டும்". உன்னையறியாமல் நான் ஒரு குற்றமும் செய்யவில்லை. தேவரீரே இவ்வேளையில் காத்து ரஷிக்கவேண்டும் என்று முறையிட்டு அழுதாள். உடனே சிவபெருமான் பெண்ணே, நீ விசனப்படாதே இன்றுமுதல்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

நீயே எனக்குத்தொண்டு செய்து கடைசியில் நீயென் பாதமடையவும் அருள்புரிவோம் என்று ஆகாயத்தில் அசாரீயாக ஒலித்தார்.

**அமணச் சருக்கம்**

காலப்போக்கின் காரணமாக போதிய பராமரிப்பின்றி இருந்ததால், கந்தப்பிள்ளை அவர்களால் மூல ஓலைச்சுவடியில் படி எடுக்கப்பட்ட நூலில் இறுதிபாகம் சிதைவுநிலையில் இருந்ததாக கூறப்படுகிறது. இதுவே அமணச்சருக்கம் கிடைக்காததற்கு காரணம் ஆகும்.

**திருவிழாக்களும் வழிபாடுகளும்**

சந்திர சேகரர் திருக்கோயிலில் மாதந்தோறும் திருவிழா நடைபெறுகிறது.

**அதிவிஷேஷமாக பத்துநாள் பிரமோற்சவம் நடைபெறுகிறது. பங்குனி மாதத்தில் பஞ்சமிதிதியில் கிருத்திகை நன்னாளில் கொடியேற்றத்துடன் பிரமோற்சவம் துவங்குகிறது. அஸ்தேரயர் முதலில் பிரம்மோற்ச விழாவின் முன்னேற்பாடுகளைக் காணச்செல்கிறார். இவ்வூரில் இவரை குண்டுமணிசாமி என்று அழைக்கிறார்கள். பிறகு பஞ்சமூர்த்திகளும் திருவீதிவுலா வருகின்றனர் (வேலாயுதம் – தகவலாளி காமக்கூர்)**

(அன்னம், புலி, சிங்கம், மயில், அதிகாரநந்தி, பெரியநாக வாகனம், ரிஷப வாகனம்) போன்ற வாகனங்களில் எழுந்தருளுகிறார்.

8-ம் நாள் திருவிழா ரிஷபவாகனத்தில் சந்திரசேகரும், அமிர்தாம்பிகையும் புறப்பட்டு அரசர்கள் வழங்கிய நிவேதங்களை (நிலங்கள்) காண நடுக்குப்பம், பாளையம், முள்ளிப்பட்டு போன்ற ஊர்களுக்கு சென்று மண்டகப்படி பெற்றுக்கொள்கிறார்கள்.

9-ம் நாள் காலையில் கோவிலை அடைகிறார். அன்றே பெருந்தேரில் பஞ்சமூர்த்திகளுடன் பவனிவருகிறார். வெகு விமர்சையாக அவ்வூரில் இன்றும் இத்தேர் திருவிழா காணமுடிகிறது.

10-ம் நாளன்று திருமண வைபவம் நடக்கின்றது.

11-ம் நாள் பெரிய பூந்தேரில் திருவீதிவுலா செல்கின்றனர்.

12-ம் நாள் இறைவனுக்கும், இறைவிக்கும் ஊடல் ஏற்படுகிறது. இருவரும் தனித்து நிற்கிறார்கள். முன்பொரு காலத்தில் சுந்தரர் பிணக்கை சிவன் தீர்த்ததால் இப்பொழுது தேவார ஆசிரியரான சுந்தரர் ஊடலை தீர்க்கும் பொருட்டு செல்கிறார். அச்சமயத்தில்

**ஓலைச்சுவடி வாசிக்கப்பட்டு இறைவனின் சொத்து மதிப்பு அறிந்துகொள்கின்றனர். பிறகு சுந்தரர் அன்னையைக் கண்டு ஊடலைத் தீர்க்கிறார். இந்நிகழ்வு முத்தேர் உலா என்று அழைக்கப்படுகிறது. (வஜ்ஜிரவேல் - ஓலைச்சுவடி படிப்பவர், காமக்கூர்பாளையம்)**

**வழிபாடுகள்**

திரிபுரசுந்தரி அம்பாளுக்கு ஒவ்வொரு பௌர்ணமி தோறும் யாகசாலை பூஜையும்,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

சோடச தீபாராதனைகளும் அன்னைக்குச் செய்யப்படுகின்றன. இதைக் காணச் சுற்றுப்புறக் கிராம மக்கள் வருகை புரிகின்றனர். நின்ற கோலத்தில் சதுரதாண்டவமாடும் நடராஜனுக்குச் சித்திரையில் சஷ்டி திதியில் அபிஷேகமும், ஆனி திருமஞ்சனம், மார்கழி திருவாதிரை பூஜையும் செவ்வனே செய்யப்பட்டு வருகின்றது. அதிசய நடராஜரைக் காண மக்கள் திரள்கின்றனர். விழாக்காலங்களில் நடராஜர் முன்பு இன்றளவும் ஓலைச்சுவடி படிப்பது கண்முன் நடக்கிறது.

சுயம்பாகத் தோன்றிய இறைவனுக்குத் தினந்தோறும் அபிஷேக ஆராதனைகளும் நடைபெற்றுக்கொண்டிருக்கின்றன. ஐப்பசியில் அன்னாபிஷேகமும், கார்த்திகையில் மகாதீபமும், தை மாதத்தில் பூச நட்சத்திரத்தில் பூஜையும், மாசியில் சிவராத்திரி அன்று நான்கு கால பூஜையும் செய்யப்பட்டு வருகின்றது. பிரதி மாதந்தோறும் பிரதோஷ பூஜை நடைபெறுகின்றது. காலபைரவருக்கு தேய்பிறை அஷ்டமி திதியில் சிறப்பு வழிபாடு நடைபெறுகின்றன. அமிர்தாம்பிகைக்கு ஆடிப்பூரத்தில் வளைகாப்பு பூஜையும், நவராத்திரி திருவிழாவும் நடைபெறுகிறது. முருகனின் அவதார நட்சத்திரமான வைகாசி விசாகத்தில் இடது புறத்தில் மயிலை வாகனமாகக் கொண்ட சண்முகருக்குப் பூஜை ஆராதனைகள் நடைபெறுகிறது.

**முடிவுரை**

பழமையும், பல தனிச்சிறப்புகளையும் தன்னகத்தே கொண்டுள்ள இக்கோயில் வரலாறு இன்னும் பலர் அறியா வண்ணமாக உள்ளது மிகவும் வேதனையளிக்கக்கூடிய செய்தியாகும். தமிழக அரசால் ஏற்படுத்திய இந்த சமய அறநிலையத்துறை இக்கோயிலில் தலபுராணத்தை வெளியிட்டும், பழமைகளை பாதுகாத்தும் கோயிலை சுற்றுலா தலமாக அறிவிக்க வேண்டும் என்பது இவ்வூர் மக்களின் வேண்டுகோள் ஆகும்.

**துணைநூற் பட்டியல்**

[1] காமநகர்ப்புராணம் கந்தப்பிள்ளை, சுந்தர விநாயகர் அச்சுக்கூடம், வேலூர் – 1831
[2] திருப்புகழ் கிருபானந்த வாரியார் உரை, வானதிபதிப்பகம் சென்னை.
[3] பெரியபுராணம் ஓர் ஆய்வு. பேர.அ.ச.ஞானசம்பந்தன் கங்கை நிலையபதிப்பகம் சென்னை.
[4] பெரியபுராணம் மூலமும் தெளிவுரையும். பி.ரா.நடராசன், உமா பதிப்பகம், சென்னை.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**வித்யா & சீனுவாசன். "யுகங்கள் கடந்த காமபுரி சுயம்புநாதர்."** *தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்,* தொகுதி 3, சிற.இதழ் 3, தொகுதி 3, ஜனவரி 2021, பக்.420-427. டிஒஐ: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.062**

**Cite this Article in English (MLA 8 Style) as:**

 தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பிடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

# ஐந்திணைகளில் வழிபாடுகள்

## Worship in the Five Lands

**வா.வினுப்பிரபா,** உதவிப்பேராசிரியர் , தமிழ்த்துறை, நா.ம.ச.ச.வெள்ளைச்சாமி நாடார் கல்லூரி, மதுரை-19
**V. Vinuprabha,** Assistant Professor, Department of Tamil, NMSSVN College, Madurai-19
ORCiD: https://orcid.org/0000-0003-4568-6708
DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.063

**Abstract**

*Human life has many facets and an encyclopedia of various qualities. His virtues are the reasons for him to give up evil and live in a mature, civilized state. Sangam literature beautifully captures the lives of people full of ethical virtues. The doctrines of God were the first to bring man's energies under regulated control. Realizing that nature was intertwined with their lives, people worshiped it as a deity. Worship that originated on the basis of natural worship led to the worship of many deities over time. This article is designed to explore the importance of worship in the lives of Sangam people according to the Five Land areas as segregated by the Tamil People.*

**Keywords:** Worship, Five Lands, Tamil People

**முன்னுரை**

மனித வாழ்க்கை பல்வேறு உயர்ந்த பண்புகளைக் கொண்டது. தீமையானவற்றைக் கைவிட்டு பக்குவப்பட்ட, பண்பட்ட நிலையில் வாழ்வதற்கு அவனுடைய நற்பண்புகளே காரணங்களாக அமைகின்றன. சங்க இலக்கியங்கள் நற்பண்புகள் நிறைந்த மக்களின் வாழ்க்கையை அழகாக எடுத்தியம்புகின்றன. மனிதனின் ஆற்றல்களை ஒழுங்குபடுத்தப்பட்ட கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவர தொடங்கப்பட்டதே கடவுட் கோட்பாடுகள் ஆகும். இயற்கை தங்கள் வாழ்வோடு ஒன்றிணைந்து காணப்பட்டதை உணர்ந்த மக்கள் அதனையே தெய்வமாக வணங்கினர். இயற்கை வழிபாட்டின் அடிப்படையில் தோன்றிய இறைவழிபாடு காலப்போக்கில் பல தெய்வ வழிபாட்டிற்கு வழி வகுத்தது. ஐந்திணை மக்களின் வாழ்வில் வழிபாடுகளின் இன்றியமையாமையை ஆராய்வதாக இக்கட்டுரை அமைந்துள்ளது.

**ஐந்திணைப் பாகுபாடு**

மனித குலத்தின் கருவூலமாக இலக்கியங்கள் விளங்குகின்றன. தமிழர்களின் வீரத்திற்கும் காதலுக்கும் சிறப்பு செய்து தமிழனின் பெருமையை உலகிற்கே பறை சாற்றியவை சங்க இலக்கியங்கள். இயற்கையோடு இணைந்து தங்களுக்கென்று சிறந்த நில அமைப்பினையும் அதனை சார்ந்த வாழ்வியல் சூழல்களையும் உருவாக்கி வாழ்ந்தவர்கள் சங்கத்தமிழர்கள்.

**மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**
**சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே (தொல் பொருள் : நூ 5)**

என்று ஐந்திணை பாகுபாட்டினை தொல்காப்பியம் சிறப்பாக எடுத்துரைக்கின்றன. தாங்கள் வாழும் நில அமைப்பிற்கு ஏற்றவாறு திணை ஒழுக்கங்களையும் பண்பாட்டுக் கூறுகளையும் வகுத்தும் பகுத்தும் முறையான வாழ்க்கையை வாழ்ந்துள்ளனர்.

**இறை வழிபாடு**

தெய்வம் வேண்டியதைக் கொடுக்கும் என்ற எண்ணம் அக்கால மக்களிடையே நம்பிக்கையாய் இருந்தது. இத்தகைய தெய்வ வழிபாடுகள் அனைத்தும் மக்களின் வாழ்க்கையை ஒரு கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வாழ உற்ற துணையாய் அமைந்தன. குறிஞ்சி நில மக்கள் மலையையும் நெய்தல் நில மக்கள் கடலையும் தெய்வமாக வழங்கியுள்ளனர். தங்கள் வாழ்வியல் சூழலுக்கு அடிப்படையாக விளங்கும் இயற்கையை வழிபடும் மரபும் பண்டைத் தமிழர்களிடையே சிறப்பாகக் காணப்பட்டது.

ஊர் பேர் குணங்குறியற்று மனமொழி மெய்களைக் கடந்து எங்கும் நிறைந்திருத்தல், எல்லாம் அறிந்திருத்தல், எல்லாம் வல்லதாதல், என்றும் உண்மை, அருள்வடிவுடைமை, இன்பநிலை நிற்றல், ஒப்புயர்வின்மை, மாசுமறுவின்மை ஆகிய எண் குணங்களையுடையதாய் எல்லாவுலகங்களையும் படைத்துக் காத்தழித்து வரும் ஒருபரம் பொருளுண்டென்று நம்பி, அதனை வழிபடுவதே கடவுள் நெறியாம் என்று மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்கள் “பண்டைய தமிழ் நாகரிகமும் பண்பாடும்” என்ற நூலில் கடவுள் குறித்துக் குறிப்பிடுகின்றார்.

சங்ககால மக்கள் தான் வழிபட்ட தெய்வமே தங்களுக்கு வலிமையைத்தரும் என்று எண்ணி வாழ்ந்தனர் எச்செயலைத் தொடங்கும் முன்பும் தெய்வத்திற்கு வழிபாடு நிகழ்த்தியுள்ளனர் இல்லில் அமைந்த தெய்வத்திற்கு மாலைக்காலத்தில் பெண்கள் விளக்கேற்றி நெல்லும் மலரும் தூவி அவரவர் விருப்பத்திற்கேற்ப வேண்டுதலாகவே செய்துள்ளனர். **பூவினர் புகையினர் தொழுவனர் பழிச்சி (ம.கா467)** என்று மதுரைக்காஞ்சி குறிப்பிடுவதிலிருந்து இறைவழிபாட்டில் மலர் முக்கிய இடம் பெற்றிருந்ததை அறிய முடிகின்றது. ஐயன் திருவள்ளுவரும் பிறவியாகிய பெருங்கடலைக் கடப்பதற்கு இறைவனின் துணை தேவை என்பதை,

**பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**
**இறைவனடி சேரா தார் (குறள் 10)**

என்று குறிப்பிட்டுள்ளார் பண்டைத் தமிழர்களின் வழிபாடு பெரும்பாலும் அந்தந்த நிலம் சார்ந்த வழிபாடாக காணப்படுகின்றது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**குறிஞ்சி**

குறிஞ்சி நிலத்திற்குரிய தெய்வமாக முருகன் குறிப்பிடப்படுகின்றது. தெய்வத்தைப் போற்றுதல் என்பது அச்சத்தாலும் நம்பிக்கையாலும் மக்களிடையே ஏற்பட்ட ஒன்று தகாத செயல்கள் செய்தால் தெய்வம் வருத்தும் என்று நம்பினர் அதனால் தான் மலை, காடு, மரம், கடல் முதலியவற்றிலெல்லாம் தெய்வம் உறைவதாக எண்ணி வழிபாடு நிகழ்த்தினர்.

குறிஞ்சிப்பாட்டில் தன் மகளின் உடல் நோய்க்கான காரணமறியாத தாய் இது தெய்வத்தால் ஏற்பட்ட நோய் என்று எண்ணி இறைவனைப் போற்றியும் வாழ்த்தியும் வணங்கியும் பலவிதமான மலர்களைத் தூவி வழிபட்டும் நறுமணப் பொருள்களைக் காணிக்கையாகச் செலுத்தியும் வழிபட்டதை கபிலர்,

**விறல்இழை நெகிழ்ந்த வீவருங் கடுநோய்**
**அகலுள் ஆங்கண் அறியநர் வினாயும்**
**பரவியுந் தொழுதும் விரவுமலர் தூயும்**
**வேறுபல் லுருவிற் கடவுட் பேணி (குறி.பா. 3-6)**

என்று குறிப்பிடுகின்றார். வழிபாட்டின் போது மக்கள் தங்களால் இயன்ற பொருள்களை கடவுளுக்குப் படையலாகப் படைத்துள்ளனர். குறவன் ஒருவன் தன் புனத்தில் முதலில் விளைந்த தினைக்கதிரைக் கடவுளுக்குப் படைப்பதாக வேண்டிக் கொள்கிறான். இந்நிலையில் அங்கு வந்த மயிலானது அதனை உண்டு வெறியாடியதை குறுந்தொகை,

**பனவன் றுடவைப் பொன்போற் சிறு தினைக்**
**கடியுண் கடவுட் கிட்ட செழுங்குரல்**
**அறியா துண்ட மஞ்ஞை யாடுமகள்**
**வெறியுறு வனப்பின் வெய்துற்று நடுங்கும் (குறு 105: 1-4)**

என்று குறிப்பிடுகின்றது.

குறிஞ்சி நில மக்கள் முருகனுக்கு வெறியாட்டு நடத்தி ஆட்டுக்குட்டி பலியிட்டு வணங்கியதை,

**மறிக்குரல் அறுத்துத் தினைபிரப் பிரிஇச்**
**செல்லாற்றுக் கவலை பல்லியங் கறங்கத்**
**தோற்றம் அல்லது நோய்க்கு மருந்தாகா (குறு 263: 1-3)**

என்று நோய்தீர்க்கும் மருந்தாகக் கருதியதை குறுந்தொகை குறிப்பிடுகின்றது. மலையில் வாழும் குறவன் ஒருவன் தன் பயிர் செழிக்க வருணனை வேண்டுவதை,

**குன்றக் குறவன் ஆர்ப்பின் எழிலி**
**நுண்பல் அழிதுளி பொழியும் (ஐங் 251: 1-2)**

என்ற ஐங்குறுநூற்றுப் பாடல் எடுத்துரைக்கின்றது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**முல்லை**

ஆலமரத்தடியில் உள்ள தெய்வங்களுக்கு வழிபாடுகள் செய்த பின்னர் தொழுவினுள் சென்றதை

**துறையும், ஆலமும் தொலிவலி மராஅமும்**

**முறையுளி பராஅய்ப் பாய்ந்தன், தொழூஉ (கலி 101: 13-14)**

என்று கலித்தொகை குறிப்பிடுகிறது. முல்லைப்பாட்டில் திருமால் மாபலிச் சக்கரவர்த்தியிடம் மூன்றடி நிலம் கேட்டு விண்ணுக்கும் மண்ணுக்குமாக அவதரித்த செயலை மாலைக் காலத்தில் பெய்த மழைக்கு உவமிக்கிறார். நெல்லுடன் முல்லை மலரைத் தூவி இறைவனை வழிபட்டதை,

**நாழி கொண்ட நறுவீ முல்லை**

**அரும்பவிழ் அலரி தூஉய்க்கை தொழுது (முல் பா 7- 11)**

என்று முல்லைப்பாட்டு குறிப்பிடுகிறது.

**மருதம்**

வயலும் வயல் சார்ந்த மருத நிலத்தில் மக்கள் தங்கள் வயலை செழிப்படையச் செய்யும் நீர்த்துறைகளை கடவுளாக வணங்கினர் என்பதை,

**நிலைத்துறைக் கடவுட்கு உளப்பட ஓச்சி (அக 156 : 15)**

**உண்டுறை யணங்கிவ ளுறை (ஐங் 28 : 1)13**

**துறையெவ ணைங்கும் யாமுற்றே நோயே (ஐங் 53 :1)**

என்று அகநானூறும், ஐங்குநுறூறும் சிறப்பாக எடுத்துரைக்கின்றன. மருதநில மக்கள் தங்கள் நிலத்துக்குத் தெய்வமாகிய இந்திரனுக்கும் விழா எடுத்து வழிபாடு நிகழ்த்தியதை, **இந்திர விழவிற் பூவி னன்ன (ஐங் 62 : 1)** என்ற ஐங்குறு நூற்றுப் பாடல் எடுத்துரைக்கின்றது. மருத நில மக்கள் கடலையும் தெய்வமாக வணங்கியதை, தண் பெரு பௌவம் அணங்குக தோழி (குறு 164 : 4) என்று குறுந்தொகை குறிப்பிடுகிறது.

**நெய்தல்**

கடலும் கடல் சார்ந்த நெய்தல் நிலத்தில் மக்கள் பனைமரத்தில் கடவுள் இருப்பதாக எண்ணி வழிபாடு நிகழ்த்தியதை,

**தொன்றுறை கடவுள் சேர்ந்த பராரை**

**மன்றப் பெண்ணை வாங்குமடற் குடம்பைத்**

**துணைபுணர் அன்றில் உயர்வுக்குரல் கேட்டொறும்**

**துஞ்சாக் கண்ணள் துயரடச் சாஅய்**

**நம்வயின் வருந்தும் நன்னுதல் என்பது**

**உண்டு கொல் வாழி தோழி (நற் 303, 3 - 8)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

என்ற நற்றிணைப் பாடல் உணர்த்துகிறது. தங்கள் தொழிலுக்கு அடிப்படை ஆதாரமாகத் திகழும் கடலையும் வழிபட்டனர் என்பதை,

**பெருங்கடல் தெய்வம் (கலி.131 : 1)**

**பெருங்கடற் பரப்பின் அமர்ந்துறையணங்கு (நற்.155.6)**

என்று கலித்தொகையும் நற்றிணையும் குறிப்பிடுகின்றன. ஞாயிற்றினை ஆண் தெய்வமாகவே கருதி வழிபட்டுள்ளனர்.

**குணகடல் இவர்ந்து குரூ உக்கதிர் பரப்பிப்**
**பல்கெழு செல்வன் குடமலை மறையப்**
**புலம்புவந் திறுத்த புன்கண்மாலை (நற்.215 : 1 -3)**

**பாலை**

பாலை நில மக்கள் தங்கள் நிலத் தெய்வமான கொற்றவைக்கு காப்பு கட்டி, பலி கொடுத்து வழிபடும் பழக்கம் உடையவர்களாக விளங்கியதை கொற்றனார் என்னும் புலவர் தம் பாடலில் சிறப்பாகக் கூறியுள்ளதை,

**விடர்முகை அடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்**
**கடனும் பூணாம் கைந்நூல் யாவாம்**
**புள்ளும் ஓராம் விரிச்சியும் நில்லாம் (குறு 218 1- 3)**

என்று குறுந்தொகைப் பாடல் குறிப்பிடுகின்றது. பாலை நிலத்தில் சிவன், சூரியன், காமன் முதலிய கடவுளர்களின் வழிபாடுகளும் நிகழ்ந்துள்ளன.

**மல்கிய துருத்தியுள் மகிழ்துணைப் புணர்ந்து அவர்**
**வில்லவன் விழவினுள் விளையாடும் பொழுதன்றோ (கலி -35,13-14)**

என்று கலித்தொகை குறிப்பிடுகிறது.

**உறலியாம் ஒளிவாட, உயர்ந்தவன் விழவினுள்**
**விறலிழை யவரோடு விளையாடு வான்மன்னேர் (கலி 30 : 13-14)**

காமனுக்கு விழா எடுக்கும் நாளில் கணவன் மனைவி அன்புடன் இன்பமாக இருத்தல் வேண்டும் என்பதையும் இவ்விழாவானது இளவேனிற்காலத்தில் கொண்டாடப்பட்டதையும் கலித்தொகை சிறப்பாக எடுத்துரைக்கின்றது.

**முடிவுரை**

பழந்தமிழரின் கடவுள் கோட்பாடு என்பது ஒரு கலப்பினக் கோட்பாடாகவே காட்சி தருகின்றது. இங்கு இயற்கை வழிபாடும் இணைந்தே காணப்படுகிறது. தெய்வம் வேண்டியதைக் கொடுக்கும் எண்ணம் அக்கால மக்களிடையே நம்பிக்கையாய் இருந்ததாலே பண்டைத் தமிழர்கள் பண்பட்ட வாழ்க்கையை வாழ்ந்து அவர்களின் பண்பாட்டை உலகறியச் செய்தனர்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**பார்வை நூல்கள்**

[1] இளம்பூரணர் (உ.ஆ), - தொல்காப்பியம் பொருளதிகாரம், திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சிந்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிட், 522, டி.டி.கே. சாலை, சென்னை – 18.

[2] சோமசுந்தரனார், பொ.வே. (உ.ஆ). "பத்துப்பாட்டு- 2ம் பாகம்", கழக வெளியீடு, 1966.

[3] தமிழண்ணல். *தொல்காப்பியம் மூலமும் கருத்துரையும்.* மீனாட்சி புத்தக நிலையம், மயூரா வளாகம், 48, தானப்ப முதலி தெரு, மதுரை - 625 001.

[4] புலியூர்க்கேசிகன். *சங்க இலக்கியம் உரை*, சாரதா பதிப்பகம், முதற்பதிப்பு – 2012.

[5] திருவள்ளுவர். *திருக்குறள்*, திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட், சென்னை – 1, 1982.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**வினுப்பிரபா. "ஐந்திணைகளில் வழிபாடுகள்."** *தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 3, சிற.இதழ் 3, தொகுதி 3, ஜனவரி 2021, பக்.428-433. டிஒஐ: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.063**

**Cite this Article in English (MLA 8 Style) as:**

**Vinuprabha,. "Worship in the Five Lands."** *International Journal of Tamil Language and Literary Studies*, Vol. 3: Special Issue - 3, Vol. 3, January 2021, pp. 428-433. DOI: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.063**

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். /I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

# ஆசீவக விழுமியங்கள்
## The Virtues of Aaseevagam

**சு.வினோதா**, உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, சோனா கலை மற்றும் அறிவியல் கல்லூரி, சேலம் – 5.
**S.Vinotha**, Assistant Professor in Tamil, Sona College of Arts and Science, Salem – 5
ORCiD:https://orcid.org/0000-0001-8868-2314
**DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.064**

**Abstract**

*Aaseevagam was one of the oldest Tamil Religion. It has no idolatry. Now a day it has no more followers at all. Makkali Kosalar was the originator of this sect. He guided the life philosophy among the people of ancient Tamil Nadu. In Tamilnadu, Ayyanar is a deity of Tamilians. Ayyapan is also a Gos in present day Kerala. Makkalikosalar is called Ayyanar in the recent days. Elephant is the Logo of this religion. It exhibits the idea of strength, courage, patience and collective life to the followers. The eighteen steps of the Sabarimalai Ayyapan Temple resemble the six birth levels of Aaseevagam. So, Aaseevagam was not fully destroyed but it has transferred in to Ayyanar and Ayyapan worship and it becomes the theme of the study.*

**Keywords:** Aaseevagam, Ayyanar Ayyapan Worship, Elephant Logo, Six Birth Stage

**முன்னுரை**

சமூகம் கடந்து வந்த வாழ்க்கைப்பாதையின் தடங்களாக அமைவன வரலாறுகளே. அத்தகைய வரலாறுகள் ஆளும் ஆட்சியாளர்கள் ஆதிக்கவர்க்கத்தினர் கைகளால் எழுதப்படும் பொழுது சற்று கூட்டியும் குறைத்தும் எழுதும் சூழல் ஏற்பட்டு உண்மை வரலாறுகள் மறைக்கப்படுகின்றன. சில சூழல்களில் போற்றுவாரின்றி தானே அழியும் நிலைகளும் இயல்பாகின்றன. அப்படிப்பட்ட வரலாறுகளுள் 'ஆசீவகம்' என்னும் இந்து சமயமும் மீட்பாரின்றி அழிந்துபோயுள்ளது. தற்கால ஆய்வாளர்களால் இலக்கியங்களிலும் கல்வெட்டுகள் செப்பேடுகள் போன்ற வரலாற்று ஆதாரங்கள் மூலமாகவும் அச்சமயம் அதன் வழிபடு முறை, கொள்கைகள், நம்பிக்கைகள் மீட்டெடுக்கப்பட்டு வருகின்றன. கிடைத்த சான்றாதாரங்களின் அடிப்படையில் வரையறுக்கப்பட்டுள்ள செய்திகளைக் கொண்டு ஆசீவக சமயத்தின் விழுமியங்களை அறிவதாக இக்கட்டுரை அமைகின்றது.

**ஆசீவக சமயம் - ஓர் அறிமுகம்**

இந்து சமயம் வைதீகம் சார்ந்தது என்றும் அவைதீகம் சார்ந்தது என்றும் இரண்டாகப் பார்க்கப்படுகின்றது. வைதீகம் என்பது வேதத்தின் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டது. அவைதீகம் எனப்படுவது வேதத்தைச் சாராமல் மெய்யியல் அடிப்படையில் உருவ வழிபாடற்ற வாழ்க்கைமுறைகளை அமைத்துக் கொள்வது. இந்தியாவின் அவைதீக சமயங்களாகக் கருதப்படுபவை சமணம், பௌத்தம், ஆசீவகம் என்னும் மூன்றே. இம்மூன்றும் ஏறக்குறைய ஒரே காலகட்டத்தில் (கி.மு.5ம் நூற்றாண்டு) தோன்றி மக்கள் மத்தியில் தத்தம் கருத்துகள், நம்பிக்கைகளைப் பரப்பி வந்தவை. அவற்றுள் ஆசீவகம் என்றும் ஆஜீவகம் என்றும் அழைக்கப்படும் சமயம் இன்று வரலாற்றுப்பதிவுகள் ஏதுமின்றி அழிந்துவிட்டது. அச்சமயத்தை எதிர்த்த பரசமயங்கள் பதிவு செய்த தகவல்களின் அடிப்படையில் தான் அதன் மூலத்தைத் தேடும் முயற்சி செயல்வடிவம் பெற்றுள்ளது.

**மக்கலிக் கோசாலர் - சொற் பொருள் ஆய்வு**


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

'ஆசீவகம்' என்னும் சமயத்தை மக்கலி என்பவர் தோற்றுவித்ததாக அறியப்படுகின்றது.. இவர் பெயர் குறித்த செய்திகள் தெளிவாக அறியப்படாத நிலையில் பல்வேறு கருத்துகள் ஆய்வுலகில் உலவுகின்றன.

மக்கலி மாட்டுத்தொழுவத்தில் பிறந்தார். எனவே மாட்டுத்தொழுவத்தை உணர்த்தும் கோசாலி என்ற சொல்லை இணைத்து மக்கலிக்கோசாலர் என்று அழைக்கப்படுகின்றார் என்றும், வடநாட்டில் யாசகம் பெற்று வாழும் ஓர் இனத்தவருக்கு 'மக்கலி என்று பெயர். எனவே அவ்வினத்தைச் சார்ந்தவர் என்பதால் இவர் 'மக்கலி புத்திரர்' என்று அழைக்கப்படுகின்றார் என்றும், 'மக்கலி' என்பவரின் மகன் என்பதால் 'மக்கலி புத்திரர்' என்று அழைக்கப்பட்டார் என்றும், ஆசீவக சமயத்தை ஆராய்ந்த வரலாற்றாய்வாளரான மயிலை சீனி வேங்கடசாமி 'மக்கலிக் கோசாலர்' பெயர் குறித்த கருத்துகளை முன்வைக்கின்றார் -1. மேலும் இவர் தமிழ்நாட்டைச் சார்ந்தவர் என்ற கருத்தும் வலிமையாகப் பதிவாகியுள்ளது.

**ஆசீவகம் சமணத்துடன் கொண்ட தொடர்பு**

ஆசீவக மதத்தைத் தோற்றுவித்த மக்கலிக் கோசாலர் சமண சமயத்தின் இருபத்தி நான்காவது தீர்த்தங்கரரான மகாவீரரின் சமகாலத்தவர். மேலும் மக்கலிக் கோசாலர் மகாவீரரின் கொள்கைகளால் ஈர்க்கப்பட்டார். அவரோடு நட்பு பூண்டு அவரது கொள்கைகளைத் தானும் பின்பற்றி வாழ்ந்திருக்கின்றார். ஒரு கட்டத்தில் இருவருக்கும் இடையில் ஏற்பட்ட கருத்து முரண் காரணமாக அவரைப் பிரிந்து ஆசீவகத்தைத் தோற்றுவித்ததாக வரலாற்று ஆய்வுகள் எடுத்துரைக்கின்றன. – 2

**மகாவீரரோடு ஏற்பட்ட கருத்து முரண்**

ஆசீகத்தைத் தோற்றுவித்த மக்கலிக் கோசாலருக்கும் சமண சமயத்தின் மகாவீரருக்கும் இடையில் கருத்து முரண் ஏற்பட்டுள்ளது. மக்கலிக்கோசாலர் சோழ நாட்டைச் சார்ந்த போர்த்தளபதி எனவே ஒரு போர் வீரனான மக்கலிக்கு மகாவீரரின் கொல்லாமை குறித்த கருத்தில் ஈடுபாடோ நம்பிக்கையோ ஏற்படவில்லை. எனவே தான் மற்கலிக் கோசாலர் மகாவீரரை விட்டுப் பிரிந்தார் என்பது பரவலான கருத்தாக அமைகின்றது.

**ஆசீவக மதக்கொள்கை**

ஆசீவகர்களின் கொள்கைகள் பெரும்பாலும் சமணத்தை ஒட்டியே காணப்படுகின்றன. அணுக்களைப் பற்றி முதன்முதலில் பேசியவர்கள் அசீவகர்களாகவே இருந்திருக்கின்றனர். நிலம், நீர், காற்று, ஆகாயம், நெருப்பு ஆகிய ஐவகை அணுக்களையும் அறுவகைப் பிறப்புநிலைகளையும் பற்றிய கொள்கை உடையோராக ஆசீவகர்கள் அடையாளப்படுகின்றனர். மேலும் அவ்வறுவகைப் பிறப்பையும் அடையாளப்படுத்தும் வகையில் அவ்வப்பிறப்பிற்கேற்ப கருமை, நீலம், செம்மை, பொன்மை, வெண்மை, மிகுவெண்மை என்னும் ஆறு நிறங்கள் அம்மனிதரின் சுற்று வட்டத்தில் (AURA) காணப்படும் என்பது ஆசீவகர்களின் நம்பிக்கைகளாகும். – 3 ஒரு நூல்பந்திலுள்ள நூலின் நீளம் ஒரு குறிப்பிட்ட அளவில் முடிந்து போகும். அதைப் போலவே மனித உயிர்களும் அதற்கென விதிக்கப்பட்ட காலம் மட்டுமே உயிர் வாழும் என்பதும் ஒருயிர் நாலு லட்சம் மகா கல்பகாலம் வரை வாழ்ந்து உழன்று இறுதியில் வீடுபேறு அடையும் என்பதும் அவர்களுடைய நம்பிக்கைகளுள் ஒன்றாகும்.

**ஆசீவகம் - ஆருகதமும் வேறுபட்டது**

ஆசீவக சமயத்தையும் ஆருகத சமயத்தையும் ஒன்றெனக் கொள்வோரும் இரண்டும் தொடர்பற்றது என எண்ணுவோரும் அவரவருக்குத் தெரிந்த வகையில் கருத்துரைத்துள்ளனர்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

பல நூல்களிலும் இது தொடர்பாக சான்றுகள் கிடைத்துள்ளன. மணிமேகலை, நீலகேசி, ஆகிய பௌத்த, சமணக் காப்பியங்கள் மேற்கண்ட இரண்டு சமயங்களையும் வேறுவேறானவை என்று கூறியுள்ளன. மணிமேகலைக் காப்பியத்தில் இடம்பெற்றுள்ள ‘சமய கணக்கர் தம் திறம் கேட்ட காதை’ என்னும் பகுதியில் மணிமேகலை வேற்று சமயப் பெரியோர்களிடம் பௌத்த சமயக் கருத்துகளே உலகில் சிறந்தது என்னும் கருத்தை முன்வைத்து உரையாற்றுகின்றாள். அவ்வாறு அவளோடு வாதிடுவோரில் ஆசீவக சமயத்தைச் சார்ந்த பெரியோர்களும் ஆருகர்களும் இடம்பெற்றதாக மணிமேகலைக் காப்பியம் பதிவு செய்துள்ளது. – 4 இதே போன்று நீலகேசி என்னும் சமணக்காப்பியத்திலும் நீலகேசி என்னும் சமண பெண்துறவி சமண சமயக்கருத்திற்கு ஆதரவாகப் பிற சமயப் பெரியோர்களிடம் வாதம் புரிந்து வென்றதாக இடம்பெற்றுள்ளது – 5 இதன் மூலம் மணிமேகலை மற்றும் நீலகேசி ஆகிய இரண்டு காப்பியங்களும் ஆசீவகம் ஆருகதம் என்னும் இரண்டு சமயங்களையும் வேறுபட்ட சமயங்களாகவே பார்க்கின்றன என்பதை அறியமுடிகின்றது.

**ஆசீவகம் - ஆருகதமும் ஒன்றே**

ஆசீவகமும் ஆருகதமும் வேறுபட்ட சமயங்கள் என்று பேசிய இலக்கியங்கள் போலவே இரண்டும் ஒன்றுபட்டது என்று கருத்துரைக்கும் நூல்களும் இருக்கின்றன. தக்கயாகப்பரணி என்னும் நூலுக்குத் தோன்றிய உரை, சிவஞான சித்தியார் என்னும் சைவ சமய நூல், திவாகர நிகண்டு, பிங்கல நிகண்டு ஆகிய நிகண்டுகள் என்னும் இவை அனைத்தும் ஆசீவகமும் ஆருகதமும் ஒன்றே என்றும் ஆசீவகம் ஆருகதத்தின் ஒருபிரிவு என்றும் நிறுவியுள்ளன. ஆனால் சமயங்களின் வரலாற்றை ஆராய்ந்த மயிலை சீனிவேங்கடசாமி அவர்கள் மேற்கண்ட இரண்டு சமயங்களும் வெவ்வேறானவை என்றும் பிற்காலத்தில் தோன்றிய நூல்கள் கூறியுள்ள கருத்துகள் பொருத்தமற்றவை என்றும் முடிவு கூறியுள்ளார் - 6

**ஆசீவகரை ஆருகதர் என்று கூறக்காரணம்**

பிற்கால இலக்கியங்களும் நிகண்டுகளும் ஆசீவகர்களை ஆருகதர்கள் எனக் கருதின. இரண்டு சமயங்களின் கொள்கைகளும் பெரும்பாலும் ஒன்றுபட்டிருத்தலே இதற்கான காரணமாகும். நாள்பட குளிக்காமல் அழுக்குடம்போடு இருத்தல், உடையின்றி திசையையே ஆடையாகக் கருதி இருத்தல் போன்ற பழக்கங்களை இருவருமே வழக்கமாகக் கொண்டிருந்தனர். எனவே தான் தமிழகத்தில் மட்டுமின்றி இந்தியாவின் அனைத்துப் பகுதிகளிலும் ஆசீகர்கள் ஆருகதர்களின் ஒரு பிரிவினர் என்ற கருத்தே நிலவியது.

**ஆசீவகர்களை அடையாளம் காட்டிய மூலங்கள்**

ஆசீவகம் இன்று அழிந்துபட்ட மதங்களுள் ஒன்றாகிவிட்டது. அதன் கொள்கைகள், கோட்பாடுகள், நம்பிக்கைகள், வழிபடு முறை போன்ற எவையும் எங்கும் பதிவு செய்யப்பட்டிருக்கவில்லை. தற்காலத்தில் அவர்களைப் பற்றிய செய்திகளாகக் கிடைக்கக் கூடியவை அனைத்துமே அச்சமயத்தை எதிர்த்து நின்ற சமயங்களின் பதிவுகளே ஆகும். கௌதம புத்தர் ஆசீவக சமயத்தின் தோற்றுநரான மக்கலிக் கோசாலரை ஆற்றின் முகத்துவாரங்களில் மீன் பிடிக்கும் வலைஞனைப் போல் எங்கு போய் மக்களைப் பிடித்தால் அவர்களைப் பிடிக்கலாம் என்பதறிந்தவராக உள்ளார் என்று கருத்துரைத்ததாக நூல்கள் சான்றுரைக்கின்றன.

**சிலம்பில் ஆசீவகர் பற்றிய குறிப்பு**

இளங்கோவடிகளால் இயற்றப்பட்ட சமண சமயக் காப்பியமான சிலப்பதிகாரத்தின்


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

வஞ்சிக் காண்டத்தில் ‘நீர்ப்படைக்காதை’ என்னும் பகுதியில் கண்ணகியும் கோவலனும் இறந்த பிறகு கண்ணகியின் தந்தையாகிய மாநாய்கன் வாழ்வை வெறுத்துத் தனது செல்வத்தைத் தானம் செய்துவிட்டு நிறைவில் ஆசீவக சமயத்தைச் சார்ந்ததாக செய்தி இடம்பெற்றுள்ளது.

“கண்ணகி தாதை கடவுளர் கோலத்துத்
தண்ணலம் பெருந்தவத்து ஆசீவகர் முன்
புண்ணிய தானம் புரிந்து அறம் கொள்ளவும்” – 7

என்னும் சிலப்பதிகார வரிகள் அதனை உணர்த்துகின்றன.

**நீலகேசியில் ஆசீவகம்**

நீலகேசி சமண சமயக் காப்பியமாக இருப்பினும் அதில் ஆசீவக சமயம் பற்றிய சிறுபான்மையான செய்திகள் இடம்பெற்றுள்ளன. ஆசீகவத்தின் தலைவர்கள் தமிழகத்தைச் சார்ந்த சமதண்டம் என்னும் ஊரில் இருந்ததாக இந்நூல் ஒரு வரலாற்றுச் செய்தயை பதிவு செய்துள்ளது.

**ஆசீவகத்தில் ஐயனார்**

ஆசீவகத்தைத் தோற்றுவித்த மக்கலிக்கோசாலர் முதலாகிய மூவரைத் தமிழ்நாட்டில் இன்று குலவழிபாடாக விளங்கும் ஐயனார் வழிபாட்டோடு தொடர்புப்படுத்தி ஒற்றுமை கண்டுள்ளது தமிழ் ஆய்வுலகம். இன்று வழிபாடு செய்யபடும் ஐயனார்களை மூவராக வேறுபடுத்தி ஒருவர் தர்மசாஸ்தா என்றும் இரண்டாமவர் பூரணம் பொற்கலை சகிதம் அமர்ந்திருக்கும் ஐயனார் என்றும் மூன்றாமவர் அடைக்கலம் காத்த ஐயனார் என்றும் வரையறுத்துள்ளனர்.

**தர்மசாஸ்தா**

ஆசீவகத்தைப் படைத்துக் காத்த மற்கலி முதலியோரை ஐயனார் வழிபாடாகக் கொள்கிறது தமிழ் மரபு. அம்மூவருள் மற்கலியே தர்மசாஸ்தா ஆவார். வேளிர் மரபில் பிறந்தவர். சிற்றரசர். துறவியான பின் சாத்தன் எனப்பட்டார். சாத்தன் என்ற பெயரைச் சாத்தா என்றாக்கிப் பின்னர் சாஸ்தா என்று இன்றளவும் அழைக்கப்பட்டு வருகின்றார். அய்யன் என்றும் அழைப்பதுண்டு. திரு.நெடுஞ்செழியன் அவர்கள் பெரியபுராணத்தில் இடம்பெறும் வெள்ளானைச் சருக்கத்தின் வழி இவ்வையனாரின் பிறப்பிடம் திருச்சி மாவட்டம் சமயபுரம் அருகேயுள்ள திருப்பட்டூர் என்னும் இடம் என்று கண்டறிந்து கூறியுள்ளார். – 8

**பதினெட்டு படி தத்துவம்**

ஐயப்பன் கோவில்களில் பதினெட்டு படி அமைந்திருக்கும். இந்தப் பதினெட்டுப்படிகளை ஏறிக் கடந்த பிறகு தான் இறைவனாகிய ஐயப்பனைக் காணமுடியும். பதினெட்டுப்படி தத்துவம் என்பதும் ஆசீவகர்களின் பிறப்பு அடிப்படையிலான வண்ணக் கோட்பாட்டுப் படிநிலைகளின் குறியீடே ஆகும்.

- முதல் ஐந்து படிகள் - மெய், வாய், கண், மூக்கு, செவியால் ஏற்படும் தீமைகளிலிருந்து தம்மைக் காத்தல்
- ஆறு முதல் பதின்மூன்று படிகள் - எட்டு விதமான ஆசைகளான மண், பொன், பெண், புகழ், பணம், பதவி, உடல், சுகம், தகுதிக்கு மீறிய எண்ணம்
- பதினான்கு முதல் பதினாறு வரையுள்ள படிகள் - முக்குணங்கள். (சாந்தம், வீரம், சோம்பல்)
- பதினேழாம் படி – அறியாமை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

- பதினெட்டாம்படி – அறிவு

ஆகிய பதினெட்டு தீய குணங்களை எவனொருவன் விட்டொழிக்கிறானோ அவனே கடவுள் நிலைக்கு உயர்கிறான். ஐயப்பன் வழிபாட்டின் தத்துவம் 'நீயே கடவுள்' (தத்வமஸி) என்பதாகும். இத்தகைய கடவுள் வழிபாடற்ற வாழ்க்கையை வழிகாட்டும் சமயமாகவே ஆசீவகம் அறியப்படுகின்றது.

**பூரண புஸ்கலை சகிதமான ஐயனார்**

இரண்டாவது ஐயனார் பூரணம் புஸ்கலை சகிதமாக அமர்ந்திருக்கும் ஐயனார். மற்கலி கையில் செண்டாயுதம் ஏந்தியிருப்பார். இன்றைய வழிபாட்டில் காணப்படும் ஐயனாரி;டமும் செண்டாயுதத்தைப் பார்க்க முடிகிறது.

**அடைக்கலம் காத்த ஐயனார்**

மூன்றாவது ஐயனார் அடைக்கலம் காத்த ஐயனார் ஆவார். இவர் பாண்டிய நாட்டின் போர்த்தளபதியாய் இருந்து நிறைவில் துறவு பூண்டவர். இவரது இருபுறமும் வெள்ளை யானைகளைப் பார்க்க முடிகிறது.

**ஐயனார் கோவில்களில் யானை**

பெரும்பாலும் ஐயனார் கோவில்களில் வெள்ளை யானை சிலைகளைப் பார்க்க முடியும். இங்கு யானை என்பது ஆசீவக சமயத்தின் அடையாளமாகவே கொள்ளப்படுகின்றது. யானை விலங்கினங்களில் அறிவார்ந்தது. அது வேகமாக எதையும் கற்றுக் கொள்ளும். நினைவாற்றல் மிகுந்தது. பொறுமை குணத்தது. மனவலிமை மிக்கது. குழுவாக இயங்கும் இயல்பு கொண்டது. இப்படிப்பட்ட யானையின் திறன்களை ஒரு மனிதன் பெறும் போது தான் ஆசீவகத்தின் நிற அடிப்படையிலான பிறப்புக் கோட்பாடான ஐந்து நிலைகளைக் (கருமை, நீலம், செம்மை, பொன்மை, வெண்மை) கடந்து ஆறாவது நிலையான மிகுவெண்மை நிறத்தை அடைய முடியும் என்ற அடிப்படையில் ஆசீவகர்கள் யானையைத் தங்களின் சமயச்சின்னமாகக் கொள்கின்றனர்.

மிகு வெண்மை நிறத்தை அடையும் ஒருவன் பரகதி அடைகின்றான். அதுவே பிறப்பின் நோக்கமாக அமைகின்றது. ஆசீவகப்பள்ளிகளில் இந்த ஐந்து குணங்களில் தேர்ச்சி பெற்ற பிறகு தான் இல்லற வாழ்விற்கு அனுமதித்துள்ளனர். வாழ்க்கை பற்றிய புரிதல் ஏற்பட்ட பிறகு திருமண வாழ்வில் ஈடுபடும் போது சிக்கல் இல்லா வாழ்வைப் பெறமுடியும் என்பது ஆசீவகர்களின் நம்பிக்கையாக இருந்துள்ளது.

**யானை தொடர்பான புராணச்செய்திகள்**

சைவ வைணவ புராணங்களில் யானையைத் தொடப்புப்படுத்திப் பல செய்திகளை அறிய முடிகின்றது. சிவபெருமானை 'யானை உரி போர்த்தவன்' என்கின்றோம். அதன் பொருள் கி.பி.14ம் நூற்றாண்டில் நடைபெற்ற சமயப்போரின் போது சைவ சமயம் சமண பௌத்த ஆசீவக சமயத்தை வெற்றி கொண்டது. யானையைச் சின்னமாகக் கொண்ட ஆசீவகத்தைச் சிவன் வெற்றி கொண்டதன் அடையாளமாக 'யானை உரி போர்த்த சிவபெருமான் அடையாளப்படுகின்றார்.

திருமாலை முழுமுதல் கடவுளாகக் கொண்ட வைணவ சமயத்தில் யானையின் கால்களை முதலை கவ்வித் துன்புறுத்திய போது அது ஆதிமூலமே என குரல் கொடுக்க திருமால் காப்பாற்றியது புராணச்செய்தி. இதனோடு சைவர்களால் விரட்டியடிக்கப்பட்ட ஆசீவகர்களை வைணவம் ஆதரித்துத் தமது கோவில்களில் அடைக்கலப்படுத்திக் காத்த செய்திகளோடு ஒப்புமைப்படுத்திப் பார்க்க முடிகின்றது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**தொகுப்புரை**

கடவுள் கோட்பாடற்ற வாழ்க்கைத் தத்துவங்களை வழிகாட்டக் கூடிய சமயங்களுள் ஆசீவகமும் ஒன்று. மக்கலிக்கோசாலர் என்னும் தமிழரால் உருவாக்கப்பட்ட தொல்மதமாக அடையாளப்பட்டு இன்று தனக்கென அடையாளங்கள் இன்றி அழிந்து போயுள்ளது. ஆசீவகத்தோடு சமகாலத்தில் வாழ்ந்த பிறசமயத்தவர் குறிப்பினைக் கொண்டே அதன் மூலங்கள் அறியப்படுகின்றன. தமிழ் இலக்கியங்களில் சிலம்பு, மணிமேகலை, நீலகேசி, சிவஞான சித்தியார், திவாகர நிகண்டு பிங்கல நிகண்டு ஆகியவற்றில் ஆசீவகர் பற்றிய சிறுசிறு குறிப்புகள் காணக்கிடைக்கின்றன. மக்கலிக்கோசாலர் ஐயப்பன் என்றும் அவரோடு வாழ்ந்து ஆசீவகத்தை வழிநடத்திய இருவரை பூரண புஸ்கலை சமேத ஐயப்பன் என்றும், அடைக்கலம் காத்த ஐயனார் என்றும் வரலாற்றாய்வாளர்கள் கருத்துரைத்துள்ளனர். ஐயப்பனை ஆசீவகத் தோற்றுநராகக் கொள்வதும் ஆசீவகர்களின் ஆறு வண்ணக் கோட்பாட்டோடு ஐயப்பனின் பதினெட்டு படித் தத்துவக் கோட்பாடு பொருந்துதலும் இங்கு ஒப்புநோக்கத்தக்கது. யானையின் குணஇயல்பில் காணப்படும் வலிமை, பொறுமை, முதலிய குணங்களை ஆசீவகர்கள் பெற வேண்டும் என்ற நோக்கில் அதனைச் சின்னமாகக் கொண்டிருப்பதும் அதன் அடையாளமாக ஐயனார் ஐயப்பன் கோவில்களில் வெள்ளை யானை இடம்பெற்றிருப்பதும் தொடர்புப்பட்டிருக்கிறது. ஆசீவகர்களைத் தமிழ்நாட்டைவிட்டு விரட்டியடித்த சைவ சமயத்தின் அடையாளமாக சிவன் 'யானை உரி போர்த்தவனாக அடையாளப்படுகிறான். சைவர்கள் ஆசீவகர்களை விரட்டிய போது வைணவர்கள் அவர்களை ஆதரித்த அடிப்படை முதலையால் கௌவப்பட்ட யானையைத் திருமால் காப்பாற்றிய புராணத்தோடு தொடர்புப்படுகிறது.

**பார்வை நூல்கள்**

[1] மயிலை சீனி.வேங்கடசாமி. பௌத்தமும் தமிழும், நாம் தமிழர் பதிப்பகம், - மு.ப.2015.

[2] மயிலை சீனி.வேங்கடசாமி. பௌத்தமும் தமிழும், நாம் தமிழர் பதிப்பகம், - மு.ப.2015.

[3] மயிலை சீனி.வேங்கடசாமி. பௌத்தமும் தமிழும், நாம் தமிழர் பதிப்பகம், - மு.ப.2015.

[4] மணிமேகலை. ந.மு.வேங்கடசாமி நாட்டார், ஔவை சு.துரைசாமிப்பிள்ளை,சாரதா பதிப்பகம் - மு.ப.2009.

[5] நீலகேசி. கா.அப்பாத்துரைப்பிள்ளை, பாரி நிலையம். மு.ப.1955.

[6] மயிலை சீனி.வேங்கடசாமி. பௌத்தமும் தமிழும், நாம் தமிழர் பதிப்பகம், - மு.ப.2015.

[7] சிலப்பதிகாரம். சிலம்பொலி சி.சு.செல்லப்பா, பாரதி பதிப்பகம் - மு.ப.1994.

[8] திரு.நெடுஞ்செழியன். ஆசீவகமும் ஐயனார் வரலாறும், பாலம் பதிப்பகம் - மு.ப.2014.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**வினோதா. "ஆசீவக விழுமியங்கள்."** *தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்,* தொகுதி 3, சிற.இதழ் 3, தொகுதி 3, ஜனவரி 2021, பக்.434-440. டிஒஐ: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.064**

**Cite this Article in English (MLA 8 Style) as:**


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

# கண்ணப்பநாயனாரைப் போற்றும் திருமுறை ஆசிரியர்கள்

## Admiration of the Thirumurai Writers on Kannappa Nayanar

**ஜெ. விஜி,** முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை, அறிஞர் அண்ணா அரசு கலைக்கல்லூரி, செய்யாறு
**J.Viji,** Ph.D Scholar, Arignar Anna Govt. Arts College, Cheyyar.
ORCiD: https://orcid.org/0000-0001-7614-2863
**முனைவர் கு.கண்ணன்,** இணைப் பேராசிரியர், தமிழ்த்துறை, அறிஞர் அண்ணா அரசு கலைக்கல்லூரி, செய்யாறு.
**Dr.K.Kannan**, Tamil Department, Arignar Anna Govt. Arts College, Cheyyar.
ORCiD: https://orcid.org/0004-0002-6044-4725
**DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.065**

## Abstract

*For the Saiva religion, the twelve holy texts are the supreme ones that evince the glory of God Shiva through the divine experience. Even though there are sixty three Nayanmars, the twelve holy texts are praised and the twenty seven "Thevara" writers are world-famed. As per the words of Avvaiyar "It is to praise the devotees", Nakkeerar and Kalladar have praised the bhakthi of Kannappa Nayanar. Thirugnana Sambanthar, Thirunavukkarasar and Sundarar have glorified the divine actions of Kannappa Nayanar in their songs. Their devotion is admirable and adorable for their devotion and dedication on Lord Shiva. Hence, the article decodes the admiration of the Thirumurai writers on Kannappa Nayanar and his devotion to lord Shiva.*

**Keywords:** Kannappanayanar, Bakthi, Vazhibadu, Anbu

### முன்னுரை

சைவசமயக் கடவுளரையும் சித்தாந்தக் கருத்துக்களையும் செறிவாகக் கொண்ட இலக்கியங்கள் பல தமிழின்கண் உள்ளனவாயினும் தன்னிகரற்றதனிப் பெருஞ்சிறப்பினை உடையது பன்னிருதிருமுறையாகும். அறுபத்து மூன்று நாயன்மார்கள் இருப்பினும் பன்னிரு திருமுறை அருளியவர்கள் இருபத்தேழுதேவார ஆசிரியர்கள் ஆவார்கள். "தொண்டர் தம் பெருமை சொல்லவும் பெரிதே" ஔவையார் முதுமொழிக்கிணங்க சிவனடியார்களின் அன்புத் திறத்தை மட்டுமே முதன்மையாக எடுத்துக் கூறும் நக்கீர தேவராலும், கல்லாட தேவராலும் கண்ணப்ப நாயனாரைப் பற்றித் தனித் தனியே இயற்றப் பெற்றுள்ள திருக்கண்ணப்ப தேவர் திருமறம் அமைந்துள்ளது.

கண்ணப்ப நாயனாரைப் போற்றும் வகையில் திருக்காளத்தில் உள்ள இறைவனை வணங்கவரும் நாயன்மார்கள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் தன்னுடைய பதிகங்களையும், சுந்தரர் தன்னுடைய திருத்தொண்டத் தொகையிலும், பிற நாயன்மார்களும் கண்ணப்ப நாயனாரைப் போற்றிய காரணத்தாலும் இவர் காலத்தால் முற்பட்டவர், நாயன்மார்களில் உயர்ந்த இடத்திலும் இறைவனின் மீது அதிக பக்திகொண்டு விளங்கியவர் கண்ணப்பநாயனார்.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**திருஞான சம்பந்தர்**

திருஞானசம்பந்தர் பல்வேறு தலங்களைச் சென்று இறைவனை வழிபட்டு வந்த ஆளுடைபிள்ளையார் தொண்டைநாட்டில் உள்ள திருக்காளத்தி இறைவனை தன்னுடைய பதிகம் வழியாக இயற்கை வருணனை, இறைவனின் வீரச் செயல்களையும், பெருமையைப் பற்றிக் குறிப்பிடும் திருஞானசம்பந்தர் கண்ணப்பநாயனாரைப் போற்றுகையில்

**வாய்கலச மாகவழி பாடுசெயும்**

**வேடன்மல ராகு நயனம்**

**காய்கணை யினாலிடந் தீசனடி"**

**கூடுகாளத்தி மலையே (திருஞானசம்பந்தர் தேவாரம் 3ம் திருமுறை)**

பதிகத்தில் இறைவனுக்கு தொண்டு செய்த கண்ணப்பரை போற்றியுள்ளார். வாய் வழியாக வழிபாடு செய்ததாகவும், வேடன் மலர் கொண்டு நயனமாக இறைவனுக்கு அருச்சணை செய்ததாகவும், காளத்தி இறைவனையும் கண்ணப்பன் செய்த செயல்களையும் கூறுவதால் திருஞான சம்பந்தர் காலத்திற்கும் முற்பட்டவர் கண்ணப்பர் என அறியமுடிகிறது.

**திருநாவுக்கரசர்**

சங்ககாலப்பாவினங்களிலிருந்து விலகிய புதிய பாவின வகைகளுக்கு அடிகோலியவர் திருநாவுகரசரே. பிற்கால விருத்தப்பாக்களுக்கு வழி காட்டியவர். இவர் தாண்டகவேந்தர் எனப் போற்றப் பெறுவார். திருநாவுகரசர் நான்கு பாடல்களின் கண்ணப்பர் அன்பு வழிபாட்டையும் கண்ணப்பர் அருளிய திறத்தையும் எடுத்துப் போற்றியுள்ளார்.

**தோற்பெருஞ் செருப்புத் தொட்டுத்**

**தூயவாய்க் கலசம் ஆட்டித்**

**தீப்பெருங் கண்கள் செய்ய**

**குருதிநீர் ஒழுகத் தன்கண் (திருநாவுக்கரசர் தேவாரம் 4ம் திருமுறை பா.எண் - 4:49:7)**

அப்பர் திருக்காளத்தி பற்றியும், காளத்திநாதன் கண்ணப்பருக்கு அருள் செய்த விதம் நேரிசையில் கூறுகின்றனர். கண்ணப்பன் காலில் செருப்புகொண்டு இறைவனின் மீதுதொட்டும் தூய்மையான பொன்முகலி ஆற்றுநீர் இறைவனுக்கு திருமஞ்சனம் செய்தும், தீபோன்ற கண்கள் கொண்டு இறைவன் மீது தன்னுடைய கண்களை அப்பிய விதம் என்று குறுக்கை வீரட்டானத்தில் போற்றிஉள்ளார்.

**உவப்பெருங் குருதிசோர ஒருகணையிடத் அப்பத் துஅங்கு**

**தவப்பெருந் தேவுசெய்தார் சாய்க்காடுமேவி னாரே" (திருநாவுக்கரசர் தேவாரம் 4-ம் திருமுறை பா.எண் – 4.65.8)**

திருநாவுக்கரசர் சாய்க்காடு என்னும் ஊரில் உள்ள இறைவனை போற்றிய நிலையில் இறைவனிடம் அருள் பெற்ற மார்;கண்டேயன்>பகீரதன் போன்றவரின் நிலையில் குறிப்பிடும் அப்பர் கண்ணப்பரின் பக்திநிலையையும் பதிகத்தில் அருளினார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**கண்ணப்பன் கண்ணப்பப்கண்டு உகந்தார்**

**கழிப்பாலை மேய கபாலப் பனார்**

**வண்ணப் பிணிமாய யாக்கை நீங்க**

**வழிவைத்தார்க்கு அவ்வழியே போதும் நாமே (திருநாவுக்கரசர் தேவாரம் 6-ம் திருமுறை பா.எண் – 6.12.6)**

அப்பர் கழிப்பாலை குடிக்கொண்டுள்ள ஈசனை பற்றியும், எழில் நலன்களைக் கூறி கண்ணப்பன் தன்னுடைய கண்ணை அப்பிய நிலையில் இவரின் பிணியாகிய உடலில் இருந்து நீங்கிய வழி வைத்தார்க்கு அவருடைய வழியில் நாமும் இறைவனின் மீது பக்தி கொண்டு இருக்கவேண்டும் என்று திருத்தண்டகம் வழியாக குறிப்பிடுகின்றார்.

**காலார்லக் காலனையும் காய்ந்தான் கண்டாய்**

**கண்ணப்பர்க்கு அருள்செய்த காளை கண்டாய்" (திருநாவுக்கரசர் தேவாரம் 6ம் திருமுறை பா.எண் – 6.39.9)**

அப்பர் மழபாடி தலத்தில் கண்டாய் கண்டாய் இறைவனை கண்கள் கண்டாய் பாடுகின்றார். கண்ணப்பநாயனார் அருள் செய்த விடைஉடைய ஈசனை கண்கள் கண்ட கண்ணப்ப நாயனாரை குறிப்பிடுகின்றார்.

**சுந்தரர்**

திருவாரூர் திருத்தொண்டத் தொகை தேவாசிரய மண்டபத்தில் அருளியது. பெரியபுராணத்திற்கு மூல நூலாகும். இதில் நாயன்மார்கள் பெயர் மட்டுமே சுந்தரர் குறிப்பிடுகிறார். **"கலைமலிந்த சீர்நம்பிகண்ணப்பார்க்கு அடியேன்" (திருத்தொண்டர் தொகை பா.எண்.2)**

**மாணிக்கவாசகர்**

சைவசமயக்குரவர் நால்வருள் ஒருவாராகிய மாணிக்கவாசகர் அருளிய எட்டாந் திருமுறையாகத் திகழ்வன திருவாசகம், **"அன்பினால் ஓதுவார், கேட்பார் ஆகிய அனைவருள்ளத்தையும் உருக்கவல்ல பாடல்களை அருளினார்." (பன்னிரு திருமுறை வரலாறு ப.எண் – 255)** திருவாசகத் திருமுறை சமயச் சிற்றிலக்கியங்களில் தொகுப்பு நூலாகவும், சிவபெருமானுடைய சீர் போற்றும் சிறப்பு இலக்கியமாகவும், சிவபக்தியுணர்வை உணர்த்தும் பாங்கினையுடையதாகவும் திகழ்கின்றது. தன்னுடைய பாடல்களில் திருவாதவூரடிகள் கண்ணப்பரின் சிவநெறியைப் போற்றி உள்ளார்.

**திருவாசகம்**

"திருவாசகத்துக்கு உருகார் ஒருவாசகத்திற்கும் உருகார்"

என்னும் பழமொழி போல கண்ணப்பனை போற்றுத் விதம் அவ்வாறு அமைந்துள்ளது.

**கண்ணப்பன் ஒப்பந்தோர் அன்பின்மை கண்டபின்**

**என்னப்பன் என்னொப்பில் என்னையுமாட் கொண்டருளி**


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்குருணைக்**

**சுண்ணப்பொன் நீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ (திருவாசகம்)**

அரச வண்டே! கண்ணப்ப நாயனார் புரிந்தருளிய பேரன்பை ஒத்ததோர் அன்பினை எவரும் புரியாமை கண்டருளினன் சிவன் கண்டும் அவரவர் அன்பிற்கு ஏற்றவாறன்றித் தன்னுடைய தன்மைக்கேற்றவாறு பேரருளே புரிந்தருள்கின்றான். கண்ணப்பனை ஆண்டு கொண்டதை போல தன்னை இறைவன் ஆண்டு அருளினார் என்று கண்ணப்பனை தன்மையும் ஒப்பீடு செய்துள்ள பாங்கு போற்றதற்குரியது.

தோள் நோக்கம் என்பதுமகிழ்ச்சிப் பெருக்கினால் தம் தோள்கள் பூரித்து மேலோங்க அவற்றை நோக்கிக் கை வீசியாடும் மகளிரது விளையாட்டு.

**பொருட்பற்றிச் செய்கின்ற பூசனைகள் போல்விளங்கச்**

**செருப்புற்ற சீரடிவாய்க் கலசம் ஊனமுதல்**

**விருப்புற்று வேடனார் சேடறிய மெய்குளிர்ந்தங்**

**கருட்பெற்று நின்றவா தோதோக்கம் ஆடாமோ (திருவாசகம்)**

மாணிக்கவாசகர் தன்னுடைய பாடலில் எத்தகயை வழிபாடுகளாயினும் செம்பொருட் சிவனால் ஏற்றுக் கொள்ளப்படும், **"அங்ஙனம் வேடராகிய கண்ணப்பன் செய்த சிவ வழிபாட்டின் பெருமை தோன்றாயிற்று. உலகறிந்த இச்சிறப்பினைப் பாடித் தோணோக்கம் ஆடுவோமாக." (பன்னிரு திருமுறை வரலாறு, ப.எண் – 304)** என்று கூறுகின்றார்.

**ஒன்பதாந் திருமுறை**

திரு மாளிகைத் தேவர் முதல் சேதிராயர் இறுதியாகவுள்ள ஒன்பதின்மரும் பாடியருளியது. அவர்களில் ஒருவர் பூந்துருத்தி நம்பி காடநம்பி ஆவார்.

**பூந்துருத்திநம்பி காடநம்பி**

திருப்பூந்துருத்தியில் அந்தணர் குலத்தில் தோன்றியவர். சிவபெருமானைப் பதிகள் (தலங்கள்) தோறுஞ் சென்று வழிபட்டுவந்தார். சிவனடியாரிடத்து மிகுந்த அன்பினராதலின் கணம்புல்லர், கண்ணப்பர், நாவுக்கரசர், ஞானசம்பந்தர், நம்பியாரூரர் இவர்களைத் தம் பாடல்களிள் பாடியுள்ளார். பிறர் பாடாத சாளர பாணிப் பண்ணில் திருவிசைப்பா பாடியிருக்கிறார். காடநம்பி அவர்கள் கோயில் (தில்லை) பதிகத்தில் கண்ணப்பர் பற்றி குறிப்பிடுகின்றார்.

**கடியார் கணம்புல்லர் கண்ணப்ப ரென்றுன்**

**ஆடியா ரமருலக மாள நீயாளாதே**

**முடியாதுத் தீவேள்வி மூவாயி ரவரொடுங்**

**குடிவாழ்க்கை கொண்டுநீ குலாவிக் கூத்தாடினையே (ஒன்பதாந் திருமுறை)**

காளத்தி ஈசுரருக்குக் கண்ணிடந்தப்பியும் சிறந்த பேரன்பு கொண்டு ஆனந்தக் கூத்தாடுகின்றாயே என்று கண்ணப்பநாயனாரின் பக்திநெறியைக் கூறுவார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**பதினோராந் திருமுறை**

பதினோராந் திருமுறையில் நக்கீரதேவர் தன்னுடைய "கயிலை பாதி காளத்திபாதி" அந்தாதியிலும், "திருக்கண்ணப்ப தேவர் திருமறம்" என்பதிலும் கண்ணப்ப நாயனாரின் வாழ்க்கை வரலாற்றைப் படைத்துள்ளார்.

**கயிலை பாதி காளத்தி பாதி**

எல்லாம்வல்ல சிவபெருமான் வடதிசையிலுள்ள திருக்கயிலாய மலையில் அம்மையப்பனாக வீற்றிருந்து எவ்வுயிர்க்கும் அருள் சுரத்தல் போன்று, தென்திசையிலுள்ள திருக்காளத்தி ம்லயிலும் மாதொரு பாகனாக வீற்றிருந்தது மன்னுயிர்க்கு அருள் சுரக்கின்றான் என அப்பெருமானது அருமை கூறும் கயிலை பாதி காளத்தி பாதியந்தாதியாகும். நூறு வெண்பாக்களால் இயன்றுள்ளது.

**அண்ணாற் கணுக்கராய்க் காளத்தி யுள்நின்ற**
**கண்ணப்ப ராவார் கதை (பதினோராந் திருமுறை, பா.எண் – 12)**

மனித வாழ்க்கை வீணாக கழிகின்றது. இவர்கள் பொய் வாழ்க்கையில் அகப்பட்டவர்களாக உள்ளார். இவர்கள் காளத்தி இறைவர்க்கு அன்பினால் நெருங்கித் தொண்டுபுரிந்த கண்ணப்பநாயனாரது பேரன்பின் திறத்தை கேட்டு உயர்வு பெறமாட்டார்களா? என்ற முறையில் கண்ணப்பரின் பக்தித் திறத்தைக் கூறுகின்றார்.

**திருக்கண்ணப்ப தேவர் திருமறம்**

கண்ணப்ப தேவரது வீரச் செயலைப் போற்றிப் பரவும் நோக்கத்துடன் மறம் என்னுந் துறை அமைந்த,

**நக்கீர தேவர் பாடிய பிரபந்தம் திருக்கண்ணப்ப தேவர் திருமறம் என வழங்கப் பெறுவதாயிற்று. நூற்றைம்பத்தேழு அடிகளால் ஆக்கப் பெற்ற ஆசிரியப்பாவாகும். (பன்னிரு திருமுறை வரலாறு, ப.எண் – 78)**

சேக்கிழார் பாடிய கண்ணப்ப நாயனார் புராணத்திற்கு முன்பே அருளப்பட்டது. நல்லறங்களைச் செய்வதற்கேயன்றி மறமாகிய வீரச் செயலை மேற்கொள்வதற்கும், அன்பாகிய பண்பே துணை செய்வ தென்பது

**அறத்திற்கே யன்புசார் பென்ப அறியார்**
**மறத்திற்கும் அஃ;தே துணை (திருக்குறள், கு.எண் – 76)**

கண்ணப்ப நாயனார் புராணத்திலே கூறும் சில செய்திகளில் இருந்து நக்கீரர் அருளிய திருக்கண்ணப்பர் திருதேவர் மறம் மாறுபட்டுள்ளது. காளத்தி இறைவனை பூசை செய்யும் திண்ணன் இறைவனுக்கு பன்றி இறைச்சி அமுது செய்தான் என்று பெரியபுராணம் கூறுகிறது. ஆனால் திருக்கண்ணப்பர் தேவர் மறத்தில் வெறும் இறைச்சி என்றும்>

**தங்கிய துவர்ப்பூ ஏற்றி இறைச்சியில்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**பெரிதும் போனகம் படைத்துப் பிரானைக் (திருக்கண்ணப்பர் தேவர் திருமறம்- நக்கீரர், பா.வரி – 61, 62)**

காளத்தி மலையில் உள்ள குடுமித்தேவருக்கு இறைச்சியும், வாய்வழியாக நீராடியும், தலையில் இருந்து மலர்களை இறைவன் மீது சேர்த்தலும் போன்ற செயல் கண்டு அந்தணன் வந்து பார்த்து நேற்றுதான் இறைவனுக்குச் செய்த பூசனை சிதைந்த நிலையினைக் கண்டு

**காத்திருந்து அவன்அக் கானவன் வரவினைப்**

**புரந்த காட்டிடைப் பார்த்து நடுக்குற்று**

**வந்தவன் செய்து போயின வண்ணம் (திருக்கண்ணப்பர் தேவர் திருமறம்- நக்கீரர், பா.வரி – 64-68)**

"யான் பூசனை செய்த பின்னரும் ஆகம் நெறிக்கு முரணாக மறித்தும் இவ்வாறு பூசை செய்தார் யாவர்" என ஐயுற்று அதன் உண்மையைக் கண்டு தெளிதல் வேண்டி இவ்விடத்தே மறைந்திருந்தான். அந்நிலையில் வேடனொருவன் வருதலைக் கண்டு நடுங்கி அவன் வாய்நீராட்டி ஊனமது படைத்து வழிப்பட்டதனை மனம் பொறாது வருந்தித் தன் குடிலை அடைந்தார்.

ஆனால் பெரியபுராணத்தில் ஆறாம் நாள் செய்யும் பூசையை சிவகோசரியார் மறைந்து இருந்து பார்த்தார் என்று கூறுகினறது. மேலும் குடுமித் தேவர் சந்நிதானத்தில் கண்ணப்பன் மட்டுமே தனித்து இருந்தான் என்றும் கூறுகிறது. ஆனால் திருக் கண்ணப்ப திருதேவர் மறத்தில்

**ஈங்கொரு வேடுவன்**

**நாயொடும் புகுத்து மிதித் துழக்கித் (திருக்கண்ணப்பர் தேவர் திருமறம்- நக்கீரர், பா.வரி – 81-82)**

கண்ணப்பர் உடன் நாயும் இருந்ததுஎன்று கூறப்படுகிறது.

சிற்சில மாறுதல் மட்டுமே காணப்படினும் பெரியபுராணத்தை ஒத்து காணப்படுகிறது.

**கல்லாட தேவநாயனார்**

பதினொராந் திருமுறை ஆசிரியர்களுள் கல்லாட தேவ நாயனாலும் ஒருவர். இவர் இயற்றிய இத்திருக்கண்ணப்பதேவர் திருமறம் முப்பத்து எட்டு அடிகளால் ஆனது நக்கீரர் பாடிய திருமறத்திற்கும், கல்லாடர் திருமறத்திற்கும் மிகச் சுருங்கியதாகவே வரலாற்றுச் செய்திகள் அமைந்துள்ளன.

பெரியபுராணத்திலும், நக்கீரர் திருமறத்தில் இது கூறப்படாத இரு செய்திகளைக் கூறுகின்றார். திண்ணனார் காளத்தி மலைமீதமர்ந்த சிவலிங்கப் பெருமானைக் கண்டு வழிபட்டுத் தமது கண்ணைத் தோண்டி அப்பிக் கண்ணப்பராயினார் என்பதே வரலாறு. இவர் திண்ணனார் "கானப் பேருறை" கண்ணுதலை வழிபட்டாரென இப்பிரந்தத்திற் குறப்பிட்டு உள்ளார்.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**வாய்க்கல சத்து மஞ்சன நீரும்**

**கொண்டு கானப் பேருறை கண்ணுதல் (கண்ணப்பர் தேவர் திருமறம்- கல்லாடர், பா.வரி – 16)**

கானப்பேருறை என்பது தமிழ் நாட்டில் உள்ள காளையார் கோவிலைக் குறிக்கும்

மேலும்,

**ஒருகை யாலும் இருக்கை பிடித்து**
**ஓல்லை நம்புண் ஒழிந்தது பாராய்**
**நல்லை நல்லை எனப்பெறும் (திருக் கண்ணப்பர் தேவர் திருமறம்- கல்லாடர், பா.வரி – 34-36)**

மற்றொரு கண்ணையும் தோண்டத் தொடங்கிய பொழுது சிவபெருமான் தன்னுடைய திருக்கையினால் திண்ணனாருடைய இரு கைகளையும் சேரப் பிடித்துக் கொண்டு "நம் கண்ணின் புண் விரைவில் நீங்கி வரம் பெற்றதனைக் காண்பாயாக நீ மிகவும் நல்லை" எனப் பாராட்டித் திருவருள் புரிந்தமைக்கான வரலாற்றுச் செய்திகள் இத் திருமறம் என்னும் பிரபந்தத்தில் சுருக்கமாக கல்லாட தேவர் கூறுpக்னறார்.

திருத்தொண்டர் திருவந்தாதியில்

**நிலத்தில் திகழ்திருக் காளத்தி**
**யார்திரு நெற்றியின் மேல்**
**நலத்தில் பொழிதரு கண்ணில்**
**குருதி கண்டுள் நடுங்கி**
**வலத்திற் கடுங்கணை யால்தன்**
**மலர்க் கண்ணிடந் தப்பினான்**
**குலத்திற் கிராதன் நங்**
**கண்ணப்பன் என்று கூறுவரே (திருத்தொண்டர் திருவந்தாதி)**

கிராதன் என்றால் வேடுவன் என்றுபொருள். இறைவனுக்கு இரத்தம் வர கண்ட கண்ணப்பன் மலர் போன்ற கண்ணினை அப்பினான் என்று நம்பியாண்டார் நம்பி கூறுpகிறார்.

**முடிவுரை**

கண்ணப்ப நாயனாரைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் தேவாரத் திருப்பதிகங்களிலும், திருவாசகத்திலும் ஒரளவு சுருக்கமாகக் குறிப்பிடப்பெற்று உள்ளன. கண்ணப்பரது வரலாற்றை முதல் முதலாக விரித்துக் கூறிய பெருமை திருக்கண்ணப்ப தேவர் திருமறம் இயற்றிய நக்கீர தேவர்க்கேயுரியதாகும். இவராற் பாடப்பெற்ற இத்திறம் கண்ணப்பரது வரலாற்றைச் சேக்கிழார் பெரியபுராணத்தில் விரித்து கூறுகின்றார். சிவபெருமானால் நமக்கு அளிக்கப்பெற்ற உடல், பொருள், ஆவி எனும் மூன்றையும் தாம்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

எடுத்துக் கொள்ளாமல் சிவனுக்கே அர்பணித்து வாழ்ந்தவர்கள் நாயன்மார்கள். அவ்வாறாக கண்ணப்பநாயனார் தம்முடைய இறைவனிடத்தில் செலுத்திய அன்பு அளவிடற்கரியதாகும்.

**துணை நூற் பட்டியல்**

[1] ஆறுமுக நாவலர், பெரியபுராணம், முல்லை நிலையம் சென்னை-600017,1977.

[2] இராசமாணிக்கனார், சேக்கீழார், எம்.ஜி.ஆர். நகர், சென்னை-600078, முதற்பதிப்பு 2006.

[3] ஒன்பதாம் திருமுறை, திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த, நூற்பதிப்புக் கழகம் லிட் 1971.

[4] திருஞானசம்பந்தர் தேவாரம், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட் 1973.

[5] திருநாவுக்கரசர் (தேவாரம்) ஸ்ரீ குமரகுருபரர் ஆதினம், ஸ்ரீ காசி மடம், திருப்பனந்தாள், ஐந்தாம் பதிப்பு 1986.

[6] பதினோராம் திருமுறை, திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த, நூற்பதிப்புக் கழகம் லிட் 1971.

[7] மாணிக்கவாசகர் (திருவாசகம்) திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட் 1968.

[8] வெள்ளைவாரணன்,க பன்னிரு திருமுறை வரலாறு முதற்பகுதி (1-7), திருமுறைகள், அண்ணாமலை பல்கலைக்கழகம், மறு பதிப்பு 1990.

[9] க.வெள்ளைவாரணன், க பன்னிரு திருமுறை வரலாறு முதற்பகுதி (8-12) திருமுறைகள், அண்ணாமலை பல்கலைக்கழகம், மறு பதிப்பு 1980.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**விஜி & கண்ணன் . "கண்ணப்பநாயனாரைப் போற்றும் திருமுறை ஆசிரியர்கள்."** *தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 3, சிற.இதழ் 3, தொகுதி 3, ஜனவரி 2021, பக்.441-449. டிஓஐ: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.065**

**Cite this Article in English (MLA 8 Style) as:**
**Viji & Kannan. "Admiration of the Thirumurai Writers on Kannappa Nayanar."** *International Journal of Tamil Language and Literary Studies*, Vol. 3: Special Issue - 3, Vol. 3, January 2021, pp. 442-449. DOI: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.065**

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். /I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

 தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

# பக்தி இசையில் தோடி ராகம்

# Thodi Ragam in Bhakthi Isai

**வலிவலம் R.S. வெங்கட்ராமன்,** முனைவர் பட்ட ஆய்வாளர் மற்றும் குரல் இசைக்கலைஞர், அண்ணாமலை பல்கலைகழகம்.
**VALIVALAM** R.S. Venkatraman**,** Ph.D Scholar and Vocal Musician**,** Annamalai University.
ORCiD: https://orcid.org/0000-0001-5317-1143
**முனைவர் ரெ.எழில்ராமன்,** உதவிப்பேராசிரியர், இசைத்துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.
**Dr. R. Ezhilraman,** Assistant Professor**,** Department of Music, Annamalai University.
ORCiD:https://orcid.org/0000-0002-0312-2747
**DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.066**

## Abstract

*Music, especially devotional music can explore the tenderness of the hard-hearted. In a Tamil movie song, music is represented as "when the music plays earth moves on ecstasy." Devotional music made out the sense of human pleasure in various terms and forms. God can be seen through the devotional music. They are certain forms which includes "Devaram" and "Thiruppugazh". In that, Thodi Raagam is an important raga while creating devotional songs. This article elucidates the nature of devotional music and the characteristics of Thodi Raagam that converge artist to enlight humans to praise god.*

**Keywords:** Thodi Ragam, Bhakthi Isai, Divine Songs, Tamil Music

### முன்னுரை

கல் மனதையும் கனியவைப்பது இசை குறிப்பாக பக்தி இசை மொழியின் மற்றும் பக்தியின் உணா;வுகளை இசையின் துணைக்கொண்டு மெருகேற்றி உணர்வூட்டி வாழ்க்கை முறையோடு ஒன்றி இறைவனை இசை மூலம் காணலாம் என்பது ஆன்றோர் வாக்கு. மொழியால் இசையை வளமாக்கி, பாடல்களால் செழிப்பாக்கி இன்று அல்போல் தழைத்து அருகு போல் வேறுன்றி செழித்திருப்பது நமது பக்தி இசை. இதயபூர்வமாக இசை உள்ள இடத்தில் வசைக்கு இடம் இருக்காது.

**காதுக்கு விருந்து**
**சிந்தனைக்கு தெளிவு**
**மனதுக்கு அருமருந்து**
**தளர்வான நேரத்தில் ஊக்குவிப்பு**
**தவிப்பான நேரத்தில் ஆறுதல்**
**களிப்பானநேரத்தில் உற்சாகமூட்டி**
**களைத்த உழைப்பாளிக்கு களிப்பூட்டி**
**எல்லா விதங்களிலும் மகிழ்விப்பது**
**பக்தி இசை என்றால் மிகை ஆகாது.**

இசை ‘இசை கேட்டால் புவி அசைந்தாடும்” (பா.ஆ கண்ணதாசன், திரைப்படம் தவப்புதல்வன்) என்று ஒரு திரைப்படப்பாடல் முழுங்குகிறது. மனிதனுடைய பிறப்பு முதல் இறப்பு வரையிலும் அனைத்து நிகழ்வுகளிலும் இசை ஒரு அங்கமாக இருக்கின்றது. இசையின் பல வடிவங்கள் அதாவது நாட்டுப்புற இசையாக இருந்தாலும், செவ்விசையாக (கிளாசிகல்) இருந்தாலும் அதனுடைய சுவை மனிதனை பல வகைப்பட்ட உணர்ச்சிகளுக்கு ஆளாக்குகிறது. இவ்வளவு பெருமையுள்ள அனைத்து உயிர்களையும் இசைவிக்கும் இசையின் தோற்றத்தையும் அதன் பயன்களையும் இந்த கட்டுரை உணர்த்துகிறது.

**ஆடும் பரிவேல் அணிசேவலெனப்**

**பாடும் பணியே பணியாய் அருள்வாய்! (கந்தரநுபூதி, பா. 1)**

என்று உலகத்திற்கு சந்தக்கவி தந்த அருணகிரிநாதர், முருகனிடம் இசையோடு உன்னைப்பாடுகின்ற பணியை எனக்குக்கொடு என்று உலகத்திற்கு தமிழைத் தந்தவனிடம் வரமாகக் கேட்கின்றார். இசைக்கு மயங்காத ஜீவராசிகளே உலகத்தில் எதுவும் கிடையாது. கிருஷ்ணபரமாத்மாவின் குழலொலி கேட்டு உயிhpனங்கள் மயங்கியதை நாம் கேட்டிருக்கிறோம். அந்த பரமாத்மாவை, மானுடங்களாகிய ஜீவாத்மா எனப்படும் நாம் இசையாலே மனமுருகி வழிபாடு செய்தால் இறைவன் நாம் கேட்ட வரத்தை தருவான் என்பதை நமது முன்னோர்களும் அருளாளர்களும் நமக்கு அளித்த அறிவுரைகள். ஏழிசையாய், இசைப்பயனாய் இருப்பவன் இறைவன். சிவபெருமானுடைய அதோ முகத்திலிருந்து இசை வெளிப்பட்டதாக புராணங்கள் நமக்கு கூறுகிறது. வேதத்திலிருந்து வெளிப்பட்ட ஒலிகள் இசை எனவும், வேதமே இறைவனுடைய மூச்சுக்காற்று என்றும் சொல்லப்படுகிறது.

உலகிலுள்ள எண்ணற்ற ஒலி பேதங்களின் கூட்டமைப்பால் ஒருங்கிணையப் பெற்றது நாதம். இந்த நாதம் சிவசக்தியால் உந்தப்பட்ட விந்து மாயையில் இருந்து உண்டான ஒலி வடிவமாகும். இத்தகைய நாதத்தால் உண்டாகும் ஒப்பற்ற இசை சாம வேதத்தின் சிறந்த பகுதி எனக் கூறப்படுகிறது. மேலும் இசை என்பது ஐந்தாம் வேதம் எனவும் அழைக்கப்படுகிறது. கிருஷ்ணபரமாத்மா இந்த இசைக்கு பெருமையளிக்கும் வகையில் ‘வேதானாம் சாம வேதோஷ்மி” (10:22 பகவத்கீதை) என்று பகவத்கீதையில் குறிப்பிடுகிறார்.

மனித ஜாதியும், மிருக ஜாதியும் தன்னையும் தன் குணத்தையும் மறந்து எந்த நாத வெள்ளத்திலே லயிக்கின்றதோ அந்த நாதத்திற்கு இசை எனப் பெயரிட்டு அழைக்கப்படுகிறது. இந்த இசையானது பற்பல வேறுபட்ட உணர்ச்சிகளை தோற்றுவிக்கும் கலை. ஆவை ஒவ்வொன்றும் ஒரு பெயர் கொண்டு ராகம் எனப்படுகின்றது. ராகங்கள், ஸ்வரங்களின் கூட்டமைப்பால் உண்டாகின்றது. ஏழு ஸ்வரங்களின் வர்ணஜாலங்கள் நாம் மகிழ்ந்து மெய்மறக்கும் சூழலை உண்டாக்குகிறது. இந்த ஏழுஸ்வரங்களிலிருந்து எத்தனை வகையான ராகங்கள்.

அப்பப்பா! கணக்கிட முடியாதது இது. 1917-ம் ஆண்டு வெளிவந்த ‘காணாமிர்த சாகரம்” என்ற தன்னுடைய இசை ஆராய்ச்சி நூலில் ஆபிகாம் பண்டிதர் என்ற ஆராய்ச்சியாளர் ஏழு ஸ்வரங்களைக் கொண்டு 1,23,40,512 ராகங்களை உருவாக்க முடியும் என்று பதிவு செய்துள்ளாh;.

**பக்தி இசை அருளாளர்கள்**

பக்தி தமிழ் இசையின் தாய் காரைக்கால் அம்மையர், தேவார மூவர்கள், சீர்காழி தமிழ் இசை மூவர்கள், திருவாரூர் மூவர்கள், இராமலிங்க ஸ்வாமிகள், அருணகிரிநாதர், கோபால கிருஷ்ணபாரதி, கோடிஸ்வர அய்யர், வேதநாயாகம்பிள்ளை, பாபநாசம் சிவன், நீலகண்டசிவன், பட்டிணத்தார், சுத்தானந்த பாரதி, தஞ்சாவூர் சங்கர அய்யர் போன்றவர்கள் ஆவர்.

**பக்தி இசை இசைத்த திரை இசை கலைஞர்கள்**

T.M. சௌந்தராஜன், T.R. மகாலிங்கம், சீர்காழி கோவிந்தராஜன், சூலமங்கலம் சகோதரிகள், M.S. சுப்புலட்சுமி, M.L. வசந்தகுமாரி, N.C. வசந்த கோகிலம், வீரமணி, திருச்சி லோகநாதன். மதுரை சோமு, தாராபுரம் சுந்தரராஜன், L.R. ஈஸ்வரி, S.P.பாலசுப்ரமணியம், P.B. ஸ்ரீநிவாஸ், M.S. விஸ்வநாதன், வாணி ஜெயராமன், P. சுசிலா, S. ஜானகி ஆகியோர் ஆவர்.

**தோடி இராகம் மற்றும் சொல் விளக்கம்**

தோடி அல்லது ஹனுமத்தோடி என்பது கருநாடக இசையின், எந்நேரமும் பாடக்கூடிய 8வது மேளகர்த்தா இராகம். ஆசம்பூர்ண பத்தியில் 8வது இராகத்திற்கு ஜனதோடி என்ற பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. இந்துஸ்தானி இசையில் பைரவி தாட் என்றழைக்கப்படுகிறது. தோடி என்கின்ற பதம் தமிழில் தோடகம், தோடயம், என்கின்ற வாh;த்தைகளிலிருந்து வந்ததாகும். தோடகம் என்றால் சிறிய என்று பொருள். தோடு + ஈ என்றால் சிறியதாக உள்ள அல்லது சிறியதாக கேட்கின்ற என்பது பெருளாகும். குறிப்பாக தோடகம் என்பது ஒரு தோடியின் ஜன்யமான தோடி இராகத்தில் சாதாரண காந்தாரம் வரும் போது சுத்தக் காந்தாரத்தை குறிப்பிட காரணம் என்ன வென்றால் சாதாரண காந்தாரம் ஆந்தோள கமக பிரயோகத்தினால் சுத்த காந்தாரத்தின் ஒலி அளவிற்கு தாழ்ந்து ஒலிக்க வேண்டும் என்றும் கூறப்படுகிறது. தோடயம் என்பது ஒரு மரபிசை என்றும் தோடயம் என்றால் நாடக இலக்கியத்தின் முதல் நிலைப்பாடல் என்பதாகும்.

**தோடி ராக சிறப்பு மற்றும் தோடி ராகத்தில் புகழ்பெற்ற கலைஞர்கள்:**

அமேதி வயலின் கலைஞர், பாரத நாட்டிற்கு வந்தபோது ஹிந்துஸ்தானிய இசைக்கலைஞர் ஒருவர் வாசித்த உருப்படியை வாசிக்க முயன்று முழு வெற்றி பெறாது போனர். பின்னர் தென்னிந்தியாவின் அந்நாளின் மிக சிறந்த சங்கீத பீடங்களில் ஒன்றான தஞ்சைக்கு வந்தர். 1830 ஆம் ஆண்டின் சரபோஜியின் ஆஸ்தான வித்வானான தோடி சீதாராமய்யர் தனது பிரச்சிதமான தோடி இராகத்தை தொடர்ச்சியாக வந்த சங்கதியே மீண்டும் வராது எட்டு நாட்கள் வயலினில் வாசிக்க, அமேதி குடும்பத்தை சார்ந்த அந்த இசைக்கலைஞர் தோடி இராகத்தின் நளிமான கமக அசைவுகளை அதனால் தோன்றுகின்ற நவரச பாவங்களையும் ஸ்வரக்குறிப்பு கூட எடுக்க இயலாமல திணறி விட்டதாக வழக்குண்டு. இந்த கார்ண பாரம்பரியமான கதையில் வருகின்ற “தோடி சீதாராமய்யா” என்கின்ற வித்வான் சரபோஜி மஹாராஜனாவின் காலத்தில் இருந்ததற்கான அத்தாட்சி உள்ளதே ஒழிய அவர் வயலின் கலைஞரா அல்லது பாடகரா என்பதற்கான ஆதாரம் ஏதும் இல்லை. தோடி

சீதாராமய்யர் ஒருமுறை தனது ஏழ்மைக்காக கடன் வாங்கி அதனை திருப்பி செலுத்த முசியாது போனபோது இனி தோடி இராகத்தைப் பாடுவதில்லை என்று தோடியை வியாபாரி ஒருவரிடம் அடகு வைத்ததாகவும், பின்னர் சரபோஜி சபையில் தோடி சீதாராமய்யர் தோடி பாடாததன் காரணம் அறிந்து அவரது கடனை சரபோஜி அடைத்தர் என்பது செவிவழிச் செய்திகளாகும். இத்தகைய பிரபலமான இசைக்கலைஞரின் சாஹித்யம் ஒன்று கூட கிடைக்கவில்லை என்பது வருத்தத்திற்குரிய செய்தியாகும்.

சமீபத்தில் வாழ்ந்த ப்ரஹ்மஸ்ரீ பாபநாசம் சிவன் மற்றும் நீலகண்ட சிவன் போன்றவர்கள் தோடி இராகத்தில் ஏராளமான கீh;த்தனைகளைப் புனைந்துள்ளனர். நாதஸ்வர சக்ரவர்த்தி திருவாவடுதுறை டி.என். ராஜரத்தினம் பிள்ளை அவர்கள் தோடி இராகத்தை வாசிப்பதால் மிகவும் கை தேர்ந்தவர். அவரது தோடி இராக வாசிப்பைக் கேட்க சக இசைக் கலைஞர்களும் பொதுமக்களும் குழுமுவது வழக்கம்.

தோடி இராகம் பாடிய இசைக்கலைஞர்கள் குறித்த செவி வழி செய்திகள் மூலம் தோடி இராகம் கற்பதற்கு சற்று கடினமானது என்பதும் அதை கர்னாடக சங்கீத இசைக்கலைஞர்கள் திளமையாக கையாண்டிருக்கிறார்கள் என்பதையும் தோடி இராகத்தின பெயரோடு தன் பெயரையும் சேர்த்துப்புகழ் அடைந்திருக்கிறார்கள் என்பதையும் அறியமுடிகின்றது.

**தோடி ராகத்தில் அமைந்த பக்தி பாடல்**

இக்காலக் கட்டத்தில் பக்தி என்பது மனித வாழ்வில் தலைசிறந்த அங்கத்தை வகிக்கின்றது. அதிலும் பக்தி இசை அதனிலும் சிறந்தது. அந்த பக்தி இசையில் தோடி ராகம் என்பது மிகவும் உயர்வுக்குரியதும் உணர்வுக்குரியதும் ஆகும். இந்த தோடி ராகம் பக்தி சுவை மிகுந்த மற்றும் இறையுணர்வை உருவாக்க கூடியதுமாகும். இந்த தோடி ராகத்தில் பக்தி பாடல்கள் என்பது கேட்போரை பக்தி பரவச உணர்வை ஏற்படுத்தும் வகையில் அமைந்துள்ளது. தோடி ராகத்தில் பிறந்துள்ள ஒரு சில சேய் ராகங்களிலும் பக்தி பாடல்கள் அமைந்துள்ளது. P. சுசீலா பாடிய தாமரை பூவில் அமர்ந்தவளே என்ற பாடல், கந்த சஷ்டி கவச ராகமாலிகையில் தோடி ராகமும் ஒரு ராகமாக வந்துள்ளது. தோடி ராகம் என்ற படத்தில் மதுரை T.N சேஷகோபாலன் பாடிய தோடியில் பாடுகின்றேன் என்ற பாடலும் தோடி ஜென்னிய ராகமான புன்னாகவராளி என்ற ராகத்தில் நாதர்முடி மேல் இருக்கும் நல்ல பாம்பே (திருவருட் செல்வர்) மேலும் சில பாடல்கள் தோடி பக்தி இசையில் தோடி இராகம் அமைக்கப்பட்டுள்ளது.

**முடிவுரை**

பக்தி இசையில் தோடி ராகத்தையும் தோடி ராகத்தில் அமைந்த பாடல்களையும் தோடி ராகத்தின் சிறப்பையும், இசையின் தோற்றத்தையும் பக்தி இசையில் தோடி ராகத்தினால் மனித வாழ்வில் ஏற்படும் நன்மைகள் போன்ற பல செய்திகளை இக்கட்டுரையின் வாயிலாக அறிய முடிந்தது. இப்படி பலவிதமான இசையின் பயன்களை அனுபவித்து வரும் மானுடங்களாகிய நாம் ‘அவன் அருளாலே அவன் தாள் வணங்கி” (திருவாசகம், சிவபுராணம்) பக்தி இசையில் தோடி ராகத்தினை உலகுக்கு தந்த இறைவனுக்கு நன்றி கூறி இசையோடு இசைந்து வாழ்வோமாக!

**துணைநூற்பட்டியல்**

[1] ஸ்ரீ மத் சுவாமி சித்பவானந்தர், ஸ்ரீமத் பகவத் கீதை, ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்துறை, திருச்சிராப்பள்ளி மாவட்டம், 2009.

[2] ஸ்ரீ அருணகிரிவாத சுவாமிகள் அருளிச்செய்த திருப்புகழ், திருவரசு புத்தக நிலையம், 2006.

[3] அபிரஹாம் பண்டிதர், கருணாம்ருத சாகரம், 38 சீனிவாச ஐயர் தெரு சென்னை 1 முதற்பதிப்பு 1917.

[4] பாலசந்திர ராஜு, தோடி ராகமும் அதன் சிறப்புகளும், சிவரஞ்சனி பப்ளிகேஷன்ஸ் 12 ஏ சக்தி நகர் 2வது தெரு சூளைமேடு, சென்னை - 03.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**வெங்கட்ராமன் & எழில்ராமன். “பக்தி இசையில் தோடி ராகம்.”** *தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 3, சிற.இதழ் 3, தொகுதி 3, ஜனவரி 2021, பக்.450-454. டிஒஐ: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.066**

**Cite this Article in English (MLA 8 Style) as:**
Venkatraman & **Ezhilraman. “Thodi Ragam in Bhakthi Isai.”** *International Journal of Tamil Language and Literary Studies*, Vol. 3: Special Issue - 3, Vol. 3, January 2021, pp.450-454. DOI: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.066**

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். /I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

# தமிழ் இலக்கியத்தில் கிறித்தவத்தின் பங்கு
# The Role of Christianity in Tamil Literature

**அ. வெங்கடேஸ்வரி,** முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை, தூய சவேரியார் கல்லூரி, பாளையங்கோட்டை.
**A. Venkateswari,** Research Scholar, Department of Tamil, St. Xavier's College, Palayamkottai.
**ORCiD:** https://orcid.org/0000–0002–4825–6035

**முனைவர் அ. ஜாண்பால்,** உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை, தூய சவேரியார் கல்லூரி, பாளையங்கோட்டை.
**Dr. A. Johnpaul,** Assistant Professor, Department of Tamil, St. Xavier's College, Palayamkottai.
**ORCiD:** https://orcid.org/0000–0002–9085–4880
**DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.067**

## Abstract

*Tamil language is known for its wealth and prosperity in its literature. The world of Tamil literature has been deeply developed with dense and beautiful, vibrant poems and songs. A part of Christian tamil literature are the works of Europeans paved the development of Tamil language and literature in religious perspective. They learnt tamil for the purpose of spreading christian religion. The Europeans gave their part in tamil through activities like typography, dictionary compilation, translation, speech literature compilation, prose development etc. There are tamil Christians also who have given their part in tamil literature.*

**Keywords:** Literature, Poems and Songs, Europeans, Christianity

### முன்னுரை

தமிழ் மொழியானது இலக்கிய செழுமைக்கும் வளமைக்கும் பெயர் போன மொழியாகும். அடர்த்தியும், அழகும், ஆழமும் நிறைந்த செய்யுட்களாலும், பாடல்களாலும் தமிழ் இலக்கிய உலகம் ஆழமாக வளர்ந்திருக்கின்றது. கிறித்தவம் தொடர்பான தமிழ் இலக்கியங்கள் கிறித்தவ தமிழ் இலக்கியங்கள் ஆகும். கிறித்தவ தமிழ் இலக்கியத்தில் ஒரு குறிப்பிடத்தக்க பகுதி ஐரோப்பியர்களின் தமிழ்ப்பணிகள் ஆகும். அவர்கள் சமயத்தைப் பரப்புவதற்காக தமிழைக் கற்றனர். அச்சுப்பணி, அகராதி தொகுப்பு, மொழிபெயர்ப்பு, பேச்சு இலக்கணத்தொகுப்பு உரைநடை விருத்தி, இலக்கியப் பங்களிப்பு எனப்பல வழிகளில் ஐரோப்பியர்கள் தங்கள் பங்களிப்பை செய்துள்ளார்கள். தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குப் பங்களித்த தமிழகக் கிறித்தவர்களும் உள்ளனர். தமிழ் இலக்கியத்தில் கிறித்தவத்தின் பங்கு பற்றியும், கிறித்தவ இலக்கியங்கள் சிலவற்றையும் நாம் இக்கட்டுரையில் விரிவாகக் காண்போம்.

### இலக்கியம் என்பதன் விளக்கம்

இலக்கியம் = இலக்கு + இயம். இலக்கு என்பது குறிக்கோள் அல்லது நோக்கத்தினைக் குறிக்கும். இயம் என்பதற்கு சொல், ஒலி என்ற பொருள் உண்டு. (இயம்புதல் = கூறுதல்).

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**இலக்கியம் என்பது மக்களுக்கெல்லாம் பொதுவாகப் பயன்படும் பொருளை உடையதாய் இனிய வகையில் சொல்லப்படுதல் வேண்டும்; சொற்கட்க்குச் சிறந்து இன்பம் பயத்தலைக் குறிக்கோளாகப் பெற்றிருத்தல் வேண்டும். மக்களுடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளை எடுத்துக் கூறும் செய்யுட்களோ, நூல்களோ படிப்போரது உள்ளத்தைக் கொள்ளை கொண்டு, அவரது வாழ்க்கையையும் வழிப்படுத்த வல்லன”[1] இவையே இலக்கியம் எனப்படும். டாக்.மா. இராசமாணிக்கணார் – தமிழ் இலக்கிய வரலாறு – பக். 39, 40**

இலக்கியம் பற்றி பேராசிரியர் அ.ச. ஞான சம்பந்தன் என்பார், இலக்கியம் மனித வாழ்க்கையைமையமாகக் கொண்டது, மனிதனின் சிந்தனைக்கும், உணர்வுக்கும், கற்பனை விருந்தாக அமைவது, மனிதனின் மொழியோடு தொடர்புடையது, சொற்கோலமாக விளங்குவது, குறிப்பிட்ட ஒரு வடிவினை, செய்யுளாலோ, உரைநடையாலோ உடையது, கற்பவருடைய எண்ணத்தில் எழுச்சியையும் இதயத்தில் மலர்ச்சியையும் உண்டாக்கும் ஆற்றல் வாய்ந்தது, இன்புறுத்துவதோடு அறிவுறுத்தும் ஆற்றலை உடையது என்று அ.ச. ஞானசம்பந்தன் எடுத்துரைப்பார். தமிழில் இலக்கியம் என்ற சொல், முதன் முதலில் தோலாமொழித் தேவர் என்பவரால் பயன்படுத்தப்பட்டது என்பதை,

**காமநூலினுக்கு இலக்கியம் காட்டிய**
**வளத்தால்” - சூளாமணி: 459**

எனும் பாடல் வரியினால் அறியலாம்.

**இலக்கியம் இன்றி இலக்கணம் இன்றே,**
**எள்ளின் றாகில் எண்ணெயும் இன்றே,**
**எள்ளினின்று எண்ணெய் எடுப்பது போல**
**இலக்கியத் தினின்றும் எடுபடும் இலக்கணம். (அகத்தியர் : பேரகத்தியத் திரட்டு 3)**

**ஐரோப்பியர்களின் பங்களிப்பு**

ஐரோப்பியக் கிறித்தவ வரவால், உறவால் தமிழ் நிலம் வளமே ஆகவில்லையா? வளமாகவில்லை என்று உரைப்பது தவறு. ஐரோப்பியம் இந்திய நிலத்தில் வளம் பெறுவதற்காக இரைக்கப்பட்ட ஐரோப்பியத் தொண்டு நீரால் தமிழ்க் கரையில் உரைநடை புல் தளிர்விட்டது. சிறு செடிகள் பயிராயின. அகராதிகள் அரும்பிவிட்டது. நாவல் பூக்கள் பூத்தன. படிப்புக் காய்கள் காய்த்தன. ஆய்வுக்கனிகள் கனிந்தன. அவர்கள் ஆற்றிய பணிகளுள் மிக மகத்தானதும், பெரிதானதும் என்பது தமிழ்ப்பணியே ஆகும். **(சமணபௌத்த இசுலாமிய கிறித்துவ இலக்கியம் - பக் 54, 55)** ஐரோப்பியரைப் பின்பற்றி இந்தியக் கிறித்தவர்கள் தமிழுக்கும், தமிழருக்கும் ஆற்றிய தொண்டு குறிப்பிடத்தக்கது. விரிவாக ஆராயும் அளவிற்குப் பெரிதானது.

**தமிழ் இலக்கிய வளர்ச்சியில் சில தமிழ்க் கிறித்தவர்களின் பட்டியல்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

- **வேதநாயக சாஸ்திரியார் (1774 – 1804)**
- **சாமுவேல் வேதநாயகம் பிள்ளை (1826 – 1889)**
- **என்றி ஆல்பிரட் கிருஷ்ணப்பிள்ளை (1827 – 1900)**
- **ஆபிரகாம் பண்டிதர் (1859 – 1919)**
- **சேவியர் தனிநாயகம் (1913 – 1980)**

**தமிழ் இலக்கிய வளர்ச்சியில் பங்களித்த சில மேலை நாட்டுக் கிறித்தவர்களின் பட்டியல்**

- **இராபர்ட் தெ. நோபிலி (1577 – 1656)**
- **வீரமாமுனிவர் (1680 – 1746)**
- **பார்த்த லோமேயு சீகன்பால்க் (1682 – 1719)**
- **இராபர்ட் கால்டுவெல் (1814 – 1891)**
- **ஜி.யு. போப் (1820 – 1908)**

மேலை நாட்டுக் கிறித்தவர்கள் குறிப்பாக ஐரோப்பியர்கள் ஆற்றிய தமிழ்த் தொண்டைப் போல் தமிழ்நாட்டுக் கிறித்தவர்களும் தம் படைப்பால் தமிழ் இலக்கியங்களை வளப்படுத்தியுள்ளனர்.

**வேதநாயகம் பிள்ளை**

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையிடம் தமிழ்மொழி கற்று மாயூரத்தில் முனிசீப்பாகப் பணியாற்றினார். நீதிச்சட்டங்களை முதன் முதில் தமிழில் எழுதியவர் இவரே. தமிழில் பிரதாப முதலியார் சரித்திரம் என்னும் முதல் நாவலையும் எழுதியவர் இவரே ஆவார். தேவையான இடங்களில் வேதநாயகம் பிள்ளை விவிலியத்திலிருந்து மேற்கோள் காட்டுகிறார். வேத மாதா அந்தாதி, திருவருள் அந்தாதி, திருவருள் மாலை போன்ற நூல்களையும் பாடியுள்ளார்.

**எச்.ஏ. கிருட்டினப்பிள்ளை**

வைணவ வேளாளர் எனும் மரபில் தோன்றி பின் கிறித்தவர் ஆனார். கிறித்தவக் கம்பன் என்று புகழப்படுபவர் ஆவார். ஜான்பனியன் எழுதிய ***Pilgrims Progress*** என்ற நூலை **இரட்சணிய யாத்திரீகம்** எனத் தமிழில் எழுதினார்.

கிறித்தவர்களின் தேவாரம் என அழைக்கப்பெறும் இரட்சணிய மனோகரம் என்ற நூலினையும், இரட்சணிய சமய நிர்ணயம், இரட்சணியக் குறள் என்ற நூல்களையும் பாடிச் சிறப்பித்துள்ளார்.

**தன்னரிய திருமேனி சதைப்புண்டு தவிப்பெய்தி**
**பன்னரிய பலபாடு படும் போதும் பரிந் தெந்தாய்,**
**இன்னதென அறிகில்லார் தாஞ்செய்யவ திப்பிழையை**
**மன்னியும் என் றெழிற்கனிவாய் மலர்ந்தார்நம் அருள்வள்ளல் (சி. பாலசுப்பிரமணிய இலக்கிய வரலாறு – பக்கம் 244)**


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

இப்பாடல் இரட்சணிய யாத்திரீகத்தில் வரும் உருக்கமான பாடலாகும். இப்பாடல் இயேசு நாதரின் பொறுமையினை நமக்குப் படம் பிடித்துக் காட்டுகின்றது.

**வேதநாயகம் சாஸ்திரியார்**

வேதநாயக சாஸ்திரியார் இயல்பாகவே கவி பாடும் திறனைப் பெற்றிருந்தார். தமிழ் இலக்கியப் போக்கு, தமிழ்ப் பண்பாடு, தமிழ் இலக்கிய மரபு ஆகிய இவற்றை அடிப்படையாகக் கொண்டு நூல்கள் பலவற்றை வேதநாயக சாஸ்திரியார் படைத்தார். சரபோசி மன்னரின் ஆஸ்தான வித்துவனாக அரசவை புலவராகத் திகழ்ந்தார். கிறித்தவப் பாக்கள் பல்லாயிரம் இயற்றி ஆஸ்தான வித்துவான் பட்டம் பெற்றார். சரபோசி மன்னர், வேண்டியும் ‘கிறித்துவத்தைத் தவிரப் பாடேன்’ என்று கூறியவர் ஆவார். ஏசுநாதர் பெருமையினை விளக்கும், **பெத்லகேம் குறவஞ்சி** என்னும் நொண்டி நாடகத்தை இயற்றியவர் ஆவார். **சென்னைப் பட்டணப் பரவேசம், ஞானக் கும்பி, பராபரன் மாலை, ஞான ஏற்றப்பாட்டு** முதலான 52 நூல்களைப் பாடியுள்ளார். **(pothutamizh.blogspot.com)**

**சி. பாலசுப்பிரமணியன் இலக்கிய வரலாறு – பக். 245**

பெத்தலகேம் எனும் குறவஞ்சி நூல் தொண்ணூற்றாறு வகை சிற்றிலக்கியங்களில் ஒன்றாகும். உலாப்போகும் மன்னனையோ, தெய்வத்தையோ கண்டு மையல் கொண்ட தலைவி வருந்துவது, வீதியில் செல்லும் குறத்தியிடம் குறி கேட்பது, குறத்தி தனது மலைவளம், நாட்டுவளம் ஆகியவற்றை வாழ்த்தி தலைவியின் கையைப் பிடித்து அவளின் மனக்கருத்தை உணர்ந்து உரைத்தலும், குறவன் வருகையும் உரையாடலும், வாழ்த்தி விடைபெறுதலும் ஆகிய இவை அனைத்தும் குறவஞ்சி நூலின் கண் இடம் பெறும்.

பெத்லகேம் குறவஞ்சியில் உலாவரும் மன்னன் இயேசுவாகவும், தேவ மோகினியாகிய தலைவி சீயோன் மகளாகவும், குறவஞ்சி விசுவாசமாகவும் குறி கூறுதல் தீர்க்கதரிசனமாகவும், சிங்கன் குருவாகவும், நூவன் உபதேசியாகவும், அவர்கள் பிடிக்கும் பறவைகளாக மக்களும் அதற்குப் பயன்படுத்தப்படும் வலையாக இறைவாக்கு என்ற நற்செய்தியும்,[8] என உருவாக்கப்பட்டு இந்நூல் திகழ்கின்றது. **(ta.m.wikipedia.org)**

**வீரமாமுனிவர் என்ற கான்ஸ்டான்டின் ஜோசப் பெஸ்கி**

இவரின் இயற்பெயர் கான்ஸ்டான்டின் ஜோசப் பெஸ்கி. வீரமாமுனிவர் வெளிநாட்டைச் சார்ந்தவராக இருப்பினும் தமிழ் மரபினை மிகவும் கருத்தாகக் கடைப்பிடித்தது என்பது சிறப்பானதாகும். தமிழ்மொழியின் வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும் சிறப்பான பணிகளைச் செய்திருக்கிறார். 23 நூல்களைத் தமிழில் எழுதியதுடன் இயேசு கிறிஸ்துவின் வாழ்க்கை தொடர்பான நிகழ்ச்சிகளையும், இயேசுவின் வளர்ப்புத் தந்தையாகிய புனித யோசேப்பின் வரலாற்றையம் தமிழ்ப் பண்பாட்டுக்கேற்ப ‘தேம்பாவணி’ எனும் பெருங்காவியமாக இயற்றியுள்ளார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

தேம்பாவணி = தேம்பா + அணி எனப் பிரித்து வாடாதமாலை என்றும் தேன் + பா + அணி எனப் பிரித்து தேன் போன்ற இனிய பாடல்களின் மாலை என்றும் பொருள்படும். அவர் வருணிக்கின்ற பாலஸ்தீன நாடும், எருசலேம் நகரும் தமிழ் மண்ணின் மணம் கழ்வதாகவே உள்ளன. எடுத்துக்காட்டாக, காபிரியேல் வானதூதன் கடவுளின் நற்செய்தியை மரியாளிடம் கூறும் போது, மரியாள் கலக்கம் அடைந்ததையும் அக்கலக்கத்தை வானதூதர் உணர்ந்தறிந்தார் என்பதையும் வீரமாமுனிவர் பின்வருமாறு கூறுகின்றார்,

**பளிங்கு அடுத்தவற்றைக் காட்டும்**
**பான்மையால் இவள் முகத்தில்**
**உளம் கடுத்தவற்றை ஓர்ந்த**
**காபிரியேல் உறுதி சொல்வான்...(தேம்பாவணி பாடல் – 535)**
**நீர் அல்லதும் அலை இல்லது,**
**நிறை வான் பொருள் இடுவார்**
**போர் அல்லது பகை இல்லது,**
**புரிவான் மழை பொழியும்**
**கார் அல்லது கறை இல்லை, கடி**
**காவலும் அறனால்**
**சீர் அல்லது சிறை இல்லது திருமா.**
**நகர் இடையே தேம்பாவணி பாடல் – 162)**

எருசலேம் என்னும் திருமாநகரில் நீரே அலைபடுவதெல்லாம் வேறு அலைச்சல் இல்லை, நிறைந்த சிறந்த பொருளை இரவலர்க்கு இடுவாரிடையே எழும் போட்டிப் போரேயல்லாமல், பகையால் எழும்போர் இல்லை, தாரையாக வானத்தினின்று மழை பொழியும் கருமேகமே கறை கொண்டுள்ளதல்லாமல், மக்களிடையே எவ்விதக் கறையும் இல்லை. குற்றங்களைக் கடிவதற்கான காவலும் அறிவுணர்வினால் சீர் பெறுவதேயல்லாமல், சிறைக்காவல் என்பது இல்லை என்பதே இப்பாடலின் பொருளாகும்.

தேம்பாவணி என்ற காப்பியத்தின் மூலம் தேன்மொழியாம் தமிழ்மொழிக்குப் பெருமை சேர்த்த இவர், திருக்காவலூர்க் கலம்பகம், அடைக்கலமாலை, கலிவெண்பா, கித்தேரியம்மாள் அம்மானை, வேத விளக்கம் அன்னை அழுங்கல் அந்தாதி ஆகியவை இவருடைய படைப்புகள் ஆகும்.

**முடிவுரை**

கிறித்தவர் தம் எழுத்தாலும், உழைப்பாலும் தமிழ் பயனுற்றது. தமிழர்களும் பயன் பெற்றனர். மொழிக்காகவும், இனத்திற்காகவும் பணியாற்றிய கிறித்தவர்களின் பணியை, நாம் ஐரோப்பிய கிறித்தவப் பணி என்றும், நாம் பாகுபடுத்திக் கொண்டு தமிழ் இலக்கியத்தில் கிறித்துவத்தின் பங்கினை நாம் தெளிவாகக் கண்டோம். கிறித்தவர் தம் பணியில் தமிழில்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

இலக்கியம் வளர்ச்சி கண்டது. கிறித்தவர்கள் படைத்த இலக்கியங்கள் விவிலியத்தில் உள்ள மாந்தர் வரலாற்றையும், இயேசு கூறிய கதைகள், அறிவுரைகள் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டவை என்பதையும் நாம் கண்டோம். மேலும், உரைநடையில் படைப்பிலக்கியங்கள் உருவாகவும், பெருகவும் கிறித்தவர்கள் வழிவகுத்தனர்.

**பார்வை நூல்கள்**

[1] தமிழ் இலக்கிய வரலாறு, டாக்டர். மா. இராசமாணிக்கனார், பூங்கொடி பதிப்பகம், சென்னை.

[2] இலக்கியக்கலை, அ.ச. ஞானசம்பந்தன், தென்னிந்திய சைவ சித்தாந்த கழகம், சென்னை.

[3] இலக்கிய வரலாறு, சி. பாலசுப்பிரமணியன், மணமலர் பதிப்பகம், சென்னை.

[4] சமண பௌத்த கிறித்தவ இஸ்லாமிய இலக்கியங்கள், மணவை முஸ்தபா எம்.ஏ., மணவை பதிப்பகம், சென்னை – 40.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**வெங்கடேஸ்வரி & ஜாண்பால். "தமிழ் இலக்கியத்தில் கிறித்தவத்தின் பங்கு."** *தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 3, சிற.இதழ் 3, தொகுதி 3, ஜனவரி 2021, பக். 455-460. டிஓஐ: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.067**

**Cite this Article in English (MLA 8 Style) as:**
**Venkateswari** & **Johnpaul. "The Role of Christianity in Tamil Literature."** *International Journal of Tamil Language and Literary Studies*, Vol. 3: Special Issue - 3, Vol. 3, January 2021, pp. 455-460. DOI: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.067**

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். /I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

# எட்டுத்தொகை அகநூல்களில் சிவ வழிபாட்டின் நிறங்கள்

## Hue and Shiva Worship in the Internal Literature of "Ettuthokai"

**நா.ரம்யா,** முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை, நல்லமுத்துக் கவுண்டர் மகாலிங்கம் கல்லூரி, பொள்ளாச்சி.
**N.Ramya,** Ph.D Scholar, Department of Tamil, Nallamuthu Gounder Mahalingam College, Pollachi.
ORCiD: https://orcid.org/0000-0002-5102-1827

**முனைவர் ஆ.மகாலட்சுமி,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, நல்லமுத்துக் கவுண்டர் மகாலிங்கம் கல்லூரி, பொள்ளாச்சி.
**Dr A.Mahalakshmi,** Assistant Professor, Department of Tamil, Nallamuthu Gounder Mahalingam College, Pollachi.
ORCiD: https://orcid.org/0000-0001-5234-0750
**DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.068**

## Abstract

*Records of worship are widespread in Sanskrit literature. Most of the people worship the deities according to the land and the environment in which they live. However, the "Tolkappiyam" proves that none of the people of the land worshiped Lord Shiva as their primary deity. Although there were many deities worshiped during the Sangam period, the worship of Shiva has been the primary worship there. The hymns of God clarify the eight volumes of "Akananuru", "Purananuru", "Aingurunuru" and "Kalittokai". Lord Shiva has been glorified by the great Puluvars. The purpose of this article is to examine the records of Lord Shiva's Mani, the color of the garland worn, and the color of the water on the body.*

**Keywords:** Hue, Shiva Worship, Internal Literature, "Ettuthokai"

### முன்னுரை

சங்க இலக்கியங்களில் தெய்வ வழிபாடு குறித்த பதிவுகள் பரவலாகக் காணப்படுகிறது. அதிலும் மக்கள் வாழ்கின்ற நிலத்திற்கேற்பவும், சூழலுக்கு ஏற்பவும் தெய்வங்களை முதன்மைப்படுத்தி வழிபட்டுள்ளனர். இருப்பினும் நானில மக்களுள் எவரும் சிவபெருமானை முதன்மைக் கடவுளாகக் கொண்டு வழிபடவில்லை என்பதற்கு தொல்காப்பியம் சான்றாக முன்னிற்கின்றது. சங்க காலத்தில் பல தெய்வ வழிபாடு இருந்தாலும் சிவவழிபாடு அங்கு முதன்மை வழிபாடாகக் இருந்திருக்கிறது. *எட்டுத் தொகை* நூல்களான அகநானூறு, புறநானூறு, ஐங்குறுநூறு, கலித்தொகை ஆகிய நூல்களின் கடவுள் வாழ்த்து பாடல்கள் தெளிவுறுத்துகிறது. சிவபெருமானைப் புலவர் பெருமக்கள் முன்னிறுத்தியுள்ளனர். மேலும் அப்பாடல்களின் இடம்பெறும் சிவனது மேனி நிறம், அணிந்த மாலையின் நிறம், உடலில் பூசியிருக்கின்ற திருநீற்றின் நிறம் குறித்த பதிவுகளை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### சங்க இலக்கியங்களில் சிவனின் வேறு பெயர்கள்

சங்க இலக்கியங்களில் சிவன் என்ற சொல்லாட்சி இடம்பெறவில்லை. அதற்கு மாறாக *ஆதிரையான், ஆலமர் செல்வன், ஆனேற்றுக் கொடியுடையான், ஈசன், ஈர்ஞ்சடை அந்தணன்,*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

*காலக்கடவுள், தாழ்சடைப் பெரியோன், நீலமேனி வாலிழைபாகத்து ஒருவன், மணிமிடற்றன், முக்கட்செல்வன்* என்ற பெயர்களால் புலவர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

**சிவ வழிபாடு**

சங்ககால மக்களிடம் சிவனைத் தவிர பிற தெய்வங்களான மாயோன், சேயோன், வேந்தன், வருணன், மற்றும் கொற்றவை குறித்த வழிபாடுகளும் சிறு தெய்வ வழிபாடுகளும் சிறப்பாக இருந்திருந்தது. இதனை இலக்கண நூலான தொல்காப்பியம்,

**மாயோன் மேய காடுறை யுலகமும்**

**சேயோன் மேய மைவரை யுலகமும்**

**வேந்தன் மேய தீம்புன லுலகமும்**

**வருணன் மேய பெருமண லுலகமும்**

**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்**

**சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே (தொல். பொருள்.5)**

என்ற நூற்பாவில் தொல்காப்பியர் நானிலத்துக்குரிய தெய்வங்களைக் குறிப்பிடுகிறார். எந்நிலத்திற்கும் உரிய கடவுளாக சிவபெருமானைக் குறிப்பிடவில்லை. இதனால் பழங்காலத்து மக்களிடையே சிவவழிபாடு அதிக அளவில் செல்வாக்கு பெறவில்லை என்பது அறியலாகிறது. இதனை "*சிவன் ஒரு நிலத்துக்கேனும் உரிய தெய்வமாகக் கருதப்படாதது கவனிக்கத்தக்கது. சங்க நூல்களில் மிகச் சில இடங்களிலேயே சிவனைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. ஆனால் ஓரிடத்திலேனும் ஒரு நிலத்திற்குரிய தெய்வமாகக் கூறப்படவில்லை*" (தமிழர் சார்பு, ப.85) என்று சு.வித்தியானந்தன் கூறுகிறார்.

**சிவனின் மேனி செம்மை நிறம்**

சிவபெருமானின் மேனி நிறம் செம்மையா நீலமா என்ற குழப்பம் நம் மக்களிடையே அதிகமாக இருக்கிறது. இதற்கு காரணம் பெரும்பாலானப் பத்திரிக்கைகளிலும் கோவில் கடைகளில் விற்பனை செய்யும் புகைப்படத்திலும் சிவனை நீல நிறமாக காண்பிக்கின்றனர். இதனால் சிவனின் திருமேனி நீலநிறம் என்று எண்ணி விடுகின்றனர். உண்மையில் சிவன் செம்மை நிறத்தை உடையவன் என்பதை இலக்கியங்களின் வழி அறியலாகிறது. சிவபெருமான் செவ்வானத்தை போன்று சிவந்த திருமேனியை உடையவனும் அவ்வனத்தில் தோன்றுகின்ற பிறைச் சந்திரனைப் போன்ற வெண்மையான பற்களை உடையவன் என்பதை,

**செவ்வான் அன்ன மேனி அவ்வான்**

**இலங்கு பிறை அன்ன விலங்கு வால் வை எயிற்று (அகம், கடவுள் வாழ்த்து. பா.1:8-9)**

என்ற பாடல் மூலம் அறியலாம். இதேபோன்று சிவபெருமான் சிவந்த வானத்தைப் போன்ற திருமேனியை உடையவன் என்பதை,

**நெருப்பான மேனியர் செங்காட்டிலாத்தி நிழலருகே**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**இருப்பார் திருவுளம் எப்படியோ இன்னம் என்னை அன்னை (பட்டினத்தார் பா.104)**

என்ற பாடலின் பட்டினத்தார் சிவனின் சிவந்த நிறத்தைக் குறிப்பிடுகிறார்.

**திருநீற்றை பூசல்**

சிவபெருமான் தன் உடம்பு முழுவதும் திருநீற்றைப் பூசி கொண்டுள்ளதை இலக்கியங்களில் புலவர்கள் புலப்படுத்தியுள்ளார். இச்செய்தியை, **"மண்டுஅமர் பலகடந்து, மதுகையில் நீறு அணிந்து" (கலித்.க.வாழ்த்து. பா.1:8)** என்ற அடியில் மூலம் சிவபெருமான் சிவந்த மேனியில் வெண்மையான சாம்பல் பூசியதை உணரமுடிகிறது. மேலும், நான்காம் திருமுறையில் திருநாவுக்கரசர் பவளம் போன்ற சிவந்த மேனியில் பால் போன்ற வெண்மையான வெண்ணீற்றை பூசியதை,

**குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில்**
**பனித்த சடையும் பவளம் போல் மேனியில் பால் வெண்ணீறும்**
**இனித்தமுடைய எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால்**
**மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே (பாடல்.4)**

என்ற பாடல் குறிப்பிடுகிறது. சிவபெருமானை வெண்ணீறு செம்மேனி என்றும் வெண்ணீற்றார் செம்மேனியர் என்றும் ஆறாம் - எட்டாம் திருமுறையும் குறிப்பிடுகிறது.

**சிவபெருமான் மிடற்றின் நிறம்**

சிவபெருமானின் மேனி செந்நிறமாக இருந்தாலும் கழுத்துப் பகுதி மட்டும் நீல நிறமாக இருப்பதை நீலமணிக்கு உவமையாக புலவர்கள் கையாண்டுள்ளதை, **“யாழ் கெழு மணி மிடற்று அந்தணன்" (அகம் கடவுள் வாழ்த்து பாடல்15)** என்ற அடியில் மூலம் அறியலாம். இச்செய்தியை நீலமணி போன்ற கழுத்தினை உடையவன் சிவபெருமான் என்பதை, **”மாறாப்போர் மணிமிடற்று எண் கையாய் கேள் இனி" (கலித்தொகை.பா.1:4)**

என்ற அடி மூலம் உணர முடிகிறது.

**சிவபெருமானின் மாலையின் நிறம்**

சிவபெருமான் அணிந்திருக்கும் மலர் மாலைகளின் நிறத்தை புலவர் பெருமக்கள் உவமையாக எடுத்தியம்பியதை இலக்கியங்களின் வாயிலாக அறியமுடிகிறது. கார்காலத்தில் மலரக் கூடிய பொன் போன்ற நிறத்தை உடைய கொன்றை மலர்களால் தொடுக்கப்பட்ட மாலையை அணிந்தவன் சிவபெருமான் என்பதை, **"கார் விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த்" (அகம்.,கடவுள் வாழ்த்து. பாடல்1:1)** என்ற வரியில் மூலம் அடையலாம். இதே போன்று சிவபெருமான் வெள்ளெருக்கம் மலர் மாலையையும் அணிந்தவன் என்ற செய்தியை, **"விரை உடைய வெள்ளெருக்கம் கண்ணி யானை" (ஆறாம் திருமுறை.ப.5)** என்ற அடியில் அறியமுடிகிறது.

**வாலிழைபாகத்து ஒருவன்**

சிவபெருமானின் திருமேனி செம்மை நிறத்தில் இருந்தாலும் தன் ஒரு பாகத்தை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

உமையம்மைக்கு கொடுத்து அர்த்தநாரீஸ்வரராக காட்சித் தரும் பொழுது சிவபெருமான் நீல நிறமாக இருக்கின்றான். அதற்கு காரணம் சிவந்த மேனியையுடைய சிவபெருமான் கருமை மேனியையுடை உமையம்மைக்கு ஒரு பாகத்தை கொடுத்ததால் செம்மையும் கருமையும் சேர்ந்து நீலநிறமாக மாறியது. இலக்கியத்திலும் புலவர்கள் இதனை பதிவுச்செய்துள்ளனர்.

**நீல மேனி வாலிழை பாகத்து**
**ஒருவன் இருதாள் நிழற்கீழ**
**மூவகை உலகும் மகிழ்ந்தன முறையே" (ஐங்குறுநூறு கடவுள் வாழ்த்து பாடல்)**

என்ற பாடல் மூலம் அறிய முடிகின்றது. இவ்வாறாக எட்டுத்தொகை அகநூல்களில் சிவ வழிபாட்டின் பயன்படுத்தும் மாலையின் நிறம் சிவனின் நிறம் இலக்கியங்களின் கூறப்படும் சிவனின் பெயர்கள் போன்றவற்றை பற்றி இக்கட்டுரையின் வாயிலாக அறிய முடிகிறது.

**துணைநூல் பட்டியல்**

[1] முனைவர் அ. தட்சிணாமூர்த்தி. அகநானூறு. மணிமேகலை பிரசுரம், சென்னை, 1998.
[2] முனைவர் அ. தட்சிணாமூர்த்தி. *ஐங்குறுநூறு.* மணிமேகலை பிரசுரம், சென்னை, 1998.
[3] முனைவர் அ. தட்சிணாமூர்த்தி. *கலித்தொகை .* மணிமேகலை பிரசுரம், சென்னை, 1998.
[4] சு.வித்தியானந்தன். தமிழர் சார்பு. பூம்புகார் பதிப்பகம், சென்னை, 1980.
[5] இளம்பூரணர். *தொல்காப்பியம் .* மணிமேகலை பிரசுரம், சென்னை, 1981.
[6] நான்காம் & ஆறாம் திருமுறை. திருப்பனந்தாள் மடம், 1985.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**
**ரம்யா & மகாலட்சுமி. "எட்டுத்தொகை அகநூல்களில் சிவ வழிபாட்டின் நிறங்கள்."** *தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 3, சிற.இதழ் 3, தொகுதி 3, ஜனவரி 2021, பக். 461-464. டிஒஐ: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.068**

**Cite this Article in English (MLA 8 Style) as:**
**Ramya & Mahalakshmi. "Hue and Shiva Worship in the Internal Literature of "Ettuthokai"."** *International Journal of Tamil Language and Literary Studies*, Vol. 3: Special Issue - 3, Vol. 3, January 2021, pp. 461-464. DOI: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.068**

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். /I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

# பாவைப் பாடல்களில் பக்தி சார் அறிவியல் கூறுகள்

**Bhakthi Oriented Scientific Elements in Paavai Padagal**

**முனைவர் ம.ராணி,** தலைவர்/உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
ஸ்ரீ சங்கர்லால் சுந்தர்பாய் ஷசுன் ஜெயின் மகளிர் கல்லூரி, தி.நகர், சென்னை – 600 017.
**Dr M.Rani,** Head/Assistant Professor, Department of Tamil,
Shri Shankarlal Sundarbai Shasun Jain College for Women, T.Nagar, Chennai – 600 017.
**ORCiD:** https://orcid.org/0000-0002-9089-1251
**DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.069**

## Abstract

*In this article, one can see that "Thirupavai" and "Thiruvembavai" are the spiritual works from Tamil Literature that record the scientific elements that supports human life. These devotional literatures that sing music with Tamil gives lots of scientific facts that would give rich health physically and mentally. The purpose of the fast and its benefits can be deduced from these two literatures. It is possible that Tamil literature has been handed down for generations because of its openness to devotion and science. The present day man has to struggle and live with his environment. The purpose of this article is to show that contemporary people who live without knowing the environment and the science around them in the spiritual works can know how to redeem themselves through the adoption of the sacred principles as evinced in the hymns.*

**Keywords:** Devotional Literature, "Thirupavai", "Thiruvembavai", Scientific Elements

### முன்னுரை

மொழி என்பது ஒருவர் கருத்தைப் பிறருக்குத் தெரிவிக்கும் தெளிவிக்கும் அழகிய ஊடகம் என்பது அறிந்ததே. சைகை , ஓவியம், சீழ்க்கை , ஒலி எனப் பலவிதப் பரிணாமங்களையும் பரிமாணங்களையும் கடந்து பயணித்து நிற்கிறது மொழி. அது மனிதனுக்குத் தாம் விரும்பியதை விரும்பியவண்ணம் வெளிப்படுத்த உதவி நிற்கும் ஓர் அற்புதக் கருவியாகும். மனிதன் என்ற இனத்தால் ஒன்றுபடும் மன்பதை மொழியால் வேறுபட்டு அவரவர்க்குரிய தனி அடையாளங்களுடன் திகழ்கிறது. அவ்வகையில் உலகின் மூத்த மொழிகள் என்ற வரையறைக்குள் முன் நிற்கும் தமிழ்மொழி தனக்கென்று சில தகவமைப்புகளைக் கொண்டு நிற்கிறது. உலகின் மொழியெல்லாம் எழுத்து, சொல், சொல்லின் பொருள் என்ற இலக்கணங்களைப் படைத்துக் கொண்டிருந்த காலத்தில் தமிழ்மொழி சற்றே மாறுபட்ட இலக்கணத்தைப் படைத்ததைப் பார்க்க முடிகிறது. எழுத்து, சொல், சொல்லின் பொருள் என்பதைத் தாண்டி வாழ்வின் பொருள்களான அகம் புறம் இவற்றின் இலக்கணம் பேசியது தமிழ். இவையொரு புறம் இருக்க தமிழ் இலக்கியங்களை நோக்கும்போது அவற்றிலும் ஆழ்ந்து பார்க்க வேண்டிய பல கூறுகள் இருப்பதை அறியலாம்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

காலத்தைப் பதிவு செய்யும் கண்ணாடியே இலக்கியம் என்ற கூற்றுக்கும் இணங்கி அன்றைய புலவர்களின் பல்துறை சார்ந்த அறிவுத்திறனை அறிய உதவும் கருவியாகவும் இருப்பதே இலக்கியம் என்பதைத் தமிழ் இலக்கியங்கள் நமக்குக் காட்டுகின்றன. தாம் நுகர்ந்த பயன்களை அடுத்தத் தலைமுறைக்கு கடத்தி அவர்களும் பயனடையுமாறு செய்தனர் முந்தைய தலைமுறையினர். குறிப்பாகப் படைப்பாளர்கள் இப்பணியைச் செவ்வனே செய்தனர்.

**பாவை நோன்பு**

மார்கழி மாதத்தில் கன்னிப்பெண்கள் விடியலுக்கு முன்ப எழுந்து ஆற்றில் நீராடி, கரையில் பாவைக்களம் அமைத்து அதில் பாவை ஒன்றை வடிவமைத்து அதனைப் பெண் தெய்வமாக வணங்கி வழிபடுவதே பாவை நோன்பு என்ற கருத்து நிலவுகிறது. இந்நோன்பிற்காகக் கன்னிப்பெண்கள் நாட்காலே எழுந்து விடுவது வழக்கம். தொன்று தொட்டு நம் தமிழகத்தில் பல இடங்களில் இந்நோன்பு பின்பற்றப்படுகிறது. கன்னிப்பெண்கள் சிறந்த கணவனைப் பெறவேண்டும் என்றும், திருமணமான பெண்கள் கொண்ட கணவன் பிரியாமல் இருக்க வேண்டும் எனறும் ஊரும் நாடும் செழிக்க, மும்மாரி மழை பொழிய வேண்டும் என்றும் பெண்கள் தமக்காவும் பிறருக்காகவும் வேண்டுவர்.

வைணவப் பெண்கள் திருப்பாவைப் பாடல்களையும் சைவப்பெண்கள் திருவெம்பாவைப் பாடல்களையும் பாடி மகிழ்வர். இவ்வாறு வழிபடப்படும் பாவை நோன்பில் வாழ்வியலைச் சூழ்ந்த அறிவியல் பதிவு செய்யப்பட்டுள்ளது. அவற்றைப் பார்ப்போம். நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம் என்பது பழமொழி. நாம் இதனை வெறும் வார்த்தைகளாகக் கொள்ளாமல் ஆழ்ந்து நோக்கினால் அதன் உண்மையை உணரலாம். நோயின்றி வாழும் மனிதனே உலகில் மகிழ்வுடன் இருப்பதைப் பார்க்கலாம். பொன்னோ பொருளோ பிற காரணிகளோ மனிதனுக்கு வாழ்வை நிறைவாக்குவது இல்லை. அதனை நோயுறம்போது தெளிவாக உணரமுடியும்.

நோயற்ற வாழ்வைப் பெற வேண்டுமெனில் அகத்திலும் புறத்திலும் சில ஒழுங்குமுறைகளை நாம் பின்பற்ற வேண்டும். **வைகறை யாமம் துயிலெழுந்து தாம் செய்யும் நல்லறமும் ஒண்பொருளும் ... முந்தையோர் கண்ட முறை (45)** என *ஆசாரக்கோவை* நமக்கு அறிவுறுத்துகிறது. அற இலக்கியங்கள் கூறும் நல்லொழுக்கங்களைப் பின்பற்றினாலே நம் உடலும் உள்ளமும் உறுதியாய் இருப்பது திண்ணம். பாவை நோன்பு மேற்கொள்ளப்படும் மார்கழி மாதம் பிற மாதங்களைவிட சிறப்பாக அமைய நிறைய அறிவியல் காரணங்களைக் கூறலாம்.

மார்கழி மாதம் குளிர் நிறைந்த மாதம். நம் உடலானது குளிர் காலத்தில் சோர்வடைந்து விடும். வளர்சிதை மாற்றங்கள் குறைவாக உடலில் மாறும் என்பது அறிவியல் உண்மை. மாதம் முழுவதும் தொடர்ச்சியாக வைகறையில் நோன்பு நோற்கும்போது மனித உடலுடன் இயைந்து விடுகிறது குளிர். குளிருக்கு ஏற்ற வகையில் உடலானது மாறிவிடுகிறது. எனவே

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

உடலும் உள்ளமும் சுறுசுறுப்படையவும் வளர்சிதை மாற்றங்களைச் சீரமைத்திடவும் நம் முன்னோர்கள் மேற்கொண்ட வழிபாடே இந்த மார்கழி நோன்பாகும். குறிப்பாகப் பெண்களுக்கு மிகுந்த பயனை அளிப்பதாக அமைந்துவிடுகிறது. மார்கழியில் வாசலில் கோலமிட அதிகாலையில் பெண்கள் எழுந்து, அப்போது அவர்கள் பெறுகின்ற குளிர்ந்த மற்றும் சுத்தமான காற்று அவர்களின் உடலுக்கு புத்துணர்வினை அளிக்கிறது. பொதுவாக குனிந்து கோலம் போடுவதால் பெண்களின் உடலுக்கு சிறந்த பயிற்சியாக இருக்கும்.

**திருப்பாவை**

"மானிடர்க்கென்று பேச்சுப்படின் வாழகில்லேன்" என்று திருவரங்கனையே தம் நாயகனாக நினைத்து வாழ்ந்த ஆண்டாள் இயற்றிய திருப்பாவையின் முப்பது பாடல்களும் பெண்கள் மேற்கொள்ளும் பாவை நோன்பினைப் பற்றியதாகும். **"மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளாம்..."** என்று தொடங்கும் திருப்பாவையில் மார்கழியில் பெண்கள் செய்ய வேண்டுவன செய்யக் கூடாதன ஆகியவற்றை எடுத்துரைக்கிறார் ஆண்டாள்.

**நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி**
**மையிட்டு எழுதோம் மலரிட்டு நாம் முடியோம்**
**செய்யாதன செய்யோம் தீக்குறளைச் சென்றோதோம்.... (திருப். 67)**

என்று ஆண்டாள் பாடியுள்ளார். பொதுவாக குளிர்காலத்தில் உணவு செரிமானம் சீராக இருக்காது. எனவே பால், நெய் போன்ற உணவுப்பொருட்களைத் தவிர்த்தல் நலம். மலர் சூடுவதாலும் மையிடுவதாலும் உடலானது மேலும் குளிர்ச்சி அடையும் ஆதலால் இவைகளைத் தவிர்த்தலும் நலம் என்ற அடிப்படையில் ஆண்டாள் பாடியிருக்கிறார். பரந்தாமன் மேல் கொண்ட பக்தியை வெளிப்படுத்தும் பாடலில் கூட பெண்களுக்கு சிறந்ததொரு அறிவுரையை வழங்கியிருக்கிறார்.

**ஆழியுள் புக்கு முகந்துகொடு ஆர்த்தேறி**
**ஊழி முதல்வன் உருவம்போல் மெய்கறுத்து... (திருப். 69)**

என்று மழை எவ்வாறு பெய்கிறது என்பதை விவரிக்கிறார்.

**திருவெம்பாவை**

இயற்கையின் அழகுகளாம் பறவைகள் அதிகாலையில் எழுப்பிடும் சத்தங்களையும் கோயிலின் மணியோசையையும் பற்றிச் சொல்லி பெண்கள் ஒருவரையொருவர் எழுப்புகின்றனர். குளிர்காலத்தில் தூக்கம் என்பது சற்று அதிகமாகவே இருக்கக்கூடும். அதனால் விடியற்காலையில் நான் வந்து எழுப்புவேன் என்று முதல்நாள் சொல்லிச் சென்ற பெண்கள்கூட எழுந்திருக்க முடியாமல் செய்யும் குளிர்காலத்தை திருவெம்பாவையில் மாணிக்கவாசகர் பதிவு செய்துள்ளார்.

**கோழி சிலம்பச் சிலம்பும் குருகுளங்கும்**
**ஏழில் இயம்ப இயம்பும்வெண் சங்குளங்கும்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**கேழில் பரஞ்சோதி கேழில் பரங்கருணை**

**கேழில் விழுப்பொருள்கள் பாடினோம்கேட்டிலையோ... (திருவெம். 87)**

திருப்பாவையிலும் திருவெம்பாவையிலும் மார்கழி மாதம் முழுவதும் கன்னிப்பெண்கள் விடியற்காலையில் உறங்குகின்ற பெண்களை எழுப்பி கோயிலுக்குச் செல்வதாக ஆசிரியர்கள் பாடியுள்ளனர். இறைவன் மீது கொண்ட பக்தியை உணர்த்துவதற்காக எழுதப்பட்ட பாடல்களிலும் பின்வரும் தலைமுறையினர் பயனுறும் வகையில் பல குறிப்புகளைப் பதிவு செய்த நம் புலவர்கள் இலக்கியத்தின்வழி பக்தியையும், வாழ்வியல் நெறிகளையும் , அறிவியல் கூறுகளையும் ஒருங்கே போற்றியிருப்பதைக் காணலாம்.

**துணை நின்ற நூல்களும் இணையதளங்களும்**

[1] தமிழ் இலக்கிய வரலாறு , முனைவர் சி.சேதுராமன், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 1980.

[2] பன்னிரு திருமுறைகள், வர்த்தமானன் பதிப்பகம், 1999.

[3] https://temple.dinamalar.com/margazhi/detail.php?id=50314 8.30, a.m., 10.12.2020.

[4]https://ta.wikipedia.org/wiki/%E0%AE%A4%E0%AE%BF%E0%AE%B0%E0%AF%81%E0%AE%B5%E0%AF%86%E0%AE%AE%E0%AF%8D%E0%AE%AA%E0%AE%BE%E0%AE%B5%E0%AF%88 9.15.a.m.,10.12.2020

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**ராணி. "பாவைப் பாடல்களில் பக்தி சார் அறிவியல் கூறுகள்."** *தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்,* தொகுதி 3, சிற.இதழ் 3, தொகுதி 3, ஜனவரி 2021, பக்.465-468. டிஒஐ: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.069**

**Cite this Article in English (MLA 8 Style) as:**
**Rani. "Bhakthi Oriented Scientific Elements in Paavai Padagal."** *International Journal of Tamil Language and Literary Studies,* Vol. 3: Special Issue - 3, Vol. 3, January 2021, pp.465-468. DOI: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.069**

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். /I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.




தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

# பாண்டிய நாட்டு சிவத்தலங்களில் திருப்பூவணம்
# Shiva Temple of Thiruppuvanam in Pandiya Kingdom

**முனைவர் ஆ. இராஜா,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,மன்னர் திருமலை நாயக்கர் கல்லூரி, மதுரை – 625 004.
**Dr. A. Raja,** Assistant Professor, Department of Tamil, Mannar Thirumalai Naicker College, Madurai-625 004
ORCiD: https://orcid.org/0000-0003-2288-4006
**DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.070**

## Abstract

*Thiruppuvanam is one of the most famous Shiva temples in Pandiya country. It takes equal place to Kasi temple of Varanasi. It was worshiped by the triumvirs Chera, Chozha, and Pandiya Kings. We can see here the Lord Shiva performed a special alchemy in the role of saga for his devotee Ponnanaiyal which is said in 36th Thiruvilaiyadal out of 64. The Shaiva saints had sung holy hymns on this holy place. Hence, the article tries to focus on the temple and its chronology and the legendary events related to the temple.*

**Keywords**:Pandiya's Kingdom, Saivam, Shiva Temple, Thiruppuvanam, Ponnanaiyal

### முன்னுரை

தேவார, திருவாசகப் பதிகம் பாடப் பெற்ற தலங்களையே, பாடல் பெற்ற தலங்கள் என்று கூறுவர். அந்த வகையில் பாடல் பெற்ற சிவத்தலங்கள் மெத்தம் 274. அவற்றுள் பாண்டிய நாட்டுத் தலங்கள் பதினான்கு.சைவ சமயக் குரவர்கள் பாடிய பாண்டிய நாட்டு சிவத்தலங்களுள் பதினோராவது தலமாக திருப்பூவணத்தலம் திகழ்கின்றது. இத்தலத்தினைப் பற்றி சைவ சமயக் குரவர்கள் நால்வரும் பாடியுள்ளனர். இத்தலம் மூர்த்தி,தலம், தீர்த்தம், தலமரம் என்ற நான்காலும் சிறப்பு பெற்ற தலம். இத்தல வரலாற்றினையும் அதன் சிறப்பினையும் இக்கட்டுரையில் காண்போம்.

### பாண்டிய நாட்டு சிவதலங்கள்

பாடல் பெற்ற சிவத்தலங்களுள் பாடிய பாண்டிய நாட்டு தலங்கள் பதினான்கு அவையாவன, திருஆலவாய், திருஆப்பனூர், திருப்பரங்குன்றம், திருஏடகம், திருக்கொடுங்குன்றம், திருப்புத்தூர், திருப்புனவாயில், திருராமேச்சுரம், திருஆடானை, திருக்கானப்பேர், திருப்பூவணம், திருச்சுழியல், திருக்குற்றாலம் திருநெல்வேலி என்பனவாகும்.

### தலஇருப்பிடம்

திருப்பூவணம் மதுரையிலிருந்து 18 கி.மீ தொலைவில், மதுரை - இராமேசுவரம் தேசிய நெடுஞ்சாலையில்அமைந்துள்ளது. சிவகங்கை மாவட்டம், மானாமதுரை வட்டத்தில் திருப்புவனம்; பேரூராட்சியாக இத்தலம் உள்ளது. வைகையாற்றின் தென்கரையில் கிழக்கு நோக்கிய வண்ணமாக சுவாமியும், அம்பாளும் இத்திருக்கோயிலில் வீற்றிருக்கின்றனர்.

### தலப் பெயர்க்காரணம்

பாண்டிய நாட்டின் பழம்பதியாக உள்ளது திருப்பூவணத்தலம். இத்தலம் பண்டைக் காலத்தில் பூக்கள் நிறைந்த பகுதியாக இருந்தது. இறைவன் தானே விரும்பி வைகையாற்றின்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

கரையினிலே பூமரங்கள் நிறைந்த புட்பவனத்திலே இலிங்கவடிவாய் உமையம்மையார் வளர்த்த பாரிஜாத மரத்தினடியில் தோன்றினார். பொதுவாகச் சிவலிங்கங்கள் கல்லினால் ஆனவைகளாக இருக்கும். ஆனால்

> **திருப்பூவணத்தலத்திலோ பூவாக உதித்த காரணத்தினால் பூவண்ணன், பூவணநாதர்என்ற காரணப்பெயர்கள் ஏற்பட்டுள்ளன.** (திருப்பூவணக்காசி, பக்கம்-12)

என்கிறார் காளைராஜன்.

போக்குவரத்து இல்லாத அன்றைய காலக் கட்டத்தில் எங்கு செல்ல வேண்டும் என்றாலும், நடந்துதான் செல்ல வேண்டிய சூழல் இருந்தது. அதனடிப்படையில்,

> **தென்திசையின் தாமிரபரணி நதிக்கரையில் வேணுவனம் என்னும் ஊரின் மேற்கு திசையில் கோலாகலமென்னும் கிராமத்திலே வேதசர்மா என்னும் பிராமணன் ஒருவன் இருந்தான். அவன் வேதங்களையும், சாஸ்திரங்களையும் நன்கு கற்றவன், கடமை தவறாது செய்து ஐந்தெழுத்து மந்திரத்தை விதிப்படி ஓதுபவன். குபேரனுக்கு ஒப்பாக வாழ்பவன். அவன் மூப்பு பருவம் வந்து இயற்கை மரணமடைந்தான். அவனுடைய மகன் தருமஞ்ஞன் என்பவன் தன் தந்தையைப்போலவே வேதங்களை ஓதியுணர்ந்து ஒழுக்கத்தினை மேற்கொண்டு வாழ்ந்து வந்தான். தன்னுடைய தந்தைக்கு இறுதிக்கடமைகளை அன்புடன் முடித்து அஸ்தியை ஒரு குடத்திலே அடைத்துத் வாயினை மூடி அரக்கு முத்திரை வைத்து கங்கையிலே இட வேண்டி தன் மாணாக்கனோடு வட திசை நோக்கி காசிக்குச் சென்றான். செல்லும் வழியில் உள்ள சிவதலங்களிலே உள்ள பெரியோர்களுக்கு தானங்கள் கொடுத்து தீர்த்தங்களிலே நீராடினான். மதுரையை அடைந்து அங்கு கொண்டு அங்குள்ள தீர்த்தங்களிலே மூழ்கி தானங்கள் அளித்து மூன்று தினம்தங்கிஅருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரரை வணங்கி பின்னர் திருப்பூவணம் வந்து சேர்ந்தான்.**
>
> **சிவலிங்கப் பெருமானை தரிசித்துவிட்டு மணிக்கன்னிகை தீர்த்தக்கரையை அடைந்து வயிரவக் கடவுளை எள்ளு, அருகு, அட்சதை இவைகளாலே பூசித்து அஸ்திக்குடத்தை அக்கரையிலே வைத்துவிட்டு தீர்த்தத்திலே மூழ்கினான். மூழ்கும் பொழுது பெருமழை பெய்தமையால் விரைந்து எழுந்து கரை ஏறும் பொழுதுகால் இடறி அஸ்திக்குடம் அத்தீர்தத்திலே விழுந்தது. உடனே அக்குடத்தை எடுத்துப்பார்த்தான் அதனுள்ளே இருந்த எலும்புகள் முழுவதும் தாமரை மலரும், உட்பட பல மலரும் இருக்கக்கண்டான். எலும்பு பூவாக மாறியதை கண்டு பெரிதும் மகிழ்ந்து பர்ணசாலைகளிலே வசிக்கின்ற முனிவர்களிடம் போய் நிகழ்ந்தவற்றைக் கூறினான். அவர்களும் இத்தலம் காசியைவிடச் சிறப்புடையதாம் என்றனர். உடனே தருமஞ்ஞன் என்னுடைய பிதா முதலியோர் நற்கதியடைந்தனர் என்று கூறிச் சிவாலயஞ் சேர்ந்து, சிவலிங்கப் பெருமானை தரிசித்து வணங்கித் துதித்த பொழுது, சிவபெருமான் காளை வாகனத்தில் தோன்றிக் காட்சி கொடுத்துத் தருமஞ்ஞனுக்கும் நற்கதியை அருளி மறைந்தருளினார். தருமஞ்ஞசனைப் புகழ்வோரும் அவன் கதையைப் படிப்போரும் பாவங்கள் நீங்கிச் சுவர்க்கலோகம் சேர்வர். (பக் 21-22)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

என்று திருப்பூவணப் புராணம் கூறுகிறது. இறைவன் பூவாக உதித்த காரணத்தினாலும், அஸ்தி பூவாக மாறிய காரணத்தாலும் இவ்வூருக்குத் திருப்பூவணம் என்ற உண்டானது எனலாம்.

**தலத்தின் வேறுபெயர்கள்**

தென்நாட்டில் பழமையானது பாண்டிய நாடாகும். பாண்டிய நாட்டின் பழம் பதியாக உள்ளது திருப்பூவணம் . திருப்பூவணம் தற்பொழுது திருப்புவனம் என்று அழைக்கப்பட்டு வருகிறது. பண்டைத்தமிழ் இலக்கியங்களில்(தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்புகழ், திருப்பூவணநாதர் உலா) திருப்பூவணம் என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை **“கிரேதாயுகத்தாலே தேவிபுரம், புட்பவனம் என்றும் திரேதாயுகத்திலே இலக்குமிபுரம் என்றும், துவாபர யுகத்திலே பிரமபுரம் என்றும்; கலியுகத்திலே பாஸ்கரபுரம், ஆனந்தவனம், முக்தியாச்சிரமம், ரகசியசிதம்பரம், தெட்சிணகாசி, சதுர்வேதபுரம், பிதுர்முத்திபுரம் என்னும் பெயர்களும் பெறும்”** என்கிறார் காளைராஜன் (திருப்பூவணப் புராணம் பக்கம் 18). இவ்வாறாக பல்வேறு பெயர்களால் அழைக்கப் பெற்றதனை அறியமுடிகிறது. இருப்பினும் இன்று அனைவராலும் திருப்புவனம் என்றே அழைக்கப்பட்டு வருகின்றது.

**சுவாமியின் திருப்பெயர்கள்**

இறைவன் **புட்பவனநாதர், பாஸ்கரபுரீசர், பிதுர்மோட்சபுரீசர், பிரம்மபுரீசர், இரகசிய சிதம்பரேசர், திருப்பூவண நேசம், அடைவார் வினைத்தீர்ப்பவர், சௌந்திரநாயகர், அழகியநாயகர்** என்ற திருப்பெயர்களால் அழைக்கப்படுவதாக கி.காளைராஜன் அவர்கள் கூறுகின்றார். (திருப்பூவணக் காசி ப-55) இருப்பினும் இறைவன் புஸ்பவனேசுவரர், பூவணநாதர்என்னும் பெயர்களில் அழைக்கப்படுகின்றான்.

**அம்பாளின் திருப்பெயர்கள்**

அம்பாள் **சௌந்திரநாயகி, தடித்தம்பை, சுவர்ணவல்லி, அன்னபூரணி, அழகியநாயகி, அழகியமின், மின்னம்மை, மின்னனையாள், மின்னாள்** என்ற திருப்பெயர்களால் அழைக்கப்படுவதாக கி.காளைராஜன் கூறுகின்றார். (திருப்பூவணக் காசி ப-55) இருப்பினும் அம்பாள் சௌந்திரநாயகி அம்மன் என்னும்திருப்பெயரால் அழைக்கப்படுகின்றாள்.

**தலமரம்**

உமா தேவியார் வளர்த்த பாரிசாத மரமே ‘தலமரம்’ என திருப்பூவணத் தலபுராணம் கூறுகின்றது. உமாதேவியார் வளர்த்த பாரிசாத மரத்தின் அடியில் இறைவன் சுயம்பு லிங்கமாக முளைத்தார் என திருப்பூவண தலப்புராணம் கூறுகின்றது. ஆனால் தற்போது இத்தலத்தில் பாரிசாத மரம் இல்லை. பலா மரம் தலமரமாக இருக்கின்றது.

**தீர்த்தம்**

திருப்பூவணத்தில் பாபநாச தீர்த்தம், மணிக்கன்னிகை (அ) மணிக்குண்டம், மிரம்ம தீர்த்தம், வசிட்டதீர்த்தம், இந்திரதீர்த்தம், விஷ்ணுதீர்த்தம் ஆகிய தீர்த்தங்கள் உள்ளன.

**திருப்பூவணம் தலத்தில் வழிபட்டவர்கள்**

விநாயகர், உமாதேவியார், திருமால், திருமகள், பிரம்மதேவர், அகத்தியர், காளி, சூரியன், திரணாசனர், தருமஞ்ஞன், மார்கண்டேயன், வசிஷ்டர், இந்திரன், சந்திரன்,நளன்,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

சாகானர், பொன்னனையாள், மூவேந்தர்கள் ஆகியோர் அனைவரும் இத்தல இறைவனை வழிப்பட்டுப் பேறு அடைந்தவர்கள் ஆவர். மூவேந்தர்கள் இத்தல இறைவனை வழிப்பட்டதை, **"முறையார் முடிசேர் தென்னர் சேரர் சோழர்கள் தாம் வணங்கும்"** (சம்பந்தர் தேவாரம் - பாடல் 1, வரி 3, பக்கம் 295) என்ற பாடல்வரி விளக்குகின்றது, மேலும், திருமால் பிரமன் வழிப்பட்டதை

**பொய்யா வேத நாவினானும் பூமகள்காதலனும்**
**கையால் தொழுது கழல்கள் போற்ற** (சம்பந்தர் தேவாரம் - பாடல் 9, வரி 3-4, 297)

என்ற பாடல் சம்பந்தர்வரிகள்விளக்குகின்றது.

சமயக்குரவர்களும் அருணகிரிநாதரும், கருவூர்தேவரும் இத்தலம் வந்து இறைவனை தரிசித்து பதிகம் பாடியுள்ளனர்.

**தலத்திலிருக்கும் பிற தெய்வக் கோயில்கள்**

விநாயகர் கோயில், முருகன் கோயில், இரங்கநாத பெருமாள் கோயில் , அருள்மிகு மடப்பரம் காளியம்மன் கோயில், பூமாரியம்மன் கோயில், உச்சிமாகாளி அம்மன் கோயில், திரௌபதியம்மன கோயில்,வீரபத்திர சுவாமி கோயில், அய்யனார் கோயில், நால்வர் கோயில், கோரக்கநாத சித்தர் கோயில், கத்திரிக்காய் சித்தர் கோயில்போன்ற இன்னும் பல கோயில்களும் உள்ளன.

**தலச்சிறப்புகள்**

- காசிக்கு நிகரான தலம் இது. எனவே இதனை புட்பவனகாசி என்று அழைக்கின்றனர். எனவே, இத்தலம் நம் முன்னோர்களுக்கு செய்ய வேண்டிய பிதுர் கடன்களைச் செய்யும் சிறப்புபெற்ற தலமாக விளங்குகின்றது.
- பிரம்மன் செய்த பாவத்தை நீக்கி அருளிய திருத்தலம்.
- திருமகளின் சாபம் நீங்கிய தலம்.
- பார்வதி தேவியார் சிவனின் திருவருளைப் பெற பாரிஜாத மரத்தின் அடியில் முளைத்த சுயம்பு லிங்கத்தை வணங்கிய தலம்.
- காளிதேவி சிவலிங்கம் வைத்து பூசை செய்த தலம்.
- நளமகாராஜாவிற்கு ஏற்பட்ட கலிகாலத்தின் கொடுமையை அகற்றி மனசாந்தி அளித்த தலம்.
- தேவார மூவர்க்கும் வைகையாற்று மணல் லிங்கமாக காட்சியளித்ததால் அவர்கள் மிதித்து செல்ல அஞ்சி ஆற்றின் அக்கறையில் இருந்தே சிவபெருமானை வழிப்பட்ட தலம்.எனவே இறைவனின் திருமுன் உள்ள நந்தி சற்று சாய்ந்திருப்பதை இன்றும் காண முடிகிறது. மூவரும் நின்று வணங்கிய இடம் தற்போது நால்வர் கோயில் என்ற பெயரில் உள்ளது.
- பொன்னனையாள் எனும் நாட்டிய நங்கைக்காக சிவபெருமான் சித்தர் வடிவில் வந்து இரசவாதம் செய்து திருவிளையாடல் நிகழ்த்திய திருத்தலம். திருவிளையாடற்புராணம், ரசவாதம் செய்த பாவம் 36வது திருவிளையாடல் பொன்னனையாள் செய்த இறைவனின் திரு உருவத்தினைக் கிள்ளிய நகக்குறி அடையாளத்தை இத்தலத்தில் காணமுடிகின்றது.
- தாழம்பூ வழிபட்டு தனது பாவத்தினை போக்கிய தலம்
- இத்தல ஆடலரசன், சிலா விக்கிரத்தில் அமைந்திருக்கின்றார். இங்குள்ள நடராச மூர்த்தம் அற்புதமான வேலைபாடுடையது.
- சைவ சமயக்குரவர்கள் நால்வரும் பாடிய பாடல் பெற்றதலம்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

- சேர, சோழ, பாண்டிய மூவேந்தர்களும் வந்து வழிபட்ட தலம்.
- தருமஞ்ஞன் என்ற அந்தணன் கொண்டுவந்த அஸ்திக்கலசத்தில் இருந்த எலும்புகள் பூவாய் மாறிய திருத்தலம்.
- கோரக்கநாதர் சித்தரும், கத்தரிக்காய் சித்தரும் வாழ்ந்த சிறப்புபெற்ற தலம் இத்தலம்.

நல்ல வளமிக்க தலம். இத்தலத்தினை,

**பாரார்வைகைப் புனவாய்பரப்பிப் பன்மணிபொன் கொழித்துச்**
**சீரார்வாரி சேரநின்ற தென் றிருப்பூவணமே (சம்பந்தர் தேவா. - பா 3, வரி 3-4, பக் 296)**

என்ற சம்பந்தர் பாடல் வரிகள் மண்ணுலகில் பொலிவுறும் வைகைக் கரையில் பொன்மணிகள் கொழிக்க செம்மையான நீர் வளம் பொருந்தி விளங்குவது திருப்பூவணம் தலமாகும் என்கிறது. மேலும் இத்தலத்தின் சிறப்பினை திருநாவுக்கரசர்.

**வடிவேறு திரிசூலம் தோன்றுந் தோன்றும்**
**வளர்சடைமேல் இளமதியந் தோன்றுந் தோன்றும்**
**கடியேறு கழுழ்கொன்றை கண்ணி தோன்றுங்**
**காதில்வெண் குழைதோடு கலந்து தோன்றும்**
**…பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே** (அப்பர் தேவாரம் - பாடல் 179, பக்கம் 13)

என்ற பாடல் வரிகளில் இத்தலத்தில் எழிலுடன் விளங்குகின்ற சிவபெருமானது அழகிய நெற்றியில் சூலமானது விளங்கித் தோன்றும். சடைமுடியின் மீது இளமையான பிறை தோன்றும், கொன்றைமாலை அணிந்து, காதில் வெண்மையான குழையும் தோடும் விளங்கும். யானையின் தோல் போர்வையாக அமையும். எழிலார்ந்த திருமுடியும் திருநிறு பூசிய மேனியையும் உடைய இறைவனே என பூவணத்திறைவனைப் போற்றுகின்றார். மேலும்,

**எண்ணி இருந்தும் கிடந்தும் நடந்தும்**
**அண்ணல் எனாதினை வாரிவினை தீர்பார்**
**பண்ணிசை யார்மொழி யார்பலர் பாடப்**
**புண்ணியனார் உறை பூவணம் ஈதோ** (திருநாவுக்கரசர் தேவா. - பாடல் 866, பக் 424)

என்ற பாடல் வரிகள் இருந்தும், கிடந்தும், நடந்தும் இறைவனையே முதல்வராக உணர்ந்து நினைப்பாரது வினைகளை தீர்க்கின்றார் என்கிறார். மண்ணொடு பொருந்திய மொழியினை உடைய மகளிர் பலர் நின்று பாட புண்ணியராய் வீற்றிருக்கும் பெருமானார் வீற்றிருக்கும் தலம் இது என்பதை,

**பூவண மதனிற் பொலிந்திருந் தருளித்**
**தூவண மேனி காட்டிய தொன்மையும்** (திருவா. கீர். திருத்தகவல், வரி 50-51, பக்195)

என்ற மாணிக்கவாசரின் பாடல் வரிகள் திருப்பூவணம் தலத்தில் உறைந்துள்ள இறைவன் மாசற்ற நிறமும், மங்கா ஒளியுமாய் விளங்குகின்றான் என்பதனை விளக்குகின்றது. இவ்வாறாக அனைத்து உயிர்களுக்கும் வழிபட்டு பயன்பெற்ற சிறப்பினை பெற்றது இத்தலம்.

**முடிவுரை**

திருப்பூவணத்தலம் தேவார, திருவாசகப் பதிகங்கள் பாடல் பெற்ற பாண்டியநாட்டுத் தலங்களுள் பதினோராவது தலமாகத் திகழ்கின்றது. பாண்டிய நாட்டு சிவதலங்களின் பெயர்பட்டியலும், திருப்பூவணம் தலத்தின் இருப்பிடம், தலப் பெயர்க்காரணம், தலத்தின்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

வேறுபெயர்கள், சுவாமியின் திருப்பெயர்கள் , அம்பாளின் திருப்பெயர்கள், தலமரம், தீர்த்தம், இத்தலத்தில் வழிபட்டவர்கள், தலச்சிறப்புகள் ஆகியவற்றின் சிறப்பினை இங்கு தெளிவாக காண முடிகிறது.

**துணைநூற்பட்டியல்**

[1] **ஸ்ரீமத்சோமசுந்தரத் தம்பிரான். திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் சுவாமிகள்(ப.ஆ) அருளிச்செய்ததேவாரதிருப்பதிகங்கள்,** 1,2,3 திருமுறைகள், தருமபுர ஆதின வெளியீடு, சென்னை 1955.

[2] **ஸ்ரீமத்சோமசுந்தரத் தம்பிரான். திருநாவுக்கரச நாயனார்** சுவாமிகள் (ப.ஆ.) **அருளிச் செய்த தேவார திருப்பதிகங்கள்,** 1,2,3 திருமுறைகள், தருமபுர ஆதின வெளியீடு, சென்னை, பதிப்பு 1963.

[3] **சுவாமி சித்பவானந்தர். திருவாசகம்.** ஸ்ரீராமகிருஷ்ணர் தபோவனம், திருப்பராய்த்துறை, திருச்சி 115 , 1995

[4] **கி.காளைராஜன்திருப்பூவணப் புராணம்.** பிரிண்டெக் , பழைய குயவர் பாளையம் சாலை , மதுரை 9, 2008.

[5] **கி.காளைராஜன், திருப்பூவணக் காசி.** ஸ்ரீ லட்சுமி பிரிண்டடர்ஸ், காரைக்குடி, 2007.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**இராஜா. "பாண்டிய நாட்டு சிவத்தலங்களில் திருப்பூவணம்."** *தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்,* தொகுதி 3, சிற.இதழ் 3, தொகுதி 3, ஜனவரி 2021, பக்.469-474. டிஓஐ: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.070**

**Cite this Article in English (MLA 8 Style) as:**
**Raja. "Shiva Temple of Thiruppuvanam in Pandiya Kingdom."** *International Journal of Tamil Language and Literary Studies,* Vol. 3: Special Issue - 3, Vol. 3, January 2021, pp.469-474. DOI: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.070**

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். /I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.




தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

# ஆழ்வார்களின் திருவேங்கடப் பாசுரங்கள்

## Thiruvenkata Hymns of Alvars

**நா.ரெங்கலட்சுமி**, தமிழ்த்துறை, உதவிப் பேராசிரியர், ஸ்ரீ.எஸ். இராமசாமி நாயுடு ஞாபகார்த்தக் கல்லூரி, சாத்தூர்.
**N.Rengalakshmi**, Assistant Professor of Tamil, Sri.S.Ramasamy Naidu Memorial College, Sattur.
ORCiD: https://orcid/0000-0002-7955-9514
DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.071

## Abstract

*Vaishnavism is the sect of Hindu religion of. During the Vaishnava period, twelve priests were said to be famous. The 6th to the 9th century AD is considered to be the period of the Twelve Alvars. The Vaishnava world can be called a renaissance due to the arrival of the Alvars. The songs of the Alvars were compiled by the Natamunis. The anthology was called "Four Thousand Divya Prabandham". Two hundred and two songs in the Four Thousand Divya Prabandham are about Thiruvenkadamalayana. Thiruvenkadamalai is the name of the Lord Tirupatham in Thirumalai. It is also known as Thiruvenkadamalai; it is a great honor to have the Lord Tirupatham praised in a holy manner. Among the twelve Alvars, Poikaiyalvar, Poothathalvar, Peyalvar, Kulasekara Alvar, Periyarvar, Nammazhvar, Thirupanazhvar, Thirumangaiyalvar and Andal have sung hymns in praise of Venkateswara. This article is based on the hymns sung to Venkateswara by the Alvars.*

**Keywords:** Thiruvenkatam, Hymns, Alvars, "Thiruvaimozhi", "Nachiyar Thirumozhi"

### முன்னுரை

திருமாலைச் சமயக் கடவுளாகக் கொண்ட சமயம் வைணவம். வைணவ சமயத்து இறையடியார்கள் பன்னிருவரும் ஆழ்வார்கள் எனப்பட்;டனர். கி.பி 6ம் நூற்றாண்டு முதல் 9ம் நூற்றாண்டு முடிய பன்னிருஆழ்வார்களின் காலமாக கருதப்படுகிறது. ஆழ்வார்களின் வருகையால் வைணவ உலகிற்கு மறுமலர்ச்சிகாலம் எனலாம். ஆழ்வார்களின் பாடல்களை நாதமுனிகள் தொகுத்தார். அவ்வாறு தொகுத்த பாடல்கள் நாலாயிரத்திவ்ய பிரபந்தம் என அழைக்கப்பட்டன. நாலாயிரதிவ்ய பிரபந்தத்தில் இருநூற்று இரண்டு பாடல்கள் திருவேங்கடமலையானைப் பற்றியன. திருவேங்கடமலை எனும் திருமலையில் பெருமான் திருப்பாதம் பதித்து விளங்குவதே பெருஞ்சிறப்பாகும். பன்னிரு ஆழ்வார்களில். பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், குலசேகரஆழ்வார், பெரியாழ்வார், நம்மாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார், ஆண்டாள் ஆகியோர் திருவேங்கடமலையானை சிறப்பித்து பாசுரங்கள் பாடியுள்ளனர். பெருமானின் திருவடிகளைப் போற்றும் பாசுரங்களை எடுத்துரைக்கும் விதமாக இக்கட்டுரை அமைந்துள்ளது.

### இலக்கியங்களில் வைணம் பற்றிய செய்தி

வைணவ சமயம் தொன்றுதொட்டு வழக்கத்தில் இருந்திருக்கிறது. மிகப் பழைமையான நூல்களிலும் திருமாலின் பெயர்கள் காணப்படுகிறது. தமிழ் நூல்களில் மிகப் பழமையான

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

இலக்கண நூல் தொல்காப்பியம். தொல்காப்பியத்தில் பொருளதிகாரத்தில் வைணவம் பற்றிய குறிப்பு உள்ளது.

**மாயோன் மேயகாடுறைஉலகமும்**

**சேயோன் மேயமைவரைஉலகமும் (அகத்- நூ-5)**

இலக்கண நூலில் மட்டுமில்லாமல் சங்க இலக்கியங்களிலும், காப்பிய இலக்கியம், பதினென்கீழ்க்கணக்கு நூல்களிலும் வைணவ சமயம் பற்றிய குறிப்பும் காணப்படுகிறது. பெரும்பாணாற்றுப்படை திருமால் பாம்பினை தலையணையாக பள்ளிகொண்டகோலத்தை கூறுகிறது.

**காந்தளம் சிலம்பில் களிறுபடிந்தாங்குப்**

**பாம்பணைப் பள்ளிகிடந்தோன் (பெரும் -371)**

மதுரைக்காஞ்சியிலும் திருமால் பற்றிய செய்தி இருக்கிறது. "**மாயோன் மேயஓணநன்னாள்" (மதுரை -591)** இதிலிருந்து தொன்மைக் காலத்தில் இருந்தே திருமாலின் வழிபாடு இருந்திருக்கிறது என்ற குறிப்பும் காணப்படுகிறது.

**திருவேங்கட மலையின் சிறப்பு**

வடமொழியில் வேம் என்றால் பாபம். குடம் என்றால் போக்குவது. வேங்கடம் என்பது பாவத்தை போக்குவது என்று பொருள். நம்முடைய அனைத்துப் பாவங்களையும் தீர்க்கவல்ல மலை திருவேங்கடமலையாக கருதப்படுகிறது. வைணவ தலங்களில் திருவேங்கடமலை சிறப்பாகப் போற்றப்படுகிறது. அதனால் தான் ஆழ்வார்கள் தன்னுடைய பாடல்களில் திருவேங்கடமலையை சிறப்பித்துப் பாடியுள்ளனர்.

**திருவேங்கடப் பாசுரங்கள் பாடிய ஆழ்வார்கள்**

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார், குலசேகரஆழ்வார், திருமங்கையாழ்வார், ஆண்டாள் ஆகியோர் திருவேங்கடமலையின் அழகை சிறப்பித்துப் பாடியுள்ளனர்.

**பொய்கையாழ்வார் பாடிய பாசுரம்**

பொய்கையாழ்வார் அருளியது முதல் திருவந்தாதியாகும். இதில் பத்துப் பாசுரங்கள் வினைகள் அனைத்தையும் தீர்த்தருளும் திருவேங்கடவனின் திறத்தையும், திருவேங்கட மலையின் அழகையும் பாடுபொருளாகக் கொண்டது ஆகும்.

**எழுவார்விடைக்கொள்ளார்ஈன்துழாயினை…**

**வினைச்சுடரைநந்துவிக்கும் வேங்கடமேவானோர்**

**மனச்சுடரைத் தூண்டும் மலை (மு.திருவந்தாதி பா-26)**

திருவேங்கடவனை வணங்கினால் நமக்கு வரக்கூடிய தீவினைகளை எல்லாம் அழித்து விடுவான் என்ற நம்பிக்கையும் ஆழ்வார்களிடம் இருந்து வருகிறது. வானோர்களின் மனதில் உள்ளசுடரை தூண்டும் மலையாக திருவேங்கடமலை இருக்கிறது. "… விண்கொடுக்கும்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

மண்ணளந்த திருவேங்கடம்” (மு.திருவந்தாதி பா-76) மூன்று உலகங்களை அளந்தவன் திருமால். திருமால் தன்னை வணங்குபவர்களுக்கு ஒருகுறை இல்லாதபடியும் அவர்களுக்கு மோட்சத்தையும் கொடுப்பது திருவேங்கடமலையாகும்.

**பூதத்தாழ்வார் பாடிய பாசுரம்**

திருமால் பக்தியில் பெற்ற அனுபவத்தை இரண்டாம் திருவந்தாதியாக அருளிச் செய்துள்ளார் பூதத்தாழ்வார். அவருடைய பாசுரங்களில் திருவேங்கடமலையின் பொலிவையும் இராமன் இராவணனை அழித்த இராம அவதாரத்தின் புராணச் செய்தியையும் பூதத்தாழ்வார் எடுத்துரைக்கிறார்.

**சென்றது இலங்கைமேல் செவ்வேதன் சீற்றத்தால்**
**கொன்றது இராவணனைக் கூறுங்கால்-**
**வேங்கடமே” (இ.திருவந்தாதி பா-25)**

.மேலும் இராவணை அழித்த பின் இராமன் நின்று அருள் புரிந்த இடம் திருவேங்கடமலையாகும் என்று பூதத்தாழ்வார் குறிப்பிடுகிறார்.

**பேயாழ்வார் பாடிய பாசுரம்**

பேயாழ்வார் பாடியது மூன்றாம் திருவந்தாதி ஆகும். பேயாழ்வார் என் உள்ளத்திலும் உடலிலும் சிந்தையிலும் திருவேங்கடமலையில் இருக்கும் பெருமானே குடிக்nfhண்டுள்ளார். இதனைதிருமூலரும் உள்ளமே கோயி என்பதனை திருமந்திரத்தில் குறிப்பிடுகிறார். “வெள்ளதருவிவிளங்கொலிநீர்வேங்கடத்தான் உள்ளத்தின் உள்ளேஉளன்” ( மூ.திரு. பா 39) அதுமட்டுமில்லாமல் திருவேங்கட மலை முன்னொரு காலத்தில் பூமியைக் கோரைப் பல்லின் மீது எடுத்துக்கொண்ட வராகப் பெருமான் கோயில் கொண்ட மலையாக பேயாழ்வார் கருதுகின்றார்.

**குலசேகரஆழ்வார் பாடிய பாசுரம்**

ஆழ்வார்களிலே திருவேங்கடமலையை மிகவும் சிறப்பித்து பாடியவர் குலசேகர ஆழ்வார். உலகத்தில் இருக்கும் செல்வமும் மண்ணை ஆளும் அரசப் பதவியும் வேண்டாம். நான் திருவேங்கடமலையில் ஏதாவது ஆவேன் என்று தன்னுடைய பாடல்களிலும் திருமாலின் மீதுள்ள பற்றினையும் வெளிப்படுத்தியுள்ளார். திருவேங்கடமலையில் பறவையாய், மீனாய், ஆறாய், கொடிமரமாய், படியாய்ப் பிறக்கும் பேறு கிடைக்கவேண்டும் என வேண்டுகிறார். “தேனார்பூஞ்சோலைத் திருவேங்கடச்சுனையில் மீனாய் பிறக்கும் விதியுடையேனாவேனே” (37) என்று திருவேங்கடச் சுனையில் மீனாய் பிறக்கவேண்டும் என்கிறார் குலசேகரஆழ்வார். அது மட்டு:மில்லாமல் இறுதியாக திருவேங்கடமலையில படியாய் இருந்தது உன் பவளவாய் காண்பேன் என்றும் குலசேகர ஆழ்வார் கூறியுள்ளார். திருவேங்கடமலையில் படியாய் இருந்து திருமாலின் முகம் காண்பேன் என்கிறமையால் திருவேங்கடமலையில் உள்ள படியை குலசேகரப்படி என்று அழைக்கின்றனர்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**நம்மாழ்வார் பாடிய பாசுரம்**

நம்மாழ்வார் பிறந்த நாளிலிருந்து பேசாமல் இருந்து பெருமாள் கோயில் புளியமரத்தடியில் இருந்து தவமியற்றி திருமாலின் அருள் பெற்று பேசினார். அதனால் திருமாலை மட்டுமே பாடுவேன் என்னும் கொள்கையுடையவர். இதனை தன்னுடைய பாடல்களிலும் வெளிப்படுத்தியுள்ளார்.

**என்நாவில் இன்கவியில்ஒருவர்க்கும் கொடுக்கிலேன்**

**தென்னாதெனஎன்றுவண்டுமுரல்திருவேங்கடத்து ( 3ப.9திரு. பா.1)**

மலர்கள் நிறைந்த திருவேங்கடத்தில் எம்பெருமான் இருக்க என் நாவிலிருந்துவரும் பhடல்களை வேறொருவர் மீது இயற்ற மாட்டேன் என்பது இப்பாடலின் பொருள். திருவேங்கடத்து இறைவன் மீது கொண்ட பக்தியை இப்பாடல் புலப்படுத்துகிறது.

**திருமாலிருஞ்சோலையேதிருபாற்கடலேஎன்தலையே**

**திருமால் வைகுந்தமே தண் திருவேங்கடமே எனதுடலே (10ப.7 திரு.பா 8)**

தனது உடல், உயிர், சிந்தனை, செயல் என்று அனைத்திலும் திருவேங்கடத்துமலையான் நிறைந்திருக்கிறார் என்பதனை இப்பாடலடிகள் எடுத்துரைக்கிறது.

**ஆண்டாள் பாடிய பாசுரம்**

நாச்சியார் திருமொழியில் பதினாறு பாசுரங்கள் திருவேங்கடனைப் பற்றியதாகும். தலைவனை பிரிந்திருக்கும் போது கார்காலம் வந்தபின்னும் தலைவனை வரவில்லை என்று பிரிவினால் தலைவனிடம் மேகத்தை தூது விடுக்கிறாள். திருவேங்கடத்தில் உள்ள கோவிந்தனை பிரிந்திருக்கும் துயரத்தினை ஆண்டாள் “குளிரருவிவேங்கடத்துஎன் கோவிந்தன் குணம்பாடி ஆளியத்தமேகங்காள் ஆவிகாத் திருப்பேனே (நா.தி.8ம் தி பா3) குளிர்ந்த அருவி கொண்ட வேங்கடத்தில் உள்ள என் கோவிந்தனின் நற்குணங்களைப் பாடி என் கண்ணீரையும் குளிர்விக்கும் கருணைமிக்க மேகங்களே என் உயிரை அவருக்காக வைத்திருக்கிறேன் என்று தலைவனை பிரிந்தநிலையில் ஆண்டாள் துயரத்தினை பாடுகிறார்.

**திருமங்கையாழ்வார் பாடிய பாசுரம்**

திருமாலின் இருப்பிடமான திருமங்கையாழ்வார் பாடிய சிறியதிருமடலிலும், பெரிய திருமடலிலும் திருவேங்கடமலை பற்றிய குறிப்புகாணப்படுகிறது. “சீரார்திருவேங்கடமே திருக்கோவ லூரேமதிள்கச்சிஊரகமேபேரகமே” (சிறிய திரு.பா 69) திருமால் இருக்கக்கூடிய இடங்களில் ஒன்றான திருவேங்கடமலையில் மடலூர்வேன் என்று திருமங்கையாழ்வார் தன்னுடைய சிறிய திருமடலில் கூறியுள்ளார்.

**தொகுப்புரை**

பாவங்களை போக்கக் கூடிய திருவேங்கட மலை பெருமாலினை சிறப்பித்து ஆழ்வார்கள் பாடியுள்ளனர். திருவேங்கடவனை வணங்கினால் நமக்கு வரக்கூடிய தீவினைகளை எல்லாம் அழித்துவிடுவான் என்ற நம்பிக்கையினை பொய்கையாழ்வார்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

பாடல்களின் மூலம் அறிய முடிகிறது. திருவேங்கட மலை திருமாலின் சிறப்பாக இராமன் இராவணனை அழித்த இராம அவதாரத்தின் புராணச் செய்தியையும் பூதத்தாழ்வார் தன்னுடைய பாடலில் எடுத்துரைக்கிறார். பேயாழ்வார் என் உள்ளத்திலும் உடலிலும் சிந்தையிலும் திருவேங்கடமலையில் இருக்கும் பெருமானே குடிக்பொண்டுள்ளார் என்று மூன்றாம் திருவந்தாதியில் குறிப்பிட்டுள்ளார். திருவேங்கடமலையில் ஏதாவது ஆவேன் என்று தன்னுடைய பாடல்களிலும் திருமாலின் மீதுள்ள பற்றினையும் குலசேகரஆழ்வார் வெளிப்படுத்தியுள்ளார். திருவேங்கடத்தில் எம்பெருமான் இருக்க என் நாவிலிருந்து வரும் பாடல்களை வேறொருவர் மீது இயற்ற மாட்டேன் திருவேங்கடத்து இறைவன் மீதுகொண்டபக்தியை நம்மாழ்வார் புலப்படுத்துகின்றார். திருமால் இருக்கக்கூடிய இடங்களில் ஒன்றான திருவேங்கடமலையில் மடலூர் வேன் என்று திருமங்கையாழ்வார் தன்னுடைய சிறிய திருமடலில் கூறியுள்ளார்

**சான்றாதாரங்கள்**

[1] ஸ்ரீ நாலாயிர திவ்யப்பிரபந்தம், கங்கை புத்தக நிலையம், 13 தீனதயாளு தெரு, தியாகராய நகர், சென்னை- 600 017

[2] திருமங்கையாழ்வார் மடல்கள், ம.பெ.சீனிவாசன்.

[3] கி.இராசா(உ.ஆ), தொல்காப்பியம், பாவை பப்ளிக்கேசன்ஸ், 142, ஜானி ஜான்கான் சாலை, இராயப்பேட்டை, சென்னை -600 014.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**ரெங்கலட்சுமி. "ஆழ்வார்களின் திருவேங்கடப் பாசுரங்கள்."** *தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்,* தொகுதி 3, சிற.இதழ் 3, தொகுதி 3, ஜனவரி 2021, பக்.475-479. டிஒஐ: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.071**

**Cite this Article in English (MLA 8 Style) as:**

**Rengalakshmi. "Thiruvenkata Hymns of Alvars."** *International Journal of Tamil Language and Literary Studies*, Vol. 3: Special Issue - 3, Vol. 3, January 2021, pp.475-479. DOI: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.071**

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். /I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

## திருப்பாவையில் பண்பாட்டுக் கூறுகள்

## Cultural Traits in "Thiruppavai"

**முனைவர் த.க.ஜாஸ்மின் சுதா**, உதவிப்பேராசிரியர், தமிழியல் துறை, மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம், திருநெல்வேலி.
**Dr.T.K.Jasmin Sudha**, Assistant Professor, Department of Tamil Studies, Manonmaniam Sundaranar University, Tirunelveli.
ORCiD: https://orcid.org/0000-0002-6439-5940
DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.072

### Abstract

*All spiritual works will emit the cultural glimpses in the text. "Thiruppavai" is one of the famous Vaishnava texts that praise the glory of Lord Vishnu. The fasting at the Markazhi (December) was observed by the Tamil people from many years back. It can be seen in the Sangam period devotional literature. Cultural elements such as rituals, beliefs, social status, and the poetic language of the time are expressed in the holy treatise "Thiruppavai". This article goes into detail about the cultural festivals, rituals as seen in the work.*

**Keywords:** Markazhi Fasting, Tamil Culture, "Thiruppavai"

பக்தி இலக்கியம் என்றால் சைவம், வைணவம், சமணம், பௌத்தம், கிறித்தவம் என அனைத்து மதம் சார்ந்த இலக்கியங்களையும் உள்ளடக்கியது. மதங்கள் வளர்ச்சி அடைந்ததன் வாயிலாக அம்மதம் சார்ந்த வாழ்வியல் சடங்குகள், சமய நம்பிக்கைகள், பண்பாட்டுச்சூழல்கள், மந்திரம், சூனியம், வழிபாட்டு முறைகள், ஒன்றுக்கொன்று மாறுபட்ட ரீதியில் உருவாயின. அவ்வகையில் வைணவ சமயத்தில் பன்னிரு ஆழ்வார்கள் திருமாலின் மேல் பக்தி கொண்டு பாடிய பாசுரங்கள் ஏராளம். ஆழ்வார்களில் ஒருவரான 'ஆண்டாள்' என்ற பெண் படைப்பாளியின் பாசுரங்களில் வெளிப்படலாகும். உடல், உள, மொழி மற்றும் பண்பாடு சார்ந்த அனுபவங்களை எடுத்துரைப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

சங்க கால இலக்கியங்களில் 'பாவை நோன்பு' 'நீராடல்' வழிபாடுபற்றிய செய்திகள் அதிகம் காணப்படுகின்றன. சங்க காலத்திற்குப் பின் தோன்றிய ஆண்டாளின் திருப்பாவை பாசுரங்களில் பாவை நோன்பு, சடங்குகள் போன்ற செய்திகள் எவ்வாறு பதிவு செய்யப்பட்டுள்ளன, ஆண்டாளின் கவிதை மொழி எவ்வாறு அதை வெளிப்படுத்துகிறது என்பதே இவ்வாய்வுக் கட்டுரையின் சிக்கலாக அமைந்துள்ளது.

"'பண்பாடு' என்பது எண்ணற்ற கூறுகளால் இணைக்கப் பெற்ற ஒழுங்கமைப்பு ஆகும். கற்றுணர்ந்த பகிர்ந்து கொள்ளப்படும் நடத்தை முறைகளின் தொகுப்பே பண்பாடு என மானிடவியலார் கூறுவர். அது வெறும் நடத்தை முறைகளின் தொகுப்பு மட்டும் அன்று நடத்தை முறைகள் குறிப்பிட்ட குழு வாழும் நிலவியல் காலச்சூழல், இயற்கை அமைவுகள் பற்றி அமைந்திருக்கும் வெவ்வேறு குழுக்கள் ஆகியவற்றோடும் தொடர்புடையது. (பேரா. ஞா. ஸ்டீபன், ப. 23, இலக்கிய இன வரைவியல்). இலக்கியம் என்பது பண்பாட்டின் உற்பத்திப்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

பொருள். சமூகம் என்பது மனிதர்கள் அடங்கிய ஒரு நிலையமைப்பான தொகுதி. பண்பாடு என்பது ஒழுகலாறு தொடர்பான நெறிகளையும், விழுமியங்களையும், ஒழுகலாறுகளையும் கொண்ட பகுதி எனினும் சமூகமும், பண்பாடும் ஒன்றோடொன்று தொடர்புடையது எனலாம். “மொழி எப்போதுமே பண்பாட்டு வயப்படுகின்றது. மொழியின் கலையாகிய இலக்கியமும் பண்பாட்டையே வெளிப்படுத்துகின்றது. மொழி பண்பாட்டை கட்டமைக்கிறது. பண்பாடு மொழியைக் கட்டமைக்கிறது” (பக்தவத்சலபாரதி, 24:37, பண்பாட்டு மானிடவியல்).

இலக்கிய மொழி என்பது ஒரு குறிப்பிட்ட சமூகத்தின் பண்பாட்டை வெளிப்படுத்துகிறது. திருப்பாவையில் ஆண்டாளின் கவிதை மொழி அவர் வாழ்ந்த காலகட்டத்தை பிரதிபலிக்கிறது. அக்கால சமூகம் நிலவியல் அமைப்பு, பண்பாடு, நாகரிகம் எவ்வாறு இருந்தன என்ற விவரணங்களை நமக்கு புலப்படுத்துகிறது. ஆண்டாளின் பாடல்களில் திருப்பாவையானது அன்றாட வாழ்வில் காணப்படும் பெண்மைய உறவு சூழலைப் பதிவு செய்கிறது. இவருடைய பாடல்கள் அனைத்தும் உரைப்பவர் (பெண்), கேட்பவர் (தோழி) இருவரும் இணைந்த தன்மை பன்மையில் அமைந்துள்ளன. ஆண்டாள் காலத்தில் அதிகார வர்க்கத்தின் செயல்பாடுகளை நியாயப்படுத்தும் கதையாடல் உத்திகள் நுட்பமான முறையில் வளர்ச்சியுற்றிருந்தன எனலாம். இதனை மதங்களின் வளர்ச்சியாலும், பக்தி இலக்கியத்தின் வளர்ச்சியாலும் அறிந்து கொள்ள முடிகிறது.

திருப்பாவையில் மார்கழி நோன்பினைக் குறித்த செய்திகளை ஆண்டாள் அதிகமாகப் பதிவிட்டுள்ளார். சங்ககாலத்தில் நீராடல், பாவை, தைநீராடல் போன்றவைக் குறித்த விவரங்கள் காணப்படுகின்றன. நீராடல் என்பது சடங்கு மற்றும் நம்பிக்கை சார்ந்த நிகழ்வாகவே கடைபிடிக்கப்படுகிறது. கடலில் நீராடினால் தீது நீங்கும் என்ற நம்பிக்கை மக்களிடையே நிலவி வந்துள்ளதை “தீது நீங்க கடலாடியும்” (பட்டினப்பாலை 99) என்ற பாடலடி பதிவு செய்துள்ளது. தை நீராடல் நோன்பாக மாறிச் சமயச் சாயல் பெற்றதனை,

**வையெறிற் றவர்நாப்பண் வகையணிப் பொலிந்து நீ**
**தையினீராடிய தவந்தலைப் படுவாயோ? (கலித்தொகை 59)**

என கலித்தொகைப் பாடல் விவரிக்கிறது. கன்னியர் கூட்டமாகச் சேர்ந்து நீராடி, அணிகலன்களைக் கொண்டு தம்மை அழகுபடுத்தி அதனை ஒரு தவமாக எண்ணி மேற்கொள்ளுவதையும் காணமுடிகிறது. மேற்கூறிய சான்றின் வாயிலாக நீராடல் என்பது விளையாட்டாக, நோன்பாக, தவமாக மாறிய சூழலை உணர முடிகிறது. “பௌர்ணமியும் திருவாதிரையும் மார்கழி மாதம் 15 ஆம் தேதியிலேயும் அதன் பின்பேனும் ஒன்று சேர்வது இயல்பு. அமாவாசையோடும் பௌர்ணமியோடும் மாதங்கள் முடிவு பெறுதலால் முறையே அமாந்தம், பூர்ணிமாந்தம் என்னும் பெயர் கொண்ட இவ்விருவகை மாத முறைகள் வழங்கி வருவனவற்றுள், பூர்ணிமாந்தம் என்ற முறைப்படி மார்கழியிடையிற் பௌர்ணமிக்குப் பின்வரும் மாதம் - மார்கழியின் பிற்பகுதியும் தையின் முற்பகுதியுமாடிமன்றும் அதனால்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

மார்கழி நீராட்டம், தைநீராட்டம் என்று இரு வகையாகவும் அந்நீராடலைக் கூறுவது கூடுமென்றும் கூறுவர். அதனால், மார்கழியில் நிகழ்த்தப் படுவதாகத் தெளிவாய் அறியப்பட்டதைத் தைந்நீராடல் என்று பரிபாடல் முதலியவை வழங்குவதற்கு இதுவே காரணம் என்க" (மு. இராகவையங்கார், ஆராய்ச்சித் தொகுதி, ப. 196) என்று கூறுவதிலிருந்து சங்க இலக்கியம் கூறும் தைந்நீராடலும், திருப்பாவைக் கூறும் பாவை நீராடலும் ஒன்று எனக் கொள்ளலாம்.

"திருப்பாவையின் ஒவ்வொரு பாடலிலும் 'எம்பாவாய்' என்று முடிவதும், மார்கழி நோன்பினை 'பாவை' என்ற சொல்லால் குறிப்பதாலும், திரு என்றும் அடைமொழி சேர்த்து 'திருப்பாவை' என்னும் பெயர் பெற்றது எனலாம். பாவை என்பது பெண்களைக் குறிக்கும் சொல்லாக இருப்பதாலும் அந்த பெண்களால் கடைப்பிடிக்கப்படும் நோன்பினை உணர்த்துவதால் 'திரு' என்னும் அடைமொழியோடு 'திருப்பாவை' என்றாயிற்று எனலாம். திருப்பாவை 30 ஆவது பாடலில் 'கோதை சொன்ன சங்கத் தமிழ் மாலையாக' இருக்கலாம், 'திருப்பாவை' என்பது இடுகுறி பெயராக இருக்கலாம்" (ம. ராதாகிருஷ்ண பிள்ளை, உரிமையும் கடமையும் ப.2) என்று கூறுவதிலிருந்து பெண்கள் நோற்கும் பாவை நோன்பினை சிறப்பிக்கும் வகையில் 'திரு' என்னும் அடைமொழியோடு 'திருப்பாவை' என்னும் இடுகுறிபெயராக மாறியிருக்கலாம்.

திருப்பாவையில் மழை பெய்ய வேண்டுமென்று ஆண்டாள் வெளிப்படையாக பாடியிருந்தாலும், கண்ணனை அடைய வேண்டும் என்பதே உள்ளீடான பொருளாகவும் இருக்கிறது. அதற்காகவே ஆயர்குலப் பெண்கள் மார்கழி நோன்பினைக் கடைபிடித்ததை திருப்பாவை புலப்படுத்துகிறது. "வாழ்வின் உள்ளடக்கமாகத் திகழ்வது பண்பாடு" (பக்தவத்சல பாரதி, ப.177), "அகவாழ்விற்குரியது பண்பாடு," "வாழ்வுக்கான முன்மாதிரியாக விளங்குவது பண்பாடு" (பக்தவத்சல பாரதி, ப. 178) என்கிறார் பக்தவத்சலபாரதி.

பண்பாட்டில் ஊறிப் போனவர்கள் தாங்கள் தொழும் தெய்வங்களுக்கு உருவம் கொடுக்க விரும்பி நிலம், நீர், காற்று, தீயை தொழுது வந்தார்கள். அவற்றிற்கென கோயில் கட்டி, அவற்றில் அவ்வுருவங்களை வைத்து வழிபாட்டிற்கென சில சடங்குகளையும் ஏற்படுத்தினர். இந்த சடங்குகளின் தோற்றத்தால் தொழுகை, பலிகொடுத்தல், நோன்பு நோற்றல் போன்ற பல சமய சடங்குகள் தோன்றின. திருமணம், மக்கட்பேறு, கணவரின் நல்வாழ்வு, மாங்கல்ய பயன் போன்ற குறிப்பிட்ட தேவைகளுக்காக நோன்பு நோற்கப்படுகின்றன.

திருப்பாவையில் மார்கழி மாதம் கடைபிடிக்கப்படும் பாவை நோன்பு பதிவிடப்படுகிறது. நீராடுவதற்காக தோழியரை அழைப்பதும், துயிலெழுந்து வராதவர்களை அவர்கள் வீட்டு வாசலில் சென்று துயிலெழுப்புவதும், திருமாலின் திருநாமங்கள், அவதாரச்சிறப்பு, திருமாலை வாழ்த்துதல் போன்ற விவரணங்கள் திருப்பாவையில்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

காணப்படுகிறது. ஆண்டாளின் திருப்பாவையில் 30 பாசுரங்கள் உள்ளன. பூமாலை, பாமாலை ஆகிய இரண்டினாலும் அர்ச்சனைச் செய்துள்ளார். ஆண்டாள் செய்த யாகமாகவே திருப்பாவையைக் கொள்ளலாம். ஆண்டாள் வெளிப்படையாக காத்யாயனி தேவிக்கு பாவை வைத்து வழிபாடு செய்ததை திருப்பாவில் உள்ள மூன்று பாசுரங்கள் உணர்த்துகின்றன. இதனை,

**பாவைக்குச் செய்யும் கிரிசைகள் (திருப்பாவை, பா. 2)**
**பாவைக்குச் சாற்றி நீராடினால் (திருப்பாவை, பா. 3)**
**பிள்ளைகளெல்லோரும் பாவைக் களம்புக்கார் (திருப்பாவை பா.13)**

ஏன்ற பாசுரவரிகளால் அறியலாம். 'பாவைக்குச் சாற்றி நீராடினால்' என்ற பாசுரத்தின் முதல் வரியில் "ஓங்கி உலகளந்த உத்தமன் பேர் பாடி" (திருப்பாவை பா.3) என்று கூறுவதில் மூன்றடியால் உலகத்தை அளந்த திருமாலின் நாமத்தை உச்சரித்துவிட்டு காத்யாயினி தேவியை வழிபடுவோம் என்று ஆண்டாள் தோழியர்களிடம் கூறுகிறாள். திருப்பாவையில் நோன்பு முறைகள் தெளிவாகத் தரப்பட்டுள்ளன.

திருப்பாவையில், பாவை நோன்பின் போது 'பாவை' வைத்து வழிபட 'களம்' அமைத்திருந்த செய்தியை "பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம் புக்கார்" (திருப்பாவை பா. 13) என்ற பாசுர வரிகள் நமக்கு புலப்படுத்துகின்றன. நோன்பு நோற்பதற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட இடத்தினை, பாவைக்களத்தினை திருவாய்ப்பாடிப் பெண்கள் அடைந்துவிட்டார்கள் என்பதையே 'பாவைக்களம் புக்கார் என்றுரைக்கப்படுகிறது' 'வழிபாடு செய்தல், அருளாசி பெறுதல், நோன்பிருத்தல், யாத்திரை செல்லுதல், திருவிழா நிகழ்த்துதல் .... போன்ற சடங்குகள் யாவும் நிலை மாற்றும் சடங்குகள் ஆகும்' என்கிறார் பக்தவத்சலபாரதி (மானிடவியல் கோட்பாடுகள் ப.305) ஆண்டாளின் திருப்பாவையில் கடைப்பிடிக்கப்படும் சடங்குகள், கிரியைகள் நோன்புகள் அனைத்தும் ஒரு சமுதாய மாற்றத்தை உருவாக்க முயலுகிறது எனலாம். மனித பிறவியாகிய ஆண்டாள் இறைவனை கணவானக அடைய வேண்டிசெய்கின்ற நோன்பினை நாம் காணமுடிகிறது. மார்கழி நோன்பில் 'நீராடல்' முக்கிய பங்கு வகிக்கிறது.

**மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளால்**
**நீராடப்போ துமினோ நேரிழையீர் (திருப்பாவை 1)**

என்று மார்கழி மாத பௌர்ணமி நிலா வெளிச்சத்தில் வைகைறை பொழுதில் பனி நீராட போகலாம் வாருங்கள் என்று பெண்கள் பிற பெண்களை அழைக்கின்ற காட்சியை நமக்கு புலப்படுத்துகிறது. தூய அமைதியான வேளையிலே மார்கழி பனி நீராடித் தொழுது நாராயணனிடம் பறை கேட்டு நோன்பு நோற்க இளமகளிர் எல்லோரையும் அழைத்து செல்லுகின்ற காட்சியை திருப்பாவை 1-ஆவது பாசுரம் உணர்த்துகிறது. அதேபோன்று "நாட்காலே நீராடி" (திருப்பாவை 2), "நீராடமகிழ்ந்து" (திருப்பாவை 4) "குள்ளக்குளிர குடைந்து

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

நீராடாதே" (திரு. 12) "இப்போதெ எம்மை நீராட்டு" (திருப்பாவை 20), "நீராடுவான் மேலையார் செய்வகைகள்" (திருப்பாவை 26) போன்ற பாசுரவரிகள் நீராடலைக் குறித்து பேசுகின்றன. நீராடப்போகும் பெண்கள் கண்ணனிடம் மார்கழி நீராடக் கூறுகின்றனர். அது மட்டுமன்றி பாவை நோன்பு நோற்பதற்கு முன்னோர்கள் என்னென்ன மேற்கொண்டார்கள் அவர்கள் பின்பற்றிய சடங்குகள், சம்பிரதாயங்களுக்கு என்னென்ன பொருள்கள் வேண்டுமென்பதை மாலே, மணிவண்ணா, நீ கேட்டு தெரிந்து கொள்ள வேண்டும் என்று இறைவனை முன்னிறுத்தி பேசுவதைக் காணமுடிகிறது.

வைணவக் கருத்துப்படி இறைவனை அடைய விரும்புவோர் இறைவனன்றி பிறதொரு வழியை நினையாமல், மனதை ஒருமுகப்படுத்தி, இறைவனின் உருவத்தை அமைத்து அதற்கு அன்றாட சடங்குகளை செய்ய வேண்டும் என்பதே ஆண்டாளின் பாசுரப்பதிவுகள். இதனை,

**குறைவொன்று மில்லாத கோவிந்தா உன்றன்னோடு**
**உறவேல் நமக்கிங் கொழிக்க ஒழியாது (திருப்பாலை – 28)**

என்று இறைவனையே எண்ணிவாழும் கன்னிப்பெண்களின் யோக நிலையை சித்திரிப்பதிலிருந்து உணரமுடிகிறது. மனம், மொழி, மெய் என்ற மூன்றினாலும் இறைவனை வழிபடும் சீரிய நெறியும், மனத்தை ஒருமுகப்படுத்தும் யோக நெறியும், இறைவனை வழிபட்டால் பிழைகள் அகலும் என அறிந்த ஞான நெறியை,

**மாயனை மன்னு வடமதுரை மைந்தனை**
**…வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க**
**போய பிழையும் புகுதருவான் நின்றனவும்**
**தீயனில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய் (திருப்பாவை 5)**

என்ற பாசுரம் வழி புலப்படுத்துகிறார் ஆண்டாள். இறைவனுடைய வழிகளும், செயல்களும் மாயமானவை, வியப்பானவை, நேயனாக விளங்குகின்ற மாயன் நல்வழிகாட்டும் நாயகன் என்று திருமாலை போற்றுகின்றதைக் காண முடிகிறது. அகத்தூய்மையோடு நீராடி அன்பு செலுத்தினால் ஏற்கனவே செய்த பிழைகளும், இனிமேல் ஏற்படப்போகும் பிழைகளும் தீயினில் பஞ்சு போல தீய்ந்து விடும் என்று கூறப்படுகிறது. திருப்பாவையின் 2, 26, 27-ஆவது பாசுரங்களில் வழிபாட்டின் போது கடைபிடிக்க வேண்டிய விதிகள், அதற்கு வேண்டிய பொருட்கள் எவையெல்லாம் என்பதை தெளிவாக எடுத்தோதப்பட்டுள்ளது.

கண்ணனுடைய பாஞ்சசன்னியத்தை ஒத்த சங்கு, பறை, பல்லாண்டு பாடும் பாகவதர்கள், வைகறை இருட்டை விலக்கும் மங்கல விளக்கு, கொடி, வைகறையில் தலையில் பனி விழாமல் தடுக்கும் விதானம் ஆகிய பொருட்களை கண்ணனிடம் வேண்டி பெற்றுக் கொண்டதாக (திருப்பாவை 26) பாசுரம் கூறுகிறது. அதுமட்டுமன்றி மேற்கூறியவற்றை பெற்றவுடன் திருவாய்ப்பாடி ஆயர்குலப் பெண்கள் உரிமையோடு தங்களுக்கு வேண்டிய

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

ஆடை, அணிகலன்களை கண்ணனிடம் கேட்டு பெற்றுக் கொண்டு, அவற்றை அணிந்தபின் நெய் ஊற்றிய பாற் சோற்றினை உண்ட செய்தியை (திருப்பாவை 27) பாசுரம் தெரிவிக்கிறது.

அன்றாடம் கடைபிடிக்கக்கூடிய சில பழக்கவழக்கங்களை திருப்பாவை பாசுரங்களின் வழியாக அறிய முடிகிறது. வைகறை பொழுதில் நீராட செல்லும் பெண்கள் காலையில் வழக்கமாக தினமும் பறவைகளின் ஒசை, புள் அரையன் கோயிலில் ஊதப்படும் சங்கொலி, தவமுனிவர்கள் ஓதும் ஹரி ஹரி என்று நாமம் உச்சரிக்கும் ஓசை ஆகியவற்றை உள்வாங்கி கொண்டு துயிலெழுகின்றனர் என்;பதை திருப்பாவை 6-ஆவது பாசுரம் வெளிப்படுத்துகிறது. அது மட்டுமன்றி ஆய்ச்சியர் தயிர் கடைவதால் ஏற்படுகின்ற ஒலியைக் கேட்டு துயிலெழுவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர் என்பதை

**வாசநறுங்குழலாய்ச்சியர் மத்தினால்**
**ஓசைப்படுத்த தயிரரவம் கேட்டிலையோ (திருப்பாவை-7)**

என்ற பாசுரவரிகள் உணர்த்துகின்றன. ஆண்டாள் தான் மட்டுமன்றி ஆயர் குலப்பெண்களும் அஞ்ஞானத்துயிலிலிருந்து ஞான விழிப்பிற்குக் கொண்டுவருகிறார். ஆண்டாள் என்ன குலத்தைச் சார்ந்தவர் என்பது தெரியாத போது பெரியாழ்வாரால் வளர்க்கப்பட்டதால் அவர் அந்தணர் குலததை சேர்ந்தவராகவே கருதப்பட்டார். ஆயினும் ஆயர்குலப் பெண்களோடு தன்னை இணைத்துக் கொண்டு அவர்களுள் ஒருத்தியாக வாழ்வதை திருப்பாவை புலப்படுத்துகிறது. ஆண்டாள் ஆயர் மகளிரை துயிலெழுப்பும் போது “மாமன் மகளே” “மாமீர்” (திருப்பாவை – 9) என்று உறவுமுறை கூறி அழைப்பதைக் காணமுடிகிறது. அந்தணர் குலப்பெண்களும், ஆயர்குலப்பெண்களும் சேர்;ந்து நீராடப்போகின்ற நிகழ்வானது ஒரு கூட்டுறவு சமுதாயத்தை நினைவுப்படுத்துகிறது எனலாம். மேலும் திருப்பாவையில் மழை பெய்து நாடு செழிக்க வேண்டும் என்ற பொது நோக்கம் காணப்படுகிறது. இதனை,

**ஆழி மழைக்கண்ணா, ஒன்றும் நீ கைகரவேல்**
**ஆழியுள் புக்கு முகந்து கொடார்த்தேறி**
**ஊழி முதல்வனுருவம் போல் மெய்கறுத்து,**
**பாழியந் தோளுடைப் பற்பநா பன்கையில்**
**ஆழி போல் மின்னி வலம்புரி போல் நின்றதிர்ந்து**
**தாழாதே சார்ங்க முதைத்த சர மழைபோல்**
**வாழ உலகினில் பெய்திடாய், (திருப்பாவை -4)**

என்ற பாடல் வரிகளால் அறியமுடிகிறது.

திருப்பாவை பாசுரங்கள் அனைத்தும் சங்கப்பாடல்களை போன்று தலைவி – தோழி கூற்றில் தன்மை முன்னிலையாக அமைந்துள்ளது. சான்றாக, “நப்பின்னை நங்காய்” “எம்பாவாய்” (திருப்பாவை -20) “நந்த கோபாலன் மருமகளே நப்பின்னாய்” (திருப்பாவை 18), “எல்லே இளங்கினியே” (திருப்பாவை 15) போன்ற பாடல்களைக் கூறலாம். திருப்பாவையில்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

பெண்கள் குழுவாக செயல்படுகின்ற ஒரு சமூக நிலையைப் பார்க்க முடிகிறது. திருப்பாவையில் இதற்குச் சான்றாக,

**நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி**
**மையிட்டெழுதோம், மலரிட்டு நாம்முடியோம்,**
**செய்யாதன செய்யோம் தீக்குறளை சென்றோதோம் (திருப்பாவை 2)**

என்ற பாடலைக்கூறலாம். மேலும் "நாங்களும்" (திருப்பாவை 4) "தலைப்பெய்தோம்" (திருப்பாவை 22), "பல்கலனும் யாமணிவோம்" (திருப்பாவை 27) போன்ற பன்மையை குறிக்கும் சொற்களும் குழுச்சமூகத்தை வெளிப்படுத்துகிறது எனலாம்.

ஆண்டாளின் கவிதை மொழியைப் பற்றி ஆராயும் போது அவர் தனது கவிதைகளில் படிமங்களை அதிகம் பயன்படுத்தியுள்ளார். புராணம் சார்ந்த படிமக் கூறுகளை ஆங்காங்கே சுட்டுவதை காணமுடிகிறது. சான்றாக,

**குள்ளக் குளிரக் குடைந்துநீராடாதே**
**பள்ளிக் கிடத்தியோ" (திருப்பாவை -13)**

என்ற பாடலில் ஆயர்குலப் பெண்களைப் பார்த்து உடம்பு குளிரும்படியாக நீரை குடைந்து குடைந்து நீராட வேண்டும் என்று கூறுவதில் திருமாலின் நாமத்தை அவள் அருள் கிடைக்கும் வரை உச்சரித்து கொண்டே நோன்பு நோற்க வேண்டும் என்று மறைமுகமாகக் கூறப்படுகிறது.நீர் என்பது இறை அருளுக்கு படிமமாகக் கூறப்படுகிறது. திருப்பாவையில் இசைத் தன்மை சிறப்பாக வெளிப்படுகிறது. இசைப் பற்றிய குறிப்புகள் இல்லை எனினும் பாடல்கள் சந்த நயத்தோடு காணப்படுகிறது. சான்றாக திருப்பாவை 2, 7 பாசரங்களைக் கூறலாம். கோயில்களில் மார்கழி மாதம் அதிகாலையில் திருப்பாவை இசைக்கப்படுவதே இதற்கு சான்றாகும். திருப்பாவையின் 24-ஆவது பாசுரத்தில் ஆண்டாள், தன்னுடைய மனங்கவர்ந்த கண்ணனின் மூன்று அவதாரங்களைக் கூறுகிறார். இதனை,

**அன்றிவ்வுலகம் அளந்தாய் அடிபோற்றி**
**சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய், திறல்போற்றி,**
**பொன்றச் சகடம் உதைத்தாய் புகழ் போற்றி**
**கன்று குணிலா எறிந்தாய் கழல் போற்றி**
**குன்று குடையாய் எடுத்தாய் குணம் போற்றி**
**வேன்று பகை கெடுக்கும் நின்கையில் போற்றி (திருப்பாவை 24)**

என்ற பாசுரம் மூலம் அறியலாம். இப்பாசுரத்தில் வாமன அவதாரம், இராம அவதாரம், கிருஷ்ண அவதாரம் குறிப்பிடப்படுவதோடு இந்த பாடலில் மட்டும் ஆறு முறை 'போற்றி' என்ற வார்த்தையை பயன்படுத்துகிறார் ஆண்டாள் .வேறு எந்த பாசுரத்திலும் இதை காணமுடியாது. திருப்பாவையின் முதல் ஐந்து பாசுரங்களில் ஆண்டாள் மார்கழி நோன்பு நோற்கையில் செய்யக்கூடிய மூன்று செயல்களையும், செய்யக்கூடாத ஆறு செயல்களையும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

கூறுகிறார். இளங்காலையில் நீராடுதல், பரமனடிபாடுதல், தருமம் செய்தல் ஆகியவற்றைச் செய்யக்கூடியதாகவும், (திருப்பாவை 1 முதல் 5) நெய்யுண்ணாமை, பாலுண்ணாமை, கண்ணுக்கு மையிடாமை, மலர்சூடாமை, செய்யக்கூடாததை செய்யாமை, கொடிய சொற்களைக் கூறாமை (திருப்பாவை-2) ஆகியவற்றை செய்யக் கூடாததாகவும் கூறப்படுகிறது.

**இவற்றைப் பறை கொள்வான் அன்றுகாண் கோவிந்தா**
**ஏற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றன்னோ**
**டுற்றோமே யாவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம் (திருப்பாவை 29)**

என்ற பாசுரத்தில்தான் கண்ணனுடைய அன்பு மட்டும் தான் தாங்கள் கருதிய பொருள் என்பதை கூறி பக்தித் திறமே பரமனை அடைய எளிய வழி என்பதை ஆண்டாள் புலப்படுத்தியுள்ளார். இந்த பிறவியில் மட்டுமன்றி இனி வரும் எல்லா பிறவியினும் இறைவன் ஒருவனுக்கே ஆளாக வேண்டும் என்று கூறுவதே மிகவும் உன்னதமாக காணப்படுகிறது.

சங்க இலக்கியத்தில் பதிவு செய்யப்பட்டுள்ள கன்னியர் நோன்பு நோற்பது, நீராடுதல், பூமி மழை பெற வாழ்த்துதல், அந்தணர்க்கு தானம் செய்தல் போன்ற பண்பாட்டு கூறுகளின் தொடர்ச்சி தான் ஆண்டாளின் பாடல்களிலும் பிரதிபலிக்கிறது எனலாம். ஏனெனில் திருப்பாவையிலும் வைகறையில் கன்னியர் துயிலெழுதல், பெண்கள் கூட்டமாகச் சென்று திருமாலின் மந்திரத்தை உச்சரித்தவாறே நீராடுதல், நீராடிய பின் கிரியைகள் செய்தல், ஐயமும் பிச்சை அளித்தல், நாடு செழிக்க நல்ல மழையினை வேண்டுதல், குள்ளக்குளிர குடைந்து நீராடல் என்பன போன்ற செய்திகள் இடம் பெறுகின்றன. திருப்பாவை பாசுரங்கள் இசைத்தன்மை உடையதாகவும், படிமக்கூறுகளை உள்ளடக்கியதாகவும் காணப்படுகிறது எனலாம்.

நீண்ட நாட்களாக இலக்கியத்தில் ஒடுக்கப்பட்ட பெண்களின் ஓங்கியகுரலாக ஆண்டாளின் திருப்பாவைப் பாசுரங்கள் அமைந்துள்ளன எனலாம். பெண்களுக்கென விதிக்கப் பெற்றிருந்த தடைகளையும் வரையறைகளையும் மீறி ஆண்டாள் தன்னுடைய காதல் உணர்வை வெளிப்படுத்தியுள்ளார். பாவை இலக்கியத்தின் வரலாற்றை நோக்குங்கால் தொடக்கத்தில் மகளிர் விளையாட்டாகிய பாவை விளையாட்டு, பாவை பாட்டாகி, சமயம் சார்ந்த பாவை நோன்பாகி, பிற்காலத்தில் சமுதாய உணர்வு மிக்க பாவை நூல்களாக தோன்றின எனலாம். பக்திகாலத்திற்குப் பின் தோன்றிய பாவைப்பாடல்கள் தத்துவம், தமிழ் உணர்ச்சி, சமுதாய உணர்வு ஆகியனவற்றை உள்ளடக்கமாகக் கொண்டுள்ளன.

**துணை நின்ற நூல்கள்**

[1] டாக்டர். சி. பாலசுப்பிரமணியன். 'திருப்பாவை' விளக்கம். பாரி நிலையம், சென்னை, 1995.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

[2] முனைவர் ஞா. ஸ்டீபன். 'இலக்கிய இனவரைவியல்'. நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 2017.

[3] காவ்யா சண்முகசுந்தரம். இலக்கியமும் கோட்பாடுகளும். 'காவ்யா' வெளியீடு, சென்னை 2007. '

[4] டாக்டர் ம.பெ. சீனிவாசன். 'திவ்வியப் பிரபந்த இலக்கிய வகைகள்'. மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம், 2001.

[5] பக்தவத்சல பாரதி. 'மானிடவியல் கோட்பாடுகள்'. அடையாளம் வெளியீடு, சென்னை-621 புத்தாநத்தம், 2012.

[6] பக்தவத்சல பாரதி, "இலக்கிய மானிடவியல்' அடையாளம் வெளியீடு, சென்னை-621 புத்தாநத்தம், 2014.

[7] மு. இராகவையங்கார். 'ஆராய்ச்சி தொகுதி'. பாரிநிலையம், சென்னை,1964.

[8] ம. ராதாகிருஷ்ணபிள்ளை. 'உரிமையும் கடமையும்' (கட்டுரைகள்), அல்லயன்ஸ் கம்பெனி மயிலாப்பூர், சென்னை. 1983.

[9] தேவராஜன். 'வைணவமும் ஆழ்வார்களும்' பாகம் 2). ஸ்ரீ செண்பகா பதிப்பகம், சென்னை – 600 017, 2002.

[10] டாக்டர்.மா.இராசமாணிக்கனார். கலித்தொகை மூலமும் உரையும். பும்புகார் பதிப்பகம், 2011.

11.சாமி.சிதம்பரனார். பட்டினப்பாலை. அறிவுப்பதிப்பகம், 2008.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**ஜாஸ்மின் சுதா. "திருப்பாவையில் பண்பாட்டுக் கூறுகள்."** *தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 3, சிற.இதழ் 3, தொகுதி 3, ஜனவரி 2021, பக்.480-488. டிஒஐ: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.072**

**Cite this Article in English (MLA 8 Style) as:**
**Jasmin Sudha. "Cultural Traits in "Thiruppavai"."** *International Journal of Tamil Language and Literary Studies*, Vol. 3: Special Issue- 3, Vol. 3, January 2021, pp.480-488. DOI: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.072**

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். /I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.




தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

# தமிழ் இலக்கியத்தில் சமணர்களின் தமிழ்த்தொண்டு

## Tamil Literary Contribution of the Jains

**த. இலட்சுமன்,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, தொன் போஸ்கோ கல்லூரி, தருமபுரி.
**T.Lakshman, Assistant Professor, Tamil Department, Don Bosco College, Dharmapuri.**
ORCiD: https://orcid.org/0000-0001-8791-3723
**DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.073**

## Abstract

*All the religious literatures help man to live an ethical in this birth. In particular, the Jain literature plays an important role in this. It can be said that no one else thinks of individual human and social morals. Truthfulness, love and human virtues are practiced by the Jain. Thus a large number of texts appeared in Tamil emphasizing the principles of the Jain religion. Most of the charitable literature is based on the Jain religion. The doctrine of Jainism was most suitable for the Tamils who lived in harmony with nature. Thus a large number of Tamil texts appeared using the principles of the Jain religion. Most of the literature that appeared during the Sangam Maruviya period is of the Jain religion. The contribution done by Jains to Tamil is immeasurable. Many of the Samana works have perished. However, based on only a few texts, one can examine the merits of the Tamil charity performed by the Jains.*

**Keywords:** Jains, Contribution, Tirthankara, Tamil Literature, Spiritualism

### முன்னுரை

சமய இலக்கியங்கள் அனைத்தும் இந்தப் பிறவியில் சிறப்பாக வாழ்ந்தால் இறைவனின் திருவடிகளை அடையலாம் என்பதை வலியுறுத்துகின்றன. அவ்வகையில் தனிமனித, சமுதாய ஒழுகலாறுகளைச் சமணர்களை தவிர வேறு யாரும் சிந்திக்கவில்லை என்று கூறலாம். வடநாடடில் மகாவீரர் என்று சொல்லப்படும் இருபத்து மூன்றாவது தீர்த்தங்கரரால் உருவாக்கப்பட்ட சைன சமயம் தமிழகத்தில் சமண சமயமாக வளர்ந்தது. இல்வாழ்க்கையைத் துறந்து துறவறத்தைப் பின்பற்ற வேண்டும் என்பது சமணர்களின் கொள்கை. கள் உண்ணாமை, புலால் உண்ணாமை போன்றவை அவர்கள் கடைபிடித்த அறமாகும். இயற்கையோடு இயைந்து வாழ்ந்த தமிழர்களுக்குச் சமணக் கோட்பாடு மிகவும் உகந்ததாக இருந்தது. இதனால் சமண சமயக் கோட்பாடுகளை வலியுறுத்தி தமிழில் ஏராளமான நூல்கள் தோன்றின.

சங்கம் மருவிய காலத்தில் தோன்றியமையாகக் கருதப்பெறும் அற இலக்கியங்களில் பெரும்பாலானவை சமண சமயத்தைச் சார்ந்தவையாகும். இலக்கண நூல்கள், காப்பியங்கள், நிகண்டுகள். சிற்றிலக்கியங்கள் போன்ற பல துறைகளிலும் சமணர்கள் தடம் பதித்தனர். சமணர்கள் தமிழுக்குச் செய்த தொண்டு அளவிடற்கரியது. சமணர்களின் படைப்புகளில் பல அழிந்துவிட்டன. இருப்பினும் சில நூல்களை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

சமணர்கள் ஆற்றிய தமிழ்த் தொண்டின் சிறப்பினை விரிவாக அறியலாம். தமிழ் இலக்கியத்தை இலக்கணங்கள், காப்பியங்கள், பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், சிற்றிலக்கியங்கள், புராணங்கள் என்ற பல பொருண்மைகளில் வகைப்படுத்தலாம். இவற்றில் இலக்கணங்கள், காப்பியங்கள், பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், சிற்றிலக்கியங்கள், புராணங்கள் போன்ற பல இலக்கிய வகைமைகளில் சமணர்கள் பங்காற்றியுள்ளனர்.

**சமணர்கள் இயற்றிய இலக்கண நூல்கள்**

சமணர்கள் தொல்காப்பியம், அவிநயம், யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை, நேமிநாதம். வச்சணந்தி மாலை, நன்னூல், நம்பியகப் பொருள் போன்ற இலக்கண நூல்களை எழுதியுள்ளனர்.

**தொல்காப்பியம்** – தமிழில் உள்ள நூல்களில் மிகப் பழமையானது தொல்காப்பியம். இந்நூலை இயற்றியவர் தொல்காப்பியர். இவரை இந்நூலுக்குப் பாயிரம் எழுதிய பனம்பாரானர் **'பல்புகழ் நிறுத்த படிமையோன்'**[1] எனக் குறிப்பிடுகின்றார். படிமை என்பது சமண சமய ஒழுக்கத்தைக் குறிக்கும். ஆதலால், தொல்காப்பியர் சமணராதல் வேண்டும் என்கிறார் பதிப்பாசிரியர் வையாபுரிப்பிள்ளை அவர்கள். இலக்கணத்துறையில் சமணர்கள் அளவு வேறு எச்சமயத்தை சார்ந்தவர்களும் தொண்டற்றவில்லை என்று துணிந்து கூறமுடிகிறது. ஏனெனில் தொல்காப்பியம் அன்றி பிற இலக்கண நூல்களும் சமணர்களால் இயற்றப்பட்டுள்ளது.

**அவிநயம்** – அகத்தியரின் மாணாக்கர் அவிநயனார் இதன் ஆசிரியர். எழுத்து, சொல், யாப்பு, பாட்டியல்களை விளக்குகின்றது. யாப்பருங்கல விருத்தி, வீரசோழியம், நேமிநாதம், நன்னூல் முதலான நூல்களில் அவிநயம் மேற்கோளாக ஆளப்பட்டுள்ளது. இதன்மூலம் அவிநயத்தின் சிறப்பை உணரலாம். இதன் காலம் கி.பி. 5 ஆம் நூற்றாண்டு என்று வரையறுத்துள்ளனர்.

**யாப்பருங்கலம், யாப்பருங்கல விருத்தியுரை** – இந்நூலின் ஆசிரியர் அமிதசாகரர். காலம் கி.பி. 10ஆம் நூற்றாண்டு. யாப்பருங்கல விருத்தி என்னும் மற்றொரு பெயரும் உண்டு. செய்யுளுக்கு அடிப்படையாக விளங்கும் வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, என்று நான்கு வகை பாக்களையும், எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என்று சொல்லக்கூடிய யாப்பின் உறுப்புகளையும் பற்றி விரிவாகப் பேசியுள்ளது. **'காரிகை கற்றுக் கவிபாடுவதை விட பேரிகை கொட்டிப் பிழைப்பதே மேல்'**[2] என்பது இந்நூலை ஒட்டி வழங்கப்படும் பழமொழி.

**நேமிநாதம்** – இதன் காலம் கி.பி. 13 ஆம் நூற்றாண்டு. ஆசிரியர் குணவீர பண்டிதர். தாம் சார்ந்த சமண சமயத்தைச் சார்ந்த தீர்த்தங்கரர் நேமிநாதரின் பெயரைத் தம் நூலுக்குச் சூட்டியுள்ளார். எழுத்து, சொல் ஆகியவற்றின் இலக்கணத்தைச் சுருங்க உணர்த்துகின்றது. 99

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

வெண்பாக்களைக் கொண்டது. எழுத்ததிகாரத்தில் ஒரு பிரிவும், சொ்லலதிகாரத்தில் மொழியாக்க மரபு முதலாக இந்நூலுக்குச் சின்னூல் என்ற பெயரும் உண்டு.

**வச்சணந்தி மாலை –** இதன் காலம் கி.பி. 13 ஆம் நூற்றாண்டு. ஆசிரியர் குணவீர பண்டிதர். தனது ஆசிரியர் வச்சணந்தியின் பெயரால் நூலை எழுதியுள்ளார். இந்திர காளியம் என்னும் நூலின் வழிநூல். வெண்பாப் பாட்டியல் என்ற பெயரும் உண்டு. இந்நூல் 96 வகைச் சிற்றிலக்கியங்கள் பற்றிப் பேசுகிறது.

**நன்னூல் –** இந்நூலின் ஆசிரியர் பவணந்தி முனிவர். காலம் கி.பி 13 ஆம் நூற்றாண்டு. எழுத்து, சொல் இலக்கணங்களைக் கூறுகிறது. இதன் முதல் நூல் தொல்காப்பியம். நல்ல இலக்கண நூலாக அமைந்தமை பற்றி நன்னூல் என்னும் பெயர் பெற்றது. இதற்குக் காண்டிகையுரை, விருத்தியுரை எனப் பலவிதமான உரைகள் உள்ளன.

**நம்பியகப் பொருள் –** இந்நூலின் ஆசிரியர் நாற்கவிராச நம்பி, காலம் கி.பி. 12 ஆம் நூற்றாண்டு. அகத்திணையியல், களவியல், வரைவியல், கற்பியல், ஒழிபியல் என ஐந்து இயல்களையும் 252 நூற்பாக்களையும் கொண்டது. நாற்கவிராச நம்பி, நூலை இயற்றியதோடு நூலுக்கு உரையும் எழுதியுள்ளார். இந்நூலுக்கு எடுத்துக்காட்டு இலக்கியமாகத் தஞ்சைவாணன் கோவை அமைகிறது.

**சமணர்கள் இயற்றிய காப்பியங்கள்**

**பாவிகம் என்பது காப்பியப் பண்பே** என்று தண்டியலங்காரம் குறிப்பிடுகிறது**.** ஐம்பெருங்காப்பியங்களில் சிலப்பதிகாரம்**,** சீவகசிந்தாமணி, வளையாபதி ஆகியவை சமண சமயம் சார்ந்த நூல்களாகும்.

**சிலப்பதிகாரம் –** சிலப்பதிகாரம் காலத்தால் முன் தோன்றியது. இதனை இயற்றிய இளங்கோவடிகள் சமணரே என்பர். இளங்கோவடிகள் தம் காப்பியத்துள் பல சமயங்களையும் பல சமயக் கடவுளரைப் பற்றியும் நடுவு நிலைமையோடு போற்றிக் கூறியிருப்பினும் கவுந்தியடிகள் என்னும் சமணத் துறவியைப் படைத்து அவர் வாயிலாகச் சமணக் கருத்துக்களை உலகுக்கு எடுத்துக் கூறியுள்ளார்.

**சீவகசிந்தாமணி –** சீவக சிந்தாமணியை இயற்றிய திருத்தக்கதேவர் சமண சமயத்தைச் சேர்ந்தவர். பிற்காலத்தில் விருத்தப்பாக்களால் இயன்ற காப்பியங்களுக்கெல்லாம் வழகோலிய பெருமை இதற்குரியதாகும்.

**வளையாபதி** என்னும் சமணநூல் முழுமையும் கிடைக்காமை நம் தவக்குறைவே ஆகும். இந்நூலுள் வரும் **'துக்கம் துடைக்கும் துகளறு காட்சியர், நிக்கந்த வேடத்து இருடி சனங்களை'**[3] என்ற தொடரைக் கொண்டு இது சமண சமயத்தைச் சார்ந்தது என்பர்.

**ஐஞ்சிறு காப்பியங்களாகிய** சூளாமணி, யசோதர காவியம், உதயணகுமார காவியம், நீலகேசி, நாககுமார காவியம் ஆகியவை சமண சமயக் காப்பியங்களாகும். சூளாமணியின் ஆசிரியர் தோலாமொழித்தேவர். இது விருத்தப்பாவால் அமைந்தது. 12 சருக்கங்களுடன் 2137

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

பாடல்களைக் கொண்டது. நீலகேசி பத்துச் சருக்கங்களையும் 894 பாடல்களையும் கொண்டது. இதன் ஆசிரியர் யாரென்று தெரியவில்லை. உதயணகுமார காவியம் 367 செய்யுட்களைக் கொண்டது. உதயணன் கதையை எடுத்துரைக்கக் கூடியது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. யசோதர காவியத்தின் ஆசிரியர் வெண்ணாவலுடையார் வேள் என்பர். நாககுமார காவியத்தின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. மகத நாட்டு அரசன் நாககுமாரனின் கதையைக் கூறுவது. ஐந்து சருக்கங்கள், 170 பாடல்களைக் கொண்டது.

**சமணர் இயற்றிய சிற்றிலக்கியங்கள்**

பிரபந்தங்கள் சிற்றிலக்கியங்கள் என்ற பெயரால் அழைக்கப்படுகின்றன. நரி விருத்தம், எலி விருத்தம், கிளி விருத்தம், திருக்கலம்பகம், திருநூற்றந்தாதி, திருவெம்பாவை, ஆதிநாதர் பிள்ளைத்தமிழ், நேமிநாதர் பிள்ளைத்தமிழ், அப்பாண்டைநாதர் உலா ஆகியவை சமணர் இயற்றியச் சிற்றிலக்கியங்களாகும்.

**நரி விருத்தம் –** இந்நூலின் ஆசிரியர் சீவக சிந்தாமணி இயற்றியவர் திருத்தக்க தேவர். 40 விருத்தப்பாக்களால் ஆனது. நிலையாமைத் தத்துவத்தை வேடன், யானை, பாம்பு, நரி, வில், அம்பு மூலமாக உணர்த்தி ஆசையை அறுமின் என்கிறது இந்நூல்.

**திருநூற்றந்தாதி –** இதன் ஆசிரியர் அவிரோதிநாதர். 100 கட்டளைக் கலித்துறைகளால் ஆன அந்தாதி யாப்பு. 24 தீர்த்தங்கரருள் 22 வது தீர்த்தங்கரராகிய நேமிநாதர் பற்றியது. அருகனைப் புகழ்கின்றது. சமணக் கருத்துகள் நன்கு இடம்பெற்றுள்ளன.

**திருவெம்பாவை –** திருவெம்பாவை நூலின் ஆசிரியர் அவிரோதியார். சமணரின் இத்திருவெம்பாவை மார்கழி மாதத்தில் சமணர்களால் பாராயணம் செய்யப்படுவன.

**திருக்கலம்பகம் –** இந்நூலின் ஆசிரியர் உதீசித்தேவர். திரு என்னும் அடைமொழியோடு கூடிய கலம்பகம். பல்வேறு பாவகைகளைக் கொண்டு அமைந்துள்ளது. இதில் 18 கலம்பக உறுப்புகளுள் 16 உறுப்புகள் மட்டுமே வந்துள்ளன. அகப்பொருள் கலவாதது. நற்காட்சி, நல்லொழுக்கம், நல்ஞானம் ஆகிய மூன்றையும் விளக்குகிறது.

**ஆதிநாதர் பிள்ளைத்தமிழ் –** ஆதிநாதர் என்னும் தீர்த்தங்கரரைப் பற்றியது. **காப்பு, செங்கீரை. தாள், சப்பானி, முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் (கழுங்கு, அம்மானை, ஊசல் (அ) நீராடல்)**[4] முதலான பத்துப் பருவங்களையும் கொண்டுள்ளது. சந்த நலம் மிக்கது.

**சமணர்கள் இயற்றிய நீதி நூல்கள்**

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களை நீதிநூல்கள் என்பர். கீழ்க்கணக்கு நூல்களுள் நாலடியார், பழமொழி, சிறுபஞ்சமூலம். ஏலாதி, முதுமொழிக்காஞ்சி ஆகியவை சமணர்கள் இயற்றியவை. இவற்றுடன் திரிகடுகம், நான்மணிக்கடிகை சமணம் என்பர். **நாலடியார் –** நாலடியார் நானூறு வெண்பாக்களைக் கொண்டது. நாலடியாரின் பெருமையை '**ஆலும்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**வேலும் பல்லுக்கு உறுதி: நாலும் இரண்டும் சொல்லுக்கு உறுதி'**[5] என்பர். நாலடியாரைத் தொகுத்தவர் பதுமனார்.

**பழமொழி** – இதன் ஆசிரியர் முன்றுரை அரையனார். 400 வெண்பாக்களைக் கொண்டது. ஒவ்வொரு வெண்பாவின் இறுதியிலும் பழமொழி உள்ளது. இந்நூல் கரிகாலன், பொற்கைப் பாண்டியன், பல்யானைச் செங்கெழுகுட்டுவன், பாரி. பேகன், முதலிய மன்னர்களின் வரலாற்றைச் சுட்டுகிறது. பண்டைத் தமிழரின் பண்பாட்டை விளக்கும் பேறு பெற்றது. **'நாய் காணின் கல் காணாவாறு', 'பாம்பறியும் பாம்பின் கால்', 'நுணலுந்தன் வாயால் கெடும்', 'திங்களை நாய் குறைத்துது அற்று'**[6] போன்ற பழமொழிகள் இடம்பெற்றுள்ளன.

**சிறுபஞ்சமூலம்** – இதனை இயற்றியவர் காரியாசான். **'உலகிற்கு வரும் பஞ்சத்தை மழை போக்கும். உடலுக்கும் உள்ளத்திற்கும் வரும் நோயைச் சிறுபஞ்சமூலம் நீக்கும்'**[7] என்பர். 102 வெண்பாக்களை உடையது. சிறுவழுதுணைவேர், நெருஞ்சிவேர். சிறுமல்லி வேர், பெருமல்லி வெர், கண்டங்கத்திரி வேர் ஆகிய இவ்வைந்து வேர்களும் கலந்த சிறுபஞ்சமூலம் பல நோய் தீர்க்கும். இந்நூலிலுள்ள ஐந்து கருத்துக்களும் 'உள்ள நோய்' தீர்க்கும் என்னும் பொருளில் ஆசிரியர் நூலுக்குச் சிறுபஞ்சமூலம் எனப் பெயரிட்டார்.

**ஏலாதி** – ஏலாதியின் ஆசிரியர் கணிமேதாவியார். 80 பாடல்கள் உள்ளன. ஏலாதி என்பது மருந்தின் பெயர். ஏலம், இலவங்கம், நாவற்பூ, சுக்கு, மிளகு, திப்பிலி ஆகிய ஆறு பொருட்களின் கலவை உடல் நோயைத் தீர்க்கும். அதுபோல ஒவ்வொரு வெண்பாவிலும் ஆறு செய்திகள் இடம்பெற்றிருக்கும்.

**முதுமொழிக் காஞ்சி** – இந்நூலை இயற்றியவர் மதுரை கூடலூர்கிழார். 100 பாடல்களைக் கொண்டது. அதிகாரத்திற்குப் பத்துப் பாடல்கள் வீதம் பத்து அதிகாரங்களாகப் பகுக்கப்பட்டுள்ளன.

**உணர்வு இல்லார்க்கு வாழ்வும் சாவே**
**ஓதலின் சிறந்தன்று ஒழுக்க முடைமை**
**கற்றலின் கற்றாரை வழிபடுதல் சிறந்தன்று**[8]

போன்ற கருத்துகள் இடம்பெற்றுள்ளன.

சமணர்களின் நீதி நூல்கள் இளமை, யாக்கை, செல்வம், ஆகியவற்றின் நிலையாமையையும் கல்வியின் பெருமையையும் எடுத்துரைக்கின்றன. பதினெண்கீழ்க்கணக்கில் வராத அருங்கலச் செப்பும், அறநெறிச் சாரமும் சமணர் இயற்றிய அறநூல்களாகும். சங்க இலக்கியங்கள் கள்ளையும் பரத்தமை ஒழுக்கத்தையும் வெறுக்காதபோது சமண இலக்கியங்கள் அவற்றைப் பெரிதும் கடிந்து இலக்கிய உலகில் புரட்சி செய்தன. மேருமந்திர புராணம், ஸ்ரீ புராணம், மா புராணம், சாந்தி புராணம் போன்ற

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

புராண நூல்களும் சமணர்களால் இயற்றப்பட்டன. மேரு, மந்திரர் என்ற இருவர் வரலாற்றைக் கூறுவது மேருமந்திர புராணம். இதன் ஆசிரியர் வாமன முனிவர்.

இக்காலத்தில் சொற்களுக்குப் பொருள் காண்பதற்கு உதவியாக அமைவது அகராதியாகும். இவ்வகராதி தோன்றுவதற்கு முன்னர் சொற்களுக்குப் பொருள் அறியுமாறு நிகண்டு என்னும் ஒருவகை நூல்கள் பயன்பட்டு வந்தன. திவாகர நிகண்டு, பிங்கல நிகண்டு, உரிச்சொல் நிகண்டு, சூடாமணி நிகண்டு என்னும் நூல்களை இயற்றிய அனைவரும் சமணராவர். ஸ்ரீ புராணம். கத்திய சிந்தாமணி முதலியன சமணர்கள் இயற்றிய உரைநடை நூல்கள். இவையே தமிழும் வடமொழியும் கலந்து எழுதும் மணிப்பிரவாளத்துக்குத் தமிழ் நிலத்தில் வித்திட்டன. தொல்காப்பியத்திற்கு உரை எழுதிய இளம்பூரணர், நச்சினார்க்கினியர், சிலப்பதிகாரத்திற்கு உரை இயற்றிய அடியார்க்கு நல்லார், நன்னூலுக்கு முதன் முதலில் உரை வகுத்த மயிலைநாதர், யாப்பருங்கலக் காரிகைக்கு உரை எழுதிய குணசாகரர், திருக்குறள், நீலகேசி ஆகிய நூல்களுக்கு உரை வகுத்த காலிங்கர், வாமன முனிவர் ஆகியோர் சமண உரையாசிரியர்கள் ஆவர்.

**முடிவுரை**

சமணர்கள் இன்பத்தை வெறுத்தனர். இசையும் நாடகமும் மக்கள் வாழ்க்கைக்கு ஊறு விளைவிப்பன என்ற எண்ணம் கொண்டனர். இதனால் தமிழில் இருந்த இசை, நாடக நூல்கள், பல மறைந்தன என்பது வரலாற்றாசிரியர் முடிவு ஆயினும் சமணர்கள் பல்துறையிலும் செய்த பணி என்றும் தழைத்து நிற்கும் என்பதில் எவ்வித ஐயமில்லை. சமணர் தாம் செல்லும் இடங்களில் எல்லாம் அம்மண்ணில் வழங்கும் மொழியோடு கலக்கும் திறன் பெற்றிருந்ததால் தமிழகத்தில் அவர்கள் புகுந்து சமயப் பணியோடு தமிழ்ப்பணியும் ஆற்றினார்கள் என்பது புலப்படுகிறது. சமண சமயத்தின் தலைசிறந்த கொள்கைகளான கொல்லாமை, துறவு, துன்பம்பொறுத்தல் ஆகியன தமிழ் மக்களை மிகவும் கவர்ந்தன. எனவே சமண சமயம் தமிழகத்தில் வேருன்றியது என்று சொல்லலாம். மௌரியப் பேரரசர் காலத்தில் இது செல்வாக்குப் பெற்றிருந்து. மேற்கூறப்பட்டுள்ள ஆய்வில், இலக்கணங்கள், காப்பியங்கள். சிற்றிலக்கியங்கள், நீதிநூல்கள், புராண நூல்கள், நிகண்டுகள் போன்ற நூல்களை ஆராய்ந்து சமணர்கள் வழங்கிய கொடைகளின் ஊடாக சமணர்கள் தமிழுக்குச் சிறப்பான தமிழ்த் தொண்டினை ஆற்றி சிறப்பித்தனர் என்பது புலப்படுகிறது.

**துணைநூல் பட்டியல்:**

[1] தொல்காப்பியம், எழுத்ததிகாரம் இளம்பூரணர் உரை, சாரதா பதிப்பகம், சென்னை. 14.

[2] தமிழண்ணல், புதியமுறை எளியவுரை யாப்பருங்கலக்காரிகை, முதற் பதிப்பு, அக்டோபர் 2004, தமிழண்ணலின் பவளவிழா வெளியீடு.

[3] ஞா. மாணிக்க வாசகன், வளையாபதி, உமா பதிப்பகம், சென்னை.01.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

[4] டாக்டர் செ. உலகநாதன், மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், டிசம்பர் 1993, முல்லை நிலையம், தி. நகர், சென்னை. 17.

[5] ஞா. மாணிக்க வாசகன், நாலடியார். உமா பதிப்பகம், சென்னை. 01.

[6] ஞா. மாணிக்க வாசகன், பழமொழி நானூறு மூலமும் தெளிவுரையும், உமா பதிப்பகம், சென்னை.01.

[7] ஞா. மாணிக்க வாசகன், சிறுபஞ்சமூலம் மூலமும் விளக்க உரையும், உமா பதிப்பகம், சென்னை 01.

[8] ஞா. மாணிக்க வாசகன், மதுரைக் கூடலூர்க் கிழார் இயற்றிய முதுமொழிக் காஞ்சி மூலமும் விளக்க உரையும், உமா பதிப்பகம், சென்னை 01.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**இலட்சுமன். “தமிழ் இலக்கியத்தில் சமணர்களின் தமிழ்த்தொண்டு.”** *தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 3, சிற.இதழ் 3, தொகுதி 3, ஜனவரி 2021, பக்.489-495. டிஓஐ: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.073**

**Cite this Article in English (MLA 8 Style) as:**

**Lakshman. “Tamil Literary Contribution of the Jains.”** *International Journal of Tamil Language and Literary Studies*, Vol. 3: Special Issue - 3, Vol. 3, January 2021, pp.489-495. DOI: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.073**

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். /I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**திருவாசகத்தில் அட்டவீரச் செயல்கள்**

**Eight Heroic Deeds in "Thiruvasagam"**

**மா.ஜெயக்குமார்,** முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை, திருவள்ளுவர் பல்கலைக்கழகம், சேர்க்காடு, வேலூர்.
**M.Jayakumar,** Ph.D. Research Scholar, Department of Tamil, Thiruvalluvar University Serkkadu, Vellore.
ORCiD: https://orcid.org/0000-0003-1443-0290

**முனைவர் க.சிங்காரவேலு,** உதவிப்பேராசிரியர்,தமிழ்த்துறை திருவள்ளுவர்பல்கலைக்கழகம், சேர்க்காடு, வேலூர்,
**Dr.K.Singaravelu,** Assistant Professor, Department of Tamil, Thiruvalluvar University, Serkkadu,Vellore.
ORCiD: https://orcid.org/0000-0002-6194-0974
**DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.074**

## Abstract

*"Tiruvachakam" is a celebrated spiritual epic of Tamil Literature. It is one of the best books among Saiva Thirumuraikal (Shaiva Holy Works). Manikkavasakar who wrote the "Tiruvachakam" has mentioned many facets of Lord Shiva's Grace. Lord Shiva has done eight feats of heroism and id depicted in the holy book "Tiruvachakam". This research paper discusses on the eight feats that how the Lord has volunteered to do it in action to safeguard his devotees.*

**Keywords:** "Tiruvachakam", Manikkavasakar, Thirumuraikal, Shiva's Grace, Heroic deeds

### முன்னுரை

சைவசமயம் உலகின் மிகப் பழமையான உயிரோட்டமுள்ள சமயமாகும். சைவ சமயம் என்பது சிவனை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடக்கூடிய சமயம். அச்சமயத்தின் வழிபடு நூலாக பன்னிரு திருமுறைகள் போற்றப்படுகிறது. அவற்றுள் எட்டாம் திருமுறையாக வரும் திருவாசகம் சிறப்புக்குரிய ஒன்றாகும். திருவாசகத்தில் சிவபெருமானின் பல அருட் செயல்கள் போற்றப்படுகிறது. அதில் அவர் புரிந்த வீரச்செயல்களை எண் வகையாக வகைப்படுத்தி அட்ட வீரச்செயல்கள் என்பர் அவற்றை ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

### அட்டவீரட்டம் பெயர்க்காரணம்

அட்ட என்ற சொல் எட்டு என்கிற பொருளைக் குறிக்கும். வீரட்டம் என்பது வீரம் + தானங்கள் ஆகும். இதில் தானம் இடத்தை குறிக்கும் வீரம்+தானங்கள்-வீரத்தானங்கள் – வீரட்டானங்கள் – வீரட்டம் எனத் திரிந்து வழங்கப்பெற்று வருகின்றன. எட்டு வீரத்தானங்கள் அட்டவீரட்டம் என வழங்கப்படுகின்றன. "**அட்டானம் என்று ஓதிய நாலிரண்டும்" (திருஞானசம்பந்தர் தேவாரம் இரண்டாம் திருமுறை, திருச்சேத்திரக்கோவை திருப்பதிகம் பாடல் எண்.3)** என்று திருஞானசம்பந்தர் 'வீரட்டானம்' என்பதை 'அட்டானம்' என்று பாடியுள்ளார்.

### அட்ட வீரட்ட தலங்கள்

சிவபெருமானின் எட்டு விதமான வீரச்செயல்கள் எட்டு இடங்களில் நிகழ்த்தப்பட்டன.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

இவை நிகழ்ந்த இடங்களே அட்ட வீரட்ட தலங்கள் என வழங்கப்படுகின்றன. அவை, திருக்கண்டியூர் பிரமன் சிரத்தை கொய்தது,திருக்கோவலூர் அந்தாகாசுரனை அழித்தது, திருவதிகை திரிபுரத்தை எரித்தது, திருப்பறியலூர் தக்கன் தலையை கொய்தது, திருவிற்குடி சலந்தராசுரனை வதைத்தது, திருவழுவூர் யானைத் தோலை உரித்தது,திருக்குறுக்கை காமனை எரித்தது, திருக்கடவூர் எமனை உதைத்தது ஆகிய தலங்களாம்

இதனை,

**பூமன் சிரங் கண்டி அந்தகன் கோவல் புரம் அதிகை**
**மாமன் பறியல் சலந்தரன் விற்குடி மாவழுவூர்**
**காமன் குறுக்கை யமன் கடவூர் இந்தக் காசினியில்**
**தேமன்று கொன்றையும் திங்களும் சூடி தன் சேவகமே (மு.இராகவயங்கார், பெருந்தொகை,பாடல் எண்.88)**

என்ற தனிப்பாடல் வழி அறியமுடிகிறது.

**திருவாசகத்தில் அட்டவீரச் செயல்கள்**

பன்னிரு திருமுறைகளுள் மாணிக்கவாசகர் அருளியது திருவாசகம் ஆகும். திருவாசகத்தில் சிவபெருமானை போற்றி 658 பாடல்கள் பாடியுள்ளார். அவற்றுள் சிவபெருமானின் பல செயல்கள் போற்றப்பட்டுள்ளது. அதில் அட்டவீரச் செயல்களும் ஒன்றாகும். சைவ சமயத்தில் அட்ட (எட்டு) என்ற சொல் மிகவும் சிறப்புடையதாக கருதப்படுகிறது. இறைவனுடைய குணங்கள் எட்டாக உரைக்கப்படுகிறது. அவை,

**தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினின்று நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என்பனவாகும். (மூர்த்தி.அ.கி, சைவசித்தாந்த அகராதி ப.70)**

இந்த அடிப்படையிலேயே சிவபெருமான் பல வீரச்செயல்கள் செய்திருந்தாலும் கூட எட்டு வீரச் செயல்கள் சிறப்பாக கருதப்பட்டுள்ளமையை அறியமுடிகிறது.

**பிரமன் சிரத்தை கொய்தது (திருக்கண்டியூர்)**

மேரு மலையின் சாரலில் முனிவர்கள் தவம் செய்து வாழ்ந்து வந்தனர். பிரமன் அவர்கள் முன் தோன்றினார். பிரமனை வரவேற்று வணங்கினர். பின்னர் பிரமனிடம் உலகிற்கு கருத்தா யார்? உயிர்களுக்கு முக்தியளிப்பவர் யார்? என்ற கேள்வியை கேட்டனர். பிரமன் அவர்களை பார்த்து நானே அனைத்தும் என ஆணவத்தோடு கூறினார். இதை கேட்ட வேதங்கள் அவரை எச்சரித்தன, திருமாலும் பிரமனுக்கு அறிஉரை கூறினார். எவற்றையும் பொருட்படுத்தாது பிரமன் நின்றார். தேவர்கள் சிவபெருமானிடம் பிரமனது ஆணவத்தை அழிக்குமாறு வேண்டினர். சிவபெருமான் தனது அம்சமான பைரவரை தோற்றுவித்து பிரமனை அழிக்க அனுப்பினார். பைரவர் வருவதை கண்ட பிரமன் அவர் மீது

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

பிரமாஸ்திரத்தை தொடுத்தார். அது பயனற்று போனது. பைரவர் பிரமனுடைய ஐந்து தலைகளுள் ஒன்றை கிள்ளி எறிந்தார்.

இதனை, "அயன்தலை கொண்டு செண்டாடல் பாடி" (திருவசாகம், திருப்பொற்சுண்ணம் பாடல் எண்.18) என்று திருப்பொற்சுண்ணத்திலும்,

**நல்ல மலரின் மேல் நான்முகனார் தலை**

**ஒல்லை அறிந்தானென்று உந்தீபற**

**உகிரால் அரிந்ததென்று உந்தீபற (திருவசாகம், திருவுந்தியார் பாடல் எண்.18)**

என்று திருவுந்தியாரிலும்

**சிரம் பிரமன் ...**

**தூய்மைகள் செய்தவா**

**தோணொக்க மாடாமோ (திருவசாகம், திருத்தோணோக்கம் பாடல் எண்.11)**

என்று திருத்தோணோக்கம் திருப்பதிகத்தில் இவ் வீரச்செயல் குறிப்பிடப்பட்டுள்ளது.

பிரமன் அறம் மீறி நடந்த காரணத்தால் தான் அவரது சிரம் கொய்யப்பட்டது. இதனை,

**...அறத்தில் நில்லா**

**பிரமன்தன் சிரம் ஒன்றைக் கரம் ஒன்றினால்**

**கொய்தானை... (திருநாவுக்கரசர் தேவாரம், ஆறாம் திருமுறை, திருநாகேச்சர திருப்பதிகம் பாடல் எண்.8)**

என்கிற திருநாவுக்கரசர் தேவாரத்தையும் இங்கு ஒப்புநோக்கலாம். ஆணவத்தினால் எந்த ஒரு தலைமைப்பண்பையும் அடைய முடியாது என்பதையும் அப்படி இருந்தால் இருக்கின்ற ஒன்றையும் நாம் இழக்க நேரிடும் என்பதையும் இந்த வீரச்செயலின் வாயிலாக அறியமுடிகிறது.

**அந்தகாசுரனை அழித்தது (திருக்கோவலூர்)**

அந்தகன் என்ற அசுரன் சிவபெருமானை வேண்டி அழிவில்லாத வரம் பெற்றான். வரம் பெற்ற அசுரன் தேவர்களை துன்புறுத்தினான். தேவர்கள் சிவபெருமானிடம் சென்று அந்த அசுரனால் தங்களுக்கு ஏற்பட்ட கொடுமைகளை முறையிட்டனர். சிவபெருமான் தேவர்களின் துயர் போக்கும் பொருட்டு அந்தாகாசுரனை தம் சூலத்தால் குத்தினார். துன்பம் தாங்காத அந்தகாசுரன் சிவபெருமானை வேண்டினான்.கருணைக்கொண்டு அவனை சிவகணங்களுக்கு தலைவனாக்கினர். இதனை,

**அயனை அநங்கனை*அந்தகனை* ...**

**நயனங்கள் மூன்றுடைய நாயகனே தண்டித்தால்" (திருவாசகம் திருச்சாழல் பாடல் எண்.4)**

என்று திருச்சாழலிலும்

**அங்கி அருக்கன் இராவணன் *அந்தகன்***

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**...தம் பரிசழிய**

**பொங்கிய சீர் பாடி நாம் பூவல்லி கொய்ய்யாமோ (திருவாசகம், திருப்பூவல்லி பாடல் எண்.15)**

என்று திருப்பூவல்லியிலும் அந்தாகாசுரன் அழிந்த நிகழ்வை மாணிக்கவாசகர் குறிப்பிடுகிறார் அந்தகாசுரனை சிவபெருமான் சூலத்தால் குத்தி அழித்த வீரச்செயலை,

**கருத்துறை அந்தகன் தன்போல் அசுரன்**

**வரத்தின் உலகத்து உயிர்களை எல்லாம்**

**வருத்தம் செய்தானென்று வானவர் வேண்டக்**

**குருத்துயிர் சூலம் கைக்கொண்டு கொன்றானே (திருமூலர் திருமந்திரம், இரண்டாம் தந்திரம் பாடல் எண்.339)**

என்று திருமந்திரத்தில் இவ் வீரச்செயல் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. தவறு இழைத்தவர், தன் தவறை உணர்ந்து சிவபெருமானை முழுமையாக வேண்டினால் அருள் புரிவார் என்பது அந்தகாசுரன் வரலாற்றின் மூலம் அறியமுடிகிறது.

**திரிபுரத்தை எரித்தது (திருவதிகை)**

தாரகாட்சன், கமலாட்சன், வித்யுன்மாலி என்ற மூன்று அரக்கர்கள் தேவர்களுக்கும், முனிவர்களுக்கும் மிகுந்த துன்பத்தை கொடுத்தனர். அவர்களை அழிக்கும் பொருட்டு சிவபெருமான் பூமியை தேராக்கி, பிரமன் தேரை செலுத்த, திருமால் அம்பாகவும், வாசுகி எனும் பாம்பு நாணாகவும், மேருமலை வில்லாகவும் கொண்டு சிவபெருமான் புறப்பட்டார். தங்களுடைய ஆற்றல் இல்லாமல் இந்த மூவரை சிவபெருமானால் அழிக்கமுடியாது என்று தேவர்கள் அகந்தை கொண்டனர். இதை அறிந்து கொண்ட சிவபெருமான் எந்த ஆயுதங்களையும் பயன்படுத்தாது மூன்று அரக்கர்களையும் சிரித்தே எரித்தார். திரிபுரங்களையும் சிவபெருமான் சிரித்து எரித்ததை, **“ஏற்றார் மூதூர் எழில்நகை எரியின்” (திருவாசகம், திரு அண்டப் பகுதி, பாடல்.அடி.158)** என்ற பாடலின் வாயிலாக அறிய முடிகிறது. திருவாசகத்தில் திரிபுரம் எரித்த வீரச்செயலானது பல இடங்களில் பயின்று வருகிறது. அவை,

**புரம் பல எரித்த புராண போற்றி (திருவாசகம், போற்றித் திருவகவல், பாடல்.அடி.221)**

**ஈறம்பு கண்டிலம் ஏகம்பர் தங்கையில்**

**ஓரம்பே முப்புரம் உந்தீபற (திருவாசகம், திருவுந்தியார், பாடல்.எண்.2)**

**ஒருவனுமே புரமூன்றெரித்தவா பூவல்லி கொய்யாமோ (திருவாசகம், திருப்பூவல்லி, பாடல்.எண்.6)**

**மெய்யனே விகிர்தா மேருவே வில்லா**

**மேவலர் புரங்கள்மூன் றெரித்த (திருவாசகம், அருட்பத்து, பாடல்.எண்.7)**

என்று இவ்வீரத்தை மாணிக்கவாசகர் குறிப்பிட்டுள்ளதன் மூலம் அறிய முடிகிறது.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**தக்கன் தலை கொய்தது (திருப்பறியலூர்)**

தக்கன் மிகுந்த தவ வலிமை உடையவன். தன் தவத்தின் வலிமையால் உமையம்மையையே மகளாக பெற்றான். அக்குழந்தைக்கு தாட்சாயணி எனப் பெயரிட்டு வளர்த்தான். உமையம்மையை சிவபெருமான் மணந்து கொண்டதால் மிகுந்த கர்வம் கொண்டான். ஒருமுறை தக்கன் கயிலை மலையை அடைந்தபோது சிவகணங்கள் தடுக்க ,அதனால் சினமான தக்கன் சிவபெருமானையே வெறுத்து ஒதுக்கினான். அவன் வேள்வி செய்யத் துவங்கியபோது சிவபெருமானைக் கூட அழைக்கவில்லை இச்செயலால் கோபம் கொண்ட சிவபெருமான் வீரபத்திரரை படைத்து தக்கனது வேள்வியை அழிக்க அனுப்பினார். வீரபத்திரரும் வேள்வியை அழித்து தக்கனது தலையையும் கொய்தார். இதனை, “சாவ முன்னாள் தக்கன் வேள்வித் தகர்தின்று” (திருவாசகம், திருச்சதகம், பாடல்.எண்.4) ”சாடிய வேள்வி சரிந்திட” (திருவாசகம், திருவுந்தியார், பாடல்.எண்5) வெஞ்சின வேள்வி வியாத்திரனார் தலை” (மேலது, பாடல் எண். 10) என்று இவ்வீரம் பேசப்படுகிறது. அறுபட்ட தக்கன் தலைக்கு பதிலாக ஆட்டின் தலையை பொருத்தி தக்கன் உயிர்ப்பிக்கப்பட்டான். இதனை,

**ஆட்டின் தலையை விதிக்கு தலையாகக்**

**கூட்டிய வாபாடி உந்தீபற (திருவாசகம், திருவுந்தியார், பாடல்.எண்.11)**

என்று மாணிக்கவாசகர் குறிப்பிடுவார். ஆட்டின் தலையோடு சிவபெருமானை தக்கன் போற்றிப்பாடினான். அதை சமகம் என்று கூறுவர். வடமொழியில் அமைந்த அது சமகப்ரச்நம் என்னும் பெயரில் ஆடு ஒலி எழுப்புவது போன்று ஒவ்வொரு அடியின் இறுதியிலும் ‘மே’ என முடியுமாறு அமைந்திருக்கும். இவ்வாறு சமகம் அமைந்திருப்பது மேற்சொன்ன கருத்துக்கு அரண் சேர்க்கும்.

**சலந்தரனை வதைத்தது (திருவிற்குடி)**

சலந்தரன் என்றவன் ஜலத்திலிருந்து தோன்றிய அசுரன் ஆவான். சிவபெருமானை வேண்டி யாராலும் வெல்ல முடியாத வரத்தினைப் பெற்றான். இந்திரனை வென்று தேவலோகத்தினையும், பிரமனை வென்று பாற்கடலையும் பெற்றான் அத்துடன் நில்லாது சிவபெருமானை வெல்ல கயிலைக்கு வந்தான். சலந்தரனை அழிப்பதற்கு சிவபெருமான் தன்னுடைய கால் விரலால் ஒரு சக்கரமொன்றை வரைந்து அதை எடுத்து சலந்தரனின் வீரத்தை நிரூபிக்க கூறினார். சலந்தரன் அச்சக்கரத்தை எடுத்து கழுத்துக்குமேல் கொண்டு சென்ற போது வரையப்பட்ட அச்சக்கரமானது சக்கராயுதமாக மாறி சலந்தரனைக் கொன்றது. இதனை,

**சலமுடைய சலந்தரன் தன் உடல் தடிந்த நல்லாழி**

**நலமுடைய நாரனற்கு அன்றருளியவா றென்னேடீ (திருவாசகம், திருச்சாழல், பாடல் எண்.18)** என்று மாணிக்கவாசகர் இவ்வரலாற்றை சுட்டுவார். சலந்தரனை அழித்த சக்கரமே

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

திருமாலின் கரத்தில் சுதர்சன சக்கரமாக மாறியது என்பது மாணிக்கவாசகர் திருவாக்கால் அறியமுடிகிறது.

**யானைத்தோலை உரித்தது (திருவழுவூர்)**

யானை வடிவு கொண்ட கயாசுரன் என்பவன் பிரமனை வேண்டி தேவர்களை வெல்வதற்கு வரத்தைப் பெற்றான். வரம் தந்த பிரமன் சிவபெருமான் எதிரில் மட்டும் போகாதே போனால் அவ்வரம் அழிந்து போகும் என்றார். கயாசுரன் தேவர், முனிவர்களுக்கு பெருந்துன்பங்கள் செய்து வந்தான். அவர்கள் சிவபெருமானிடம் முறையிட அவர்களைக் காக்கும் பொருட்டு கயாசுரனை அழித்து அவன் தோலை போர்த்திக்கொண்டார். இந்நிகழ்வு பற்றி மற்றொரு கதையும் சொல்லப்படுவதுண்டு தாருகாவனத்து முனிவர்கள் சிவனை அழிப்பதற்கு வேள்வியில் இருந்து யானையை அனுப்பினர் அந்த யானையின் தோலை உரித்து சிவபெருமான் ஆடையாக போர்த்திக்கொண்டார் என்றும் கூறுவர். இந்நிகழ்வை, '"அத்தி உரித்தது போர்த்தருளும் பெருந்துறையான்" (திருவாசகம், திருப்பூவல்லி, பாடல் எண்.19) என்று தாருகவனத்து கதையையும், "கயந்தனை கொன்றுரி போர்த்தல் பாடி" (திருவாசகம், திருப்பொற்சுண்ணம், பாடல் எண்.18) என்று கயாசுரன் கதையையும் மாணிக்கவாசகர் திருவாசகத்தில் ஒருங்கே வைத்து பாடியுள்ளமையை அறியமுடிகிறது.

**காமனை எரித்தது (திருக்குறுக்கை)**

சூரபதுமன், தாரகன், கஜமுகாசுரன் ஆகிய அசுரர்களை அழிக்க சிவபெருமான் ஒரு குமாரனை உதிக்கச் செய்ய வேண்டும். யோக நிலையில் இருக்கும் சிவபெருமான் விழித்தால் அது நிறைவேறும். ஆகவே சிவபெருமானின் யோகத்தை கலைக்க மன்மதனை அனுப்பினர். மன்மதன் சிவபெருமான் மீது மலரம்பு தொடுத்தான். தனது நெற்றிக்கண்ணால் சற்றே விழித்து காமனை நோக்க அவன் எரிந்து சாம்பலானான். இதனை, காமன் உடலுயிர்... தூய்மைகள் செய்தவா தோணோக்க மாடாமோ (திருவாசகம், திருத்தோணோக்கம், பாடல் எண்.11) என்றும் "...தக்கநற் காமன் தனதுடல் தழலெழ விழித்த" (திருவாசகம், வாழாப்பத்து, பாடல் எண்.3) என்று மாணிக்கவாசகர் திருவாசகத்தின் வழி இவ்வீரச்செயலை கூறிப் போந்தார். சிவபெருமான் காமனை எரித்ததை,

**...அமரர் வேண்ட**
**அழிக்க வந்த காமவேளைஅவனுடைய தாதை காண**
**விழித்து உகந்த வெற்றி என்னேவேலைசூழ் வெண்காடனீரே**

**(சுந்தரர் தேவாரம், ஏழாம் திருமுறை, திருவெண்காடு திருப்பதிகம் பாடல்.எண்.2)** என்கிற சுந்தரர் தேவாரத்தையும் இங்கு ஒப்பு நோக்கலாம்.

**காலனை உதைத்தது (திருக்கடவூர் வீரட்டம்)**

மிருகண்ட மகரிஷி சிவபெருமானிடம் பிள்ளைப்பேறு வேண்டி நிறைந்த அறிவும், குறைந்த ஆயுளும் உள்ள மார்கண்டேயனை மகனாக பெற்றார். தனது அறிவாலும்,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

நற்குணத்தாலும் தன் ஆயுள் பற்றிய குறையை அறிந்த மார்கண்டேயர் தன் ஆயுள் குறையை நீக்கிக்கொள்ள பல சிவாலயங்களை தரிசித்து நிறைவாக திருக்கடவூர் வீரட்டம் வருகிறார். அங்கு உள்ள அமிர்தகடேசுவரரை வழிபடுகிறார். பதினாறு வயது நிரம்பியதால் அவரது உயிரை காலன் கவர வருகிறான். மார்கண்டேயன் சிவபூசையில் தன்னை முழுமையாக ஈடுபடுத்தி வழிபாடு செய்து வந்தான். சிவபூசை செய்யும் உயிரை எமன் எடுக்கக்கூடாது என்பது விதி அது தெரிந்தும் கூட ஆணவத்தால் மார்கண்டேயன் உயிரைக் கவர நினைத்த எமனை சிவபெருமான் கோபம் கொண்டு தன் காலால் உதைத்து மார்கண்டேயன் என்றும் பதினாறாக வாழ அருள் புரிந்தார். இதனை, காலன் ஆர் உயிர்கொண்ட பூங் கழலாய் (திருவாசகம், செத்திலாப்பத்து, பாடல் எண்.9) என்றும், காலாற் காலனைக் காய்ந்த கடுந்தழற் பிழம்பண்ண மேனிச் (திருவாசகம், அருட்பத்து, பாடல் எண்.7) என்றும் இவ்வீரச்செயலை விவரிக்கிறார். இக் கதையின் மூலமாக இறைவனை சரணாகதி அடைந்தால் அவர் மரணத்தையும் மாற்றி அமைப்பார் என்பதை அறிய முடிகிறது

**முடிவுரை**

சிவபெருமான் பல வீரச்செயல்கள் செய்திருந்தபோதிலும் அட்ட வீரச் செயல்கள் சிறப்புக்குரிய ஒன்றாக வைத்து போற்றப்பட்டுள்ளதை அறியமுடிகிறது. பிரமன் தான் என்கிற ஆணவத்தால் தனக்கு இருந்த ஐந்து தலைகளுள் ஒன்றை இழந்ததையும், ஆணவத்தால் இருக்கின்ற ஒன்றையும் இழக்க நேரிடும் என்பதையும் அறியமுடிகிறது அந்தகாசுரனும், தக்கனும் தான் செய்த தவறுக்கு மனம் திருந்தி இறைவனை வழிபட்டதன் மூலம் திருந்திய நபர்களுக்கு இறைவன் அருளை வழங்கினான்.இதன் மூலம் இறைவனின் பேரருட்கருணை வெளிப்படுகிறது. திரிபுர தகனத்தின் போது சிவபெருமான் எந்த ஆயுதத்தையும் பயன்படுத்தாது சிரித்தே திரிபுரத்தை எரித்ததையும், திருவாசகத்தில் பல இடங்களில் இவ்வீரச்செயல் பயின்று வருவதையும் காணமுடிகிறது. சலந்தரனை அழித்த சக்கரமே திருமாலுக்கு சுதர்சனசக்கரமாக கிடைத்தன என்பதையும், யானைத் தோல் உரித்த வீரச்செயலில் கயாசுரவதமும், தாருகாவனத்து முனிவர்கள் அனுப்பிய யானையின் தோலை உரித்து போர்த்த இரு நிகழ்வுகளையும் ஒருங்கே திருவாசகத்தில் மாணிக்கவாசகர் பாடியுள்ளதையும் அறியமுடிகிறது. இறைவனை நம்பிக்கையோடு பூசிப்பவர்க்கு மரணத்தைக் கூட மாற்றி அமைத்து அவர்களுக்கு அருள் செய்வார் என்பது மார்கண்டேயனுக்காக காலனை காலால் உதைத்த வரலாற்றின் மூலம் உணரமுடிகிறது

**துணைநூற் பட்டியல்**

[1] இராகவையங்கார்.மு, பெருந்தொகை, செந்தமிழ் பிரசுரம், மதுரை, பதிப்பு ஆண்டு 1935 – 1936.

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

[2] இராமநாதன், திருஞானசம்பந்தர் தேவாரம், ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ், சென்னை, முதற்பதிப்பு, 2007.

[3] இராமநாதன், அப்பர் தேவாரம், ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ், சென்னை, முதற்பதிப்பு, 2008.

[4] இராமநாதன், சுந்தரர் தேவாரம், ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ், சென்னை, முதற்பதிப்பு, 2007.

[5] மாணிக்கவாசகன்.ஞா, திருமூலர் திருமந்திரம் மூலம்ம் – விளக்க உரையும், உமா பதிப்பகம், சென்னை, நான்காம் பதிப்பு, 2008.

[6] மூர்த்தி.அ.கி, சைவசித்தாந்த அகராதி, சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம், சென்னை, முதற்பதிப்பு, 1998.

[7] வரதராஜன்.ஜி, திருவாசக விளக்கவுரை, பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, ஏழாம் பதிப்பு, 2016.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**ஜெயக்குமார் & சிங்காரவேலு. “திருவாசகத்தில் அட்டவீரச் செயல்கள்.”** *தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 3, சிற.இதழ் 3, தொகுதி 3, ஜனவரி 2021, பக்.496-503. டிஒஐ: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.074**

**Cite this Article in English (MLA 8 Style) as:**
**Jayakumar & Singaravelu. “Eight Heroic Deeds in “Thiruvasagam”.”** *International Journal of Tamil Language and Literary Studies*, Vol. 3: Special Issue - 3, Vol. 3, January 2021, pp.496-503. DOI: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.074**

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். /I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

# பக்தி திறக் கோட்பாட்டில் காரைக்காலம்மையாரும் ஆண்டாளும் – ஓர் ஒப்பீடு

## A Comparison of Karaikal Ammaiyar and Andal in the Doctrine of Devotion

**வெ. ஜெயந்தி**, முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை, ஸ்ரீசந்திரசேகரேந்திர சரஸ்வதி விஸ்வா மகாவித்யாலய, பல்கலைக்கழகம், காஞ்சிபுரம்.
**V. Jayanthi,** Research Scholar, Department of Tamil, Sri Chandrasekharendra Saraswathi Viswa Mahavidyalaya, Kanchipuram.
**ORCiD:** https://orcid.org/0000-0003–4682–1245

**முனைவர். என். விஜயலட்சுமி**, இணைப்பேராசிரியர் (தமிழ்த்துறை) ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி, விஸ்வா மகாவித்யாலய பல்கலைக்கழகம், காஞ்சிபுரம்.
**Dr. N. Vijayalakshmi** Associate Professor of Tamil, Sri Chandrasekharendra Saraswathi Viswa Mahavidyalaya, Kanchipuram.
**ORCiD:** https://orcid.org/0000-0003–3043–3918

**10.38067/ijtlls.2021.spl.v03i03v3.075**

## Abstract

*Hymns that express love for the Lord became known as devotional literature. Shaivism and Vaishnavism play a major role in this devotional literature. Karaikal Ammayar, one of the 63 Nayanmars in the Shaiva religion, and the hymns of it has excelled the Vaishnava religion in its verve and devotion. Karaikal Ammaiyar and Andal were responsible for the emergence of a new literary genre. Karaikal Ammaiyar was the one who excelled in chanting Shiva; Andal thought that she should have Narayana as her husband. Karaikal Ammaiyar is the one, who has the distinction of calling Lord Shiva as 'Ammaiye'. The one who wore the garland she wore to Narayanan and enjoyed herself was the one who lit the torch. Thus, Karaikal Ammaiyar and Andal go hand in hand in the straight line of devotion through their songs.*

**Keywords:** Devotional Literature, Saivam, Vaishnavism, Karaikal Ammaiyar, Andal

### அறிமுகம்

இறைவனிடம் கொண்ட அன்பை வெளிப்படுத்துவதாக அமைந்த பாடல்கள் பக்தி இலக்கியங்களாயின. கடவுள் பற்றிய எண்ணமும் கோட்பாடும் மிகப் பழமையானது. **"ஒரு தலைவனிடம் அல்லது மன்னனிடம் முறையிட்டு தீர்க்க முடியாத குறைபாடுகளைத் தீர்க்கும் பேராற்றலாக, மனிதன் இறைவனை நினைத்தான். அதனைப் புகழ்ந்து ஏற்றிப் போற்றிய பாடல்கள் 'பக்தி இலக்கியங்கள்'" (வெ.ஜெயந்தி., பக்தி இலக்கியக் கொள்கை – காரைக்காலம்மையார், ப.4.)** என்றாயின. எளிய – நேரான தனிப்பாடல்களாகவும் தன்னுணர்வுப் பாடல்களாகவும் தோன்றிய தமிழ் இலக்கியம், பக்தி மார்க்கத்தால் பல மாறுதல்களை அடைந்தது. உணர்ச்சி மிகுந்த பண்ணோடு இயைந்த பாடல்களை பக்தி மார்க்கம் ஏற்படுத்தியது. கற்பனை நயமும் கவிதைச் சுவையும் மிகுந்தன. இதனால் 'காப்பியம்' என்ற வளர்ச்சியை இலக்கிய வகைமை அடைந்தது. அதேபோல சமண சமயம் ஊழின் வலிமையை வற்புறுத்த, பௌத்த மதம் அளவு கடந்த தியாக வாழ்வை ஏற்படுத்தின. இவ்வாறு

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

சமண பௌத்த சமயங்களின் இறுக்கமான கொள்கைகள் தமிழகத்தில் பக்தி மார்க்கம் தழைக்கக் காரணமாயிற்று. காலப்போக்கில் பக்தி மார்க்கம் தமிழிலக்கிய வளர்ச்சியில் ஒரு முக்கிய திருப்பத்தையும் ஏற்படுத்தியுள்ளது.

**சைவ, வைணவ இணைவு**

ஜனன, மரண சூழலிலிருந்து நம்மை விடுவிப்பது பக்திநெறி. இதனை சைவ வைணவத்தில் காணலாம். சைவத்தை 'ஞான மார்க்கம்' என்றும்; வைணவத்தை 'பக்தி மார்க்கம்' என்றும் அழைப்பர். மனித வாழ்வு வெப்பமும் தட்பமும் நிறைந்தது. இதில் வெப்பத்தின் நுண்மை சிவமாகவும், தட்பத்தின் நுண்மை திருமாலாகவும்; சிவன் பவளம் போன்ற மேனியன், திருமால் பச்சை நிறத்தவன் என்ற தோற்றம் உணர்த்தப்படுகிறது. இதனால் சிவன் அனல் ஏந்தி ஆடுபவனாகவும், திருமால் ஆழியிடை துயில்பவனாகவும் காட்சி தருகின்றனர். சிவாலயத்தில் வெந்த நீற்றையும் (விபூதி) திருமாலின் வழிபாட்டு தளங்களில் குளிந்த தீர்த்தத்தையும் பிரசாதமாக வழங்கும் காரணமும் இதனால் நிகழ்கிறது. இதில் பாதி சிவம், பாதி திருமால் என்பது 'கேசவார்த்த மூர்த்தம்' என்றழைக்கப்படும். **"அரியலால் தேவியில்லை ஐயன் ஐயனார்க்" (எஸ்.நடராஜன்., பாவை உணர்த்தும் தத்துவங்கள்., ப.62)** என்று அப்பரடிகள், திருமாருக்கு சிவன், தன் உடலில் பாதியைத் தந்ததாகவும்; திருமாலின் உருவம் சிவனுக்கு இடம் தருவதாகவும் குறிப்பிடுகிறார். இதனை,

**பொன் திருமேனிப் புரிசடையும் புண்ணியனும்**
**நின்றுலகதாய நெருமாலும் – என்றும**
**இருவரங்கத்தால் திரிவரேனும் ஒருவன்**
**ஒருவனங்கத் தென்று முளன் (எஸ்.நடராஜன்., மேலது., ப.62)**

என்றவாறு ஆழ்வார்கள் பாடியுள்ளனர். சைவமும், வைணவமும் இரு கண்களாகின்றன.

**என்னிரு கண்ணே**
**கண்ணிற் கருமனியே**
**மணியாடும் பாவாய் (எஸ்.நடராஜன்., மேலது., ப.23)**

என்ற திருநாவுக்கரசரின் வாக்கு இதனை விவரிக்கிறது. இவ்வாறு பக்தி இலக்கியங்கள், மனித மனதை பக்திப் பாதையில் திருப்ப பெரிதும் துணைநிற்கின்றன. இவ்விருச் சமயங்களிலும் சிறந்து விளங்கும் பெண்மணிகளாக காரைக்காலம்மையாரையும் ஆண்டாளையும் காண முடிகிறது. இவர்களின் பக்திதிறம் ஒப்பீடு காண்பவர்களை வியக்கச் செய்வதாகிறது.

**பக்தித் திறம் – ஒப்பீடு**

சைவ சமயத்தைச் சார்ந்த அடியவர்களுள் இயற்றமிழிலும் இசைத்தமிழிலும் வல்லமை பெற்றவராக காரைக்காலம்மையார் திகழ்கிறார். வைணவ சமயத்தைச் சார்ந்த பன்னிரு ஆழ்வார்களுள் ஆண்டாள் ஒரே பெண்மணியாகவும்; முதன்முதலாக அந்தாதி

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

(அற்புதத்திருவந்தாதி), மணிமாலை (திருவிரட்டை மணிமாலை) எனும் நூல்களை படைத்தளித்த பெருமைக்குரியவராகவும் திகழ்கிறார்.

திருமுறைப் பாடல்களில் முதன்முதலாகப் பண்ணோடு பாடலை அருளியவர் என்ற பெருமையும், பதிகத்தின் இறுதியில் திருக்கடைக்காப்பு பாடுவதற்கு வழிகாட்டியானவராகவும் காரைக்காலம்மையார் விளங்குகிறார்.

**அப்பனை அணிதிரு ஆலங்காட்டுள்**
**அடிகளைச் செடிதலைக் காரைக்காற்பேய்**
**செப்பிய செந்தமிழ் பத்தும் வல்லார்**
**சிவகதி சேர்ந்தின்பம் எய்துவாரே (மு.சாயபு மரைக்காயர்., காரைக்காலம்மையார் கருவூலம்., ப.421)**

சங்க நூல்கள் காட்டும் பாவைப்பாட்டு, தைந்நீராடல் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு, கண்ணனின் 'பாலசரிதக் கதைகளில்' திளைத்துத் தானும் ஒரு கோபியாகச் சமயநெறிக் காலத்தில் ஆண்டாள் படைத்த புதிய இலக்கிய வகையே திருப்பாவையாகும்.

**பிறந்து மொழி பயின்று பின்னெலாங் காதல்**
**சிறந்து நின் சேவடியே சேர்ந்தேன் (சு.சபாரத்தின குருக்கள்., காரைக்கால் அம்மையார் வரலாறும் பதிகங்களும்., ப.50)**

பிறந்து, மொழி பயின்ற காலம் முதலே, ஆடற்பெருமானையே முழுமுதற் கடவுளாக எண்ணி வாழ்ந்தவர் காரைக்காலம்மையார். திருமாலுக்கு தான் சூடி, அழகு பார்த்த பூமாலையை சூட்டி மகிழ்ந்தவர் ஆண்டாள். அதனால் 'சூடிக் கொடுத்தாள்" என்னும் சிறப்பினைப் பெற்றுள்ளார்.

காரைக்காலம்மையார் தான் பாடிய அற்புதத் திருவந்தாதியில் சிவந்த மேனியையுடைய சிவபெருமானும், கார்மேகவண்ணனாகிய திருமாலும், இணைந்திருக்கின்ற கோலம் காண்பவர்களுக்கு பொன்மலையும், நீலமலையும் ஒன்று சேர்ந்திருப்பது போல காட்சியளிக்கிறது என்று குறிப்பிடுகிறார். இதனை,

**மின்போலும் செஞ்சுடையான் மாலோடும் ஈண்டிசைந்தால்**
**என்போலுங் காண்பார்கட் கென்றிரேல் – தன்போலும்**
**பொற்குன்றும் நீல மணிக்குன்றும் தாமுடனே**
**நிற்கின்ற போலும் நெடிது (சு.சபாரத்தின குருக்கள்.,மேலது ப.72., பா.எ.83)**

எனும் பாடல் விளக்குகிறது. ஆனால், ஆண்டாள் தன், பதியை தனது காதலை நாச்சியார்திருமொழியில் அவனது(திருமால்) வண்ணம்கூட தன்னை பாடாய் படுத்துகிறது. அந்தத் துன்பத்திற்கு மருந்து அவனுடைய திருகண்களால் தன்னைக் குளிரநோக்கும் பார்வை ஒன்றே என்கிறார்.

**கருவுடை முகில் வண்ணன் காயா வண்ணன்**
**கருவிளை போல் வண்ணன் கமல வண்ணத்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**திருவுடை முகத்தினில் திருக்கண்களால்**

**திருந்தவே நோக்கெனக் கருள் (டி.வி.ராதாகிருஷ்ணன்., நாச்சியார் திருமொழி., ப.10., பா.எ.6)**

எனும் பாடலடிகளால் ஆண்டாளின் உள்ளுணர்வை அறியலாம். இறைவனையே கணவனாக மணந்து, அவனோடு வாழ்வதே தன்னுடைய பெண்மையை முழுமையாக்கும் என்று ஆண்டாள் பாடுயுள்ளார்.

**பெண்மையைத் தலையுடைத் தாக்கும் வண்ணம்**

**கேசவ நம்பியைக் கால் பிடிப்பாள்**

**என்னுமிப் பேறெனக் கருள் (டி.வி.ராதாகிருஷ்ணன்., மேலது., ப.12., பா.எ8)**

ஆனால், காரைக்காலம்மையார் முழுமுதற் பொருளான, சிவபெருமானை மட்டுமே மனதில் நினைத்தும் அவரைப் பற்றியே பேசி - மறவாது வாழ்பவர்களை, இறைவன் 'மறுபிறவி' என்ற ஒன்றில்லாத நிலையை (முக்தி) அருளுபவன் என்கிறார்.

**ஈசன் அவன் அல்லா(து) இல்லையென நினைந்து**

**கூசி மனத்தகத்துக் கொண்டிருந்து – பேசி**

**மறவாது வாழ்வாரை மண்ணுலகத்(து) என்றும்**

**பிறவாமைகாக்கும் பிரான் (சு.சபாரத்தின குருக்கள்., மேலது., ப.42., பா.எ.2)**

இப்பாடலின் வழியே, நமக்குத் துன்பம் என்று வரும்பொழுது இறைவனை வணங்குங்கள் என்கிறார். இதற்கு மாறாக ஆண்டாள் பாடல்களில் நாராயணனுக்கும், தனக்கும் திருமணம் ஆவதாக, தான் கனவு கண்டதை எடுத்துரைக்கிறாள் ஆண்டாள்.

**வாரண மாயிரம் சூழவ லம்செய்து**

**நாரண நம்பி நடக்கின்றா னென்றெதிற்**

**பூரண பொற்குடம் வைத்துப் புறமெங்கும்**

**தோரணம் நாட்டக் கனாக் கண்டேன் தோழிநான் (டி.வி.ராதாகிருஷண்., மேலது., ப.52., பா.எ.53)**

தான் கனவில் மட்டுமே கண்டு மகிழ்ந்த திருமணச் சடங்குகளை, ஆண்டாள் இச்செய்யுளில் காட்சிப் படுத்தியுள்ளார். ஆண்டாள் திருவரங்க பெருமானை மணம் செய்யும் காட்சியமையும்,

**மத்தளம் கொட்ட, வரிசங்கம் நின்று ஊத**

**முத்து உடைத் தாமம் நிரை தாழ்ந்த பந்தல்கீழ்**

**மைத்துனை நம்பி மதுசூதன் வந்து என்னைக்**

**கைத்தலம் பற்றக்க னாக் கண்டேன் தோழி நான் (டி.வி.ராதாகிருஷணன்., மேலது., ப.எ.55., பா.எ.58)**

எனும் நாச்சியார்திருமொழி எடுத்துரைக்கிறது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

அவ்வாறே நீங்காத இன்ப அன்பை வேண்டியவராக காரைக்காலம்மையார் திகழ்ந்ததையும்,

**பிறவாமை வேண்டும், மீண்டும் பிறப்பு உண்டேல் உன்னை என்றும்**
**மறவாமை வேண்டும் இன்னும் வேண்டும் ந்ஆன் மகிழ்ந்து பாடி**
**அறவா! நீ ஆடும் போது உன் அடியின் கீழ் இருக்க என்றார் (சு.சபாரத்தின குருக்கள்., மேலது., ப.20., பா.எ.60)**

எனக்கு பிறவா வரம்வேண்டும். மீண்டும் பிறவி வாய்த்தால், அந்தப் பிறவிலும் உம்மை மறவாதிருக்க வேண்டும். தாங்கள் திருநடனம் புரியும்போது அடியேன் தங்கள் திருவடியின்கீழ் என்றும் பாடிக்கொண்டிருக்கும் பேறுவேண்டும் என்று வேண்டிக் கொண்டவராக காரைக்காலம்மையார் இருந்துள்ளார்.

இவ்வுலகில் இளமை, யாக்கை, செல்வம், பதவி, புகழ் இவையாவும் நிலையற்றவை. நாம் எவ்வளவு நாள் உயிரோடு வாழ்வோம், நம் வாழ்நாள் எப்பொழுது முடியும் என்று நமக்குத்தெரியாது. எனவே உடல், பொருள், செல்வம் இவையாவும் நம்மிடத்திலிருக்கின்ற காலத்தை, தாழ்த்தாமல் உமையொருபாகனை நாம் மனதில் இடைவிடாமல் நினைத்துப் பழகவேண்டும். இறைவனை எண்ணும் நெஞ்சில் வேறுஎந்த எண்ணமும் இல்லாமல், முழு முதற்பொருளாகிய சிவபெருமானையே வழிபட்டு 'பிறவாமை' பெறுவோம் என்று காரைக்காலம்மையார் கூறுகிறார். ஆண்டாள் பாசுரங்களின்வழி கண்ணபரமாத்மாவின் திருவடிகளைப் பற்றிக்கொள்ள வேண்டும் என்ற கூற்றால் அவரது பக்திநெறியின் உச்சக்கட்டத்தை அறியலாம். அதேபோல் ஜீவாத்மா, பரமாத்மாவை அடையத் துடிக்கும் துடிப்பை நாம் ஆண்டாள் பாசுரங்களில் காணமுடிகிறது.

**முடிவுரை**

காரைக்காலம்மையார் பாடல்களில் அவர் வாழ்வில் பட்ட இன்னலினால் விளைந்த, துன்பங்களையும் முக்திநிலையையும் சரணாகதி தத்துவத்தையும் 'முழுமுதற் கடவுள் ஒருவனே அவனையே சரணடைய வேண்டும்' என்கின்ற புலப்பாட்டால் அறியமுடிகிறது. ஆண்டாள் பாசுரங்களில் நாராயணன் மீது, தான் கொண்ட காதலையும், அவனை அடைய விரும்பும் உள்ளப்பாங்கையும் காணமுடிகிறது. அதன்வழி வாழ்வின் அழகை, சிறப்பை நயத்தை, ஆண்டாள் எடுத்துக்காட்டுகிறார். காரைக்காலம்மையாரும் ஆண்டாளும் இறைவனை அடைய வேண்டும் என்று எண்ணினர். அவர்கள் பாடிய பாசுரங்கள், வேறு வேறானவை. ஆனால் இருவரின் எண்ணமும் ஒன்று. அதனால் பக்தி என்ற கோட்டில் இருவரும் இணைந்தே பயணிக்கின்றனர். இருவரும் இறைவனை முழுமையாக சரணாகதி அடைந்தனர். 'உன்னைவிட்டால் என்னை காப்பாற்ற யாருமில்லை' என்ற எண்ணத்தில் ஒன்றுபட்டுள்ளனர். அவ்வகையில் இருவரின் பக்திநெறியும் மிகச்சிறந்து விளங்குகிறது. நம் பேரின்பப் பெருவாழ்விற்கு வழி காட்டுகிறது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

**துணை நூற்பட்டியல்**

[1] ஜெயந்தி.வெ., பக்தி இலக்கியக் கொள்கை – காரைக்காலம்மையார், ஆய்வேடு, மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம், ஜீன் 2009.

[2] நடராஜன்.எஸ்., பாவை உணர்த்தும் தத்துவங்கள், பிரதிபா பிரசுரம், சென்னை, முதல் பதிப்பு 1975.

[3] சாயபு மரைக்காயர்.மு., காரைக்காலம்மையார் கருவூலம், கங்கை புத்தக நிலையம்,, சென்னை, முதல் பதிப்பு 2015.

[4] சபாரத்தின குருக்கள்.சு., காரைக்கால் ‘அம்மையார்’ வரலாறும் பதிகங்களும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, முதல் பதிப்பு 2019.

[5] ராதாகிருஷணன்.டி.வி., நாச்சியார் திருமொழி, திருவரசு புத்தக நிலையம், சென்னை, முதல் பதிப்பு 2018.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**ஜெயந்தி & விஜயலட்சுமி . “பக்தி திறக் கோட்பாட்டில் காரைக்காலம்மையாரும் ஆண்டாளும் – ஓர் ஒப்பீடு.”** *தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 3, சிற.இதழ் 3, தொகுதி 3, ஜனவரி 2021, பக். 504-509. டிஒஐ: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.075**

**Cite this Article in English (MLA 8 Style) as:**

**Jayanthi & Vijayalakshmi. “A Comparison of Karaikal Ammaiyar and Andal in the Doctrine of Devotion.”** *International Journal of Tamil Language and Literary Studies*, Vol. 3: Special Issue - 3, Vol. 3, January 2021, pp.504-509. DOI: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.075**

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். /I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

# இராமயண சிற்பங்கள் உணர்த்தும் பக்தி

## Realizing Devotion in Ramayana Sculptures

**முனைவர் ச.ஜெயஸ்ரீ,** உதவிப் பேராசிரியர்,மன்னர் திருமலை நாயக்கர் கல்லூரி, பசுமலை, மதுரை – 625 004.
**Dr.S.Jeyashree,** Assistant Professor, Mannar Thirumalai Naicker College, Pasumalai, Madurai - 625004.
ORCiD: https://orcid.org/0000-0001-7558-8070
DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.076

## Abstract

*The "Ramayana" is being existing as myths, puranas, and oral literature even before the historic periods in India. "Ramayana" has been spread over South East Asian Countries also. In Tamil Nadu, Early Seventh Century was the period of Devotional Movement. During this period Azhvars and Nayanmars were born and upheld their Vaishnavite and Saivite religious fervour respectively. Even though Ramayana had been written by Valmiki in Sanskrit, it was translated in several languages and developed the devotion among the people in India. Kamban, through the Azhvar's Poems and Literatures, and based on the Tamil culture and legacy wrote his Kamba "Ramayanam". Temple's connection with Epic's and folklore has flourished after the Sangam Period and it has been considered as development of the Religious World. We would be able to know that development of Epics during the Guptha's period through their sculptures. During this period, presenting Ramayana by way of Arts had occurred. In continuity, there was advancement of Arts and there are plentiful of Ramayana Sculptures are in the temples. In this Research we will see some these events.*

**Keywords:** Ramayana, Kamban, Sculptures, Temple, Arts, Epic, Devotion, Religion.

### முன்னுரை

இராமாயணம் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே வாய்மொழிக் கதைகளாகவும், பழங்கதைகளாகவும் இருந்து வந்துள்ளது. இராமாயணம் இந்தியாவில் மட்டுமல்லாது ஆசியநாடுகளிலும் பரவியுள்ளது. தமிழகத்தில் கி.பி. ஏழாம் நூற்றாண்டின் தொடக்கமே பக்தி இயக்கக்காலம். இக்காலத்தில் ஆழ்வார்களும் நாயன்மார்களும் தோன்றி, பக்தி மார்க்கத்தை சைவ வைணவ சமயங்கள் வழியாக வளர்த்தனர். இராமாயணம் வால்மீகியால் எழுதப்பட்டிருந்தாலும் பலமொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டு மக்களிடையே பக்தியினை வளரச் செய்தது. தமிழில் கம்பன் ஆழ்வார்களின் பாசுரங்கள் மற்றும் இலக்கியங்களின் வழியே தமிழ்மரபிற்கேற்ப சில மாற்றங்களோடு படைத்துள்ளான்.

"திருக்கோயில்கள் புராண இதிகாசங்களோடு தொடர்புபடுத்தப்பட்டுச் சிறப்பிக்கப்படுதல் சங்ககாலத்திற்குப்பின் சமயவுலகில் ஏற்பட்ட வளர்ச்சி என்றே தோன்றுகிறது". (டாக்டர் ப.அருணாசலம், பக்தி இலக்கியம் ஓர் அறிமுகம், ப.74) புராண இதிகாசங்களின் வளர்ச்சி குப்தர்கள் காலத்தில் இருந்ததை அவர்களது சிற்பங்களின் வாயிலாக அறிந்துகொள்ளமுடிகிறது. இக்காலத்தில்தான் கலைகளில் இராமாயணத்தைப் படைக்கும் நிலை ஏற்பட்டிருக்கவேண்டும். இதன் தொடர்ச்சியாகக் கலைகளின் வளர்ச்சி

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

இருந்தன. இவ்ஆய்வில் இராமாயண சிற்பங்கள் கோயில்களில் பல இருந்தாலும் மக்கள் சிற்பங்களைப் பார்த்தவுடன் பக்தியின் பொருட்டு வழிபடுவதாக உள்ள சிற்பங்கள் சில உள்ளன. அச்சிற்ப நிகழ்வுகளை மட்டும் இக்கட்டுரையில் காணலாம்.

**சிற்பக்கலை**

எழுத்துக்கள் காட்சி வடிவம் பெறுகிறபோது, சிற்பமும் சித்திரமும் ஏற்படுகின்றன என்பர். சிந்து சமவெளித் தொல்லியல் சான்றுகளுக்கு அடுத்ததாக அசோகர் காலத்தில்தான் கற்சிற்பங்கள் முதன்முதலாகக் கிடைக்கின்றன. மௌரியர் காலத்தைச் சார்ந்த அசோகத் தூண்தான் கற்சிற்பத்திற்குரிய தொடக்கமாகும் (Jayantika Kala; Epic Scenes in Indian Plastic Art, P.3.) இலக்கியமும் கலையும் சமுதாயத்தின் நடைமுறைகளையும் விழுமியங்களையும் உள்ளடக்கியவையாகக் கற்றோருக்கு மட்டுமின்றி கல்லாத மற்றோருக்கும் கருத்துக்களைத் தெரிவிக்கவேண்டிய கடப்பாடுடையன. ஆகவேதான் மக்கள் ஒருங்கிணைகின்ற கோயில்களில் கலைகள் ஏற்றமுற்றன எனலாம். புராண இதிகாசங்களை படித்தல், பக்திப்பாடல்களைப் பாடுதல், நாட்டியம், தோற்பாவைக்கூத்து, பொம்மலாட்டம் முதலிய நிகழ்த்துக் கலைகள் நடைபெறும் அரங்காகக் கோயில்கள் விளங்கின எனலாம். அவ்வகையில் தான் இராமாயண நிகழ்வுகள் கோயில் சிற்பங்களில் இடம்பெற்றிருக்க வேண்டும்.

இராமாயணத்தில் இராமன் கடமைமிக்க மனிதனாகவும், சீதை கற்பிற்கும் இலக்குவணன் முதலிய தம்பியர் சகோதரப்பாசத்திற்கும் குகன் பக்திக்கும், விபீடணன் அறத்திற்கும் உரிய பாத்திரங்களாக உருவகிக்கப்படுகின்றனர். இவ்வாறு விழுமியங்களை உணர்த்தும் மாதிரிப் பாத்திரங்கள் இடம்பெறும் காட்சிகள் சிற்பங்களாகின்ற போது, அவை காண்போரைக் கவனம் கொள்ள வைக்கின்றன. இதனைக் கருத்திற்கொண்டே இராமாயணச் சிற்பங்கள் கோயில்களில் இடம்பெறுவதைச் சுட்டலாம். கோயில்களில் விமானம், கோபுரம், மண்டபங்கள், தூண்கள் முதலியவற்றை வேலைபாடுகளின்றி அமைக்காது கலை அழகுடன் படைக்கவேண்டும் என்பதற்காகவும் சிற்பங்களை இடம்பெறச் செய்தனர்.

கலைகளின் நோக்கம்

இராமாயணம் படைக்கப்பட்டதன் நோக்கமே அக்கால மக்களுக்குச் சொல்லவேண்டிய விழுமியங்களைச் சொல்வதற்காகத்தான் என்றால் மிகையாகாது. அறக்கருத்துக்கள் கலை வடிவங்களின் வாயிலாக மக்களுக்கு எடுத்துச் சொல்லப்பட்டிருக்க வேண்டும். இராமாயணத்தைப் படித்தறிந்து கொள்பவர்கள் குறைவாக இருந்த அக்காலத்தில் கற்றோர் அதைக் கதைப்பாங்குடன் பல்வேறு கதை வடிவங்களில் எடுத்துரைத்தனர். அதே கதைகள் சிற்பங்களாக்கப்படும்போது, அவை காண்போரின் கருத்தில் பதிந்தன எனலாம்.

சிற்பக்கலையில் இராமாயணம்

இராமாயணம் இந்தியமண்ணில் முதன்முதலாக ஜாதக இராமாயணச் செய்திகள் புத்த நினைவுச் சின்னங்களில் கல்வெட்டுக்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. (C.Sivaramamurthi, “The Ramayana in Indian Sculpture”, (Ed) V.Ragavan, “The Ramayana Tradition in Asia, P.636) கி.மு.2ம் நூற்றாண்டைச் சார்ந்த சுடுமண் சிற்பங்களில் இராமாயண நிகழ்வுகள் இடம்பெற்றமையை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

உணர்த்துகின்றன. (P.Banerjee Rama in Indian Literature Art & Thought, Volume one, P.172) துவக்கநிலையில் ஒற்றைச் சிற்பங்களை வடிக்கும் நிலை இருந்தது. பின்னர் கி.பி.5 நூற்றாண்டில் கடவுளர்களைக் குழுவாகப் படைக்கும் வழக்கம் நடைமுறைப்படுத்தப்பட்டது. குப்தர் காலத்தில்தான் இராமாயணக் காட்சிகள் சிற்பங்களில் இடம்பெறலாயின எனலாம். செங்கல்பட்டு மாவட்டம் மதுராந்தத்தில் உள்ள கோதண்டராமர் கோயில், முதல் பராந்தகச் சோழன் காலத்தில் கட்டப்பட்டது. (R.Champakalakshmi, Vaisnava Iconography in the Tamil Country, P.122) இதுவே காலத்தால் முற்பட்ட தமிழகத்து இராமர் கோயில் என்ற முடிவிற்கு வரமுடிகிறது.

சைவசமயத்தைச் சார்ந்திருந்த சோழர்கள் தங்களது கோயில்களில் வைணவசமயம் சார்ந்த இராமாயணச் சிற்பங்களைப் படைத்துள்ளனர். சோழர்கள் காலத்தை அடுத்து விஜயநகர நாயக்கரது காலத்தில் வைணவ சமயத்தின் செல்வாக்கு அதிகமானது. இவர்கள் அதிட்டவைகள் மண்டபச்சுற்றுக்கள் விமானம், கோபுரம் முதலியவற்றை அமைத்து இவற்றில் கற்களிலும் சுதைகளிலும் சிற்பங்களை அமைத்தனர்.

நாயக்கர் காலத்தில் நிலவிய வைணவச் செல்வாக்கின் விளைவுகளுள் ஒன்று அனுமன் வழிபாடு ஆகும். இக்காலக் கட்டத்தில் பேருருவம் கொண்ட அனுமன் சிலைகள் தமிழகத்தில் பல இடங்களில் தனித்து நிறுவப்பட்டன. தமிழ்நாட்டில் 10ஆம் நூற்றாண்டின் இறுதியில் அனுமனுக்கென்று சிலைகள் ஏற்படுத்தப்பட்டன. (R.Champakalakshmi, Op.cit., P.123) கோயில்களில் அனுமனின் சிற்பங்களுக்குத் தனிச்சிறப்பும் கொடுத்துள்ளதைக் காணமுடிகின்றது. பரிவார தெய்வமாக அன்றி அனுமனைப் பிரதான தெய்வமாகக் கொள்ளும் வழக்கமும் விஜயநகர நாயக்கர் காலத்தில் தொடங்கியது.

**தமிழகத்தில் இராமயணச் சிற்பங்கள்**

வைணவக் கடவுளாகிய திருமாலின் அவதாரங்களில் இராமன், கிருஷ்ணன், நரசிம்மன் ஆகிய மூவரும் குறிப்பிடத்தக்கவர்கள் இவ்வதாரங்கள் சிற்பக்கலையிலும் அதிக அளவில் செல்வாக்குப் பெற்றுள்ளன. இவற்றுள் இராமன் பற்றிய சிற்பங்களிலும், கலைகளிலும் இராமாயணக் கதை பெற்ற செல்வாக்கே காரணமாகிறது. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதி வரையிலும் இராமனுக்கு என்று தமிழகத்தில் தனிச்சிற்பங்களோ கோயில்களோ இல்லை (Kalpana S.Desai, Iconography of Vishnu, P.115.) நாயக்கர் காலத்தில்தான் இராமாயணத்தின் செல்வாக்கு பெருகியது. இதன்மூலம் கோயில்களின் விரிவாக்கமும் கலைகளின் வளர்ச்சியும் இருந்தன.

**இராம அவதாரச் சிற்பம்**

கண்ணன் எவ்வாறு பூபாரம் தீர்க்கப் பிறந்தானோ அப்படியே இராமனும் அறத்தினை நிலைநிறுத்தப் பிறக்கின்றான் என்ற வைணவ மதக்கோட்பாடு விஷ்ணு, நாராயணன், கிருஷ்ணன் ஆகிய மூவரையும் ஒருங்கிணைத்து தோன்றியது ஆகும். (R.Champakalakshmi Vaisnava Iconography in the Tamil Country, P.21.) காலப்போக்கில் அவதாரங்களின் எண்ணிக்கை அதிகமானதைக் காணமுடிகிறது. குலசேகராழ்வார் இராமனின் அவதாரச்

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

சிறப்பினைக் கூறி, இராமாயண நிகழ்வுகள் அனைத்தையும் பாடியுள்ளார். கம்பன் ஆழ்வார்களின் பாடல்களைக் கற்று அவர்களை அடியொற்றியே இராமனைத் திருமாலின் அவதாரமாகக் கருதியும் கடவுளாகப் போற்றியும் இராமாயணத்தை எழுதியிருக்கலாம். வால்மீகியில் அரசகுமாரனாக மட்டுமே இராமன் காட்டப்படுகிறான்.

செஞ்சி நாயக்கர்களால் செஞ்சியில் கட்டப்பட்ட வெங்கட்ரமணர் கோயில் தென்கோபுர நுழைவு வாயிலுள்ள கற்சுவரில் பாம்பணையின் மீது பள்ளி கொண்டுள்ள விஷ்ணுவோடு சீதேவிக்கு பூதேவியும் அமர்ந்துள்ளனர். அவர்களின் அருகில் இடது பக்கத்தில் பிரம்மனோடு மற்ற தேவர்கள் வணங்கி நிற்கின்றனர். (நி.ப.1) இக்காட்சி விஷ்ணுவிடம் தேவர்கள் இராவணனை அழிக்க வேண்டி முறையிடுவதாக உள்ளது. நாயக்கர் காலச் சிற்பங்கள் இதற்கு முற்பட்ட காலத்தில் செதுக்கப்பட்டதினும் சற்றே வேறுபட்டு திட்பநுட்பம் சிறிது குறைந்திருந்தாலும் அவற்றில் புராணக்கதை குறித்த செய்தியைத் தெளிவாகக் காட்டியதோடு மட்டுமின்றி பக்தி உணர்வினையும் பெற்று திகழ்கிறது.

தஞ்சாவூர் கலியுக வெங்கடேசப்பெருமாள் கோயில் கொடிமரம் மண்டபச்சுவரிலும் இக்காட்சி சிற்பமாக்கப்பட்டுள்ளது. இக்காட்சிகளைக் காணும்போது, கலை காவியக் கருத்துக்களையும் கடவுளின் அவதாரங்களையும் வெளிப்படுத்துகின்றது. (Benjamin Rowland, The Art and Architecture of India, Buddhist Hindu and Jain, P.195.) என்பதை உணரமுடிகிறது.

விஷ்ணு தேவர்களின் வேண்டுதலை ஏற்று மானுடவடிவில் நான்கு அம்சங்களுடன் அவதாரம் எடுக்கின்றார் என்கிறது வால்மீகி இராமாயணம். (வால்.பால, சர் 15 : 60 – 70, பக்.45-46) கம்பன், விஷ்ணுவை இராமனாகவும் ஆதிசேடனை இலக்குவணனாகவும், சங்கு, சக்கரம், முதலியவற்றை முறையே சத்ருக்கணன், பரதனாகவும் அவதரித்ததாகக் கூறுகின்றான். கம்பன், “பரம்பொருளே இம் மண்ணிடைப் பிறந்து தொழிற்படுகிறான் என்ற பழைய கருத்தை அப்படியே ஏற்றுக்கொண்டு செயல்படுத்துகிறான். (அ.ச.ஞானசம்பந்தன், கம்பன் புதியபார்வை பக்.161) காப்பியத் தொடக்கத்தில் கம்பன், அவதாரப்படலத்தில் மட்டுமின்றி, காப்பியத்தின் இறுதியிலும் இராவணனின் கூற்றாக இராமனை வேதமுதற்காரணன் என்று கூறுகிறான் (கம்.யுத்த.இரா.வதை. 134).

**இராமனின் திருமணக்காட்சி**

கும்பகோணம் இராமசாமி கோயில் முன் மண்டபத்தில் இராமன் சீதை திருமணக்காட்சி (நி.ப.2) உள்ளது. திருமணம் முடிந்தபின் இராமன் சீதையைத் தழுவி நிற்கும் காட்சி (நி.ப.3) திருமோகூர் காளமேகப் பெருமாள் கோயில் மண்டபத்தில் பெரிய உருவில் வைக்கப்பட்டுள்ளது. இச்சிற்பம் தூணில் இருந்தாலும் இராமன் மீது கொண்ட பக்தியின் காரணமாக வழிபடு சிற்பமாக அமைந்துள்ளது.

**காகாசுரன் கதை**

சுந்தரகாண்டத்தில், அனுமன் சீதையைக் கண்டு இராமனிடம் திரும்புகின்ற நிலையில், சீதை இராமனுக்குக் கூற வேண்டிய நிகழ்வுகளை அடையாளமாகக் கூறுகிறாள். அவ்வடையாளங்களில் ஒன்றாக காகாசுரன் கதை அமைகிறது. இந்நிகழ்வு சென்னைக்கருகில்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

எருமை வெட்டிப்பாளையம் கோதண்டராமர் கோயில் கருவறையில் (நி.ப.4) கதைகூறும் முகமாக வழிபாட்டில் அமைந்துள்ளது. இச்சிற்பத்தில் இராமன் வலது காலைத் தொங்கவிட்டு இடதுகாலை மடக்கியபடி இருக்க, சீதை இராமனின் மடியில் அமர்ந்திருக்கிறாள். சீதையின் மார்பை சயந்தன் காகவடிவில் வந்து புண்படுத்தியதால் மார்பில் ஏற்பட்ட காயத்தைத் தொடுவது போன்று இராமன் தனது கையில் சீதையை அணைத்து மார்பைத் தொட்டவாறு சிற்பம் காணப்படுகிறது.

இச்சிற்பநிகழ்வு வால்மீகி இராமயணத்தில் உள்ளவாறு படைக்கப்பட்டுள்ளது. கம்பன் இந்நிகழ்வினைச் சுட்டவில்லை சீதை அனுமனிடம், தான் சித்திரக்கூடத்தில் மலர் சோலைகளில் விளையாடி களைத்து இராமனுடைய மடியில் உட்கார்ந்தபோது, காக்கை தன் மார்பின் நடுவில் கொத்தியதாகக் கூறுகிறாள். இராமன் சினந்து தர்ப்பையிலிருந்து ஒரு புல்லை பிரம்மாஸ்திர மந்திரம் கூறி அனுப்பினான். அப்புல் விடாது துரத்தியதால் சயந்தன் இராமனிடம் சரணடைய இராமனும் மன்னித்து உயிரைப் பறிக்காது ஒரு கண்ணை மட்டும் பறித்துத் தண்டனை கொடுக்கிறான். (வால்.சுந்.சர்.38:35-162, பக். 153-157) இக்கதையினை பெரியாழ்வார் அறுத்ததும் ஓர் அடையாளம் என்று விளக்கமுற எடுத்துரைக்கிறார் (பெரியாழ்வார், பா.323) இச்சிற்பம் அன்பின் வெளிப்பாட்டினையும் பிறன்மனை நோக்குவது தவறு என்பதையும் காட்டும் வகையில், வழிபாட்டுத் தலமாக அமைந்துள்ளது.

**இராமன் அனுமனை தழுவிநிற்றல்**

அனுமன் மருந்துமலையைக் கொண்டு வந்ததால் இலக்குவணன் உயிர் பெற்றதை நினைத்து இராமன் அனுமனை அன்போடு தழுவுகிறான் **ஸ்ரீரங்கம்** கோயில், வைகுண்டம் வைகுண்ட நாதர் கோயில், (நி.ப.5) சேரன்மாதேவி இராமசாமி கோயில், நாங்குநேரி வானமாமலை கோயில், ஆகிய இடங்களில் இராமன் அனுமனைப் பாராட்டி தழுவி நிற்கும் சிற்பம் உள்ளது. பல கோயில்களில் அனுமன் சிறிய தனித்த சன்னதி மட்டுமின்றி வழிபடும் நிலையில் இடம்பெற்றுள்ளது.

**இராமன் சிவலிங்க வழிபாடு**

இராமன், சீதை மற்றும் அனுமன் சுக்கிரீவன் விபீடணனுடன் அயோத்தி செல்லும்போது தான் இராவணனைக் கொன்ற பிரம்மகத்தி தோசத்தைத் தீர்ப்பதற்கு அனுமனை லிங்கம் எடுத்துவரச் சொல்லி சேதுக்கரையில் லிங்கவழிபாடு செய்கிறான். திருபுவனம் கம்பகேஸ்வரர் கோயில் சுற்று மண்டபம் அதிட்டானத்தில் இராமனும் சீதையும் சிவலிங்கத்தை வழிபடும் சிற்பம் உள்ளது. இதே காட்சி காஞ்சிபுரம் காமாட்சியம்மன் கோயில் சுற்றுமண்டப அதிட்டானத்திலும் உள்ளது. இச்சிற்பக் காட்சியில் இலக்குவணனும் அனுமனும் உடன் இருக்கின்றனர். (நி.ப.6)

இராமன் லிங்க வழிபாடு செய்வதும், இராமனும் சீதையும் லிங்கவழிபாடு செய்வதும் என சிற்பங்கள் விருத்தாச்சலம் விருத்தகிரீஸ்வர்ர் கோயில், விரிந்திபுரம் மார்க்கபந்து கோயில், இராமேஸ்வரம் கோயில் காஞ்சிபுரம் ஏகாம்பரேஸ்வரர் கோயில், சேரன்மாதேவி இராமசாமி கோயில் ஆகிய கோயில்களில் தூண் சிற்பமாக உள்ளது. இச்சிற்பக்காட்சி இரங்கநாத

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com
இராமாயணத்தை அடியாற்றி அமைக்கப்பட்டுள்ளது. (இரங்க யுத்த பக். 484 – 485) இந்நிகழ்வினை வால்மீகியும் கம்பனும் படைக்கவில்லை.

இராமன் சீதையை மீட்டு அயோத்தி திரும்பும்போது, சேதுஅணையை சீதைக்குச் காட்டுகிறான். அப்போது இராவணன் பத்து தலைகளுடன் தோன்றி அழுவது போன்று தோன்றுகிறது. இராமன் விபீடணனிடம் காரணம் கேட்க, இராவணைக் கொன்றதால் ஏற்பட்ட பிரம்மகத்தி தோசத்தை விலக்க பிரம்மனை வேண்டுமாறு கூறுகிறான். இராமனும் பிரம்மனை வேண்ட, பிரம்மனும் இராமனிடம் இராவணனுக்கு முக்தி தருமாறும் லிங்கம் அமைத்து வழிபடுமாறும் கூறுகிறான். இராமன் அனுமனிடம் லிங்கம் அமைத்து வழிபடுமாறும் கூறுகிறான். இராமன் அனுமனிடம் லிங்கம் கொண்டுவர அனுப்புறான். அனுமன் குறித்த நேரத்தில் வராதிருக்க, இராமன் சீதையை மணலினால் லிங்கம் செய்யக்கூறி பூசை செய்கிறான். இச்சிற்பம் சைவம் மற்றும் வைணவத்தை இணைத்துகாட்டுவதாக உள்ளது. இச்சிற்பம் தூண்களில் இருந்தாலும் வழிபாட்டிற்கு முக்கியத்துவம் கொடுத்த வகையில் உள்ளது.

**இராமன்பட்டாபிசேகம்**

இராமன் சீதையுடன் அயோத்தி சென்ற பிறகு, வசிட்டரால் பட்டம் சூட்டப்பட்டு அரசு ஏற்கிறான். இக்காட்சி சிற்பமாக தமிழகத்தில் பலகோயில்களில் கற்சிற்பமாகவும் சுதை சிற்பமாகவும் அமைந்து வழிபாட்டிற்கான முக்கியத்துவத்தைப் பெற்றுள்ளது. திருக்குறுங்குடி அழகிய நம்பிராயர் கோயில் சித்திரகோபுரத்தின் வெளியே வலதுபக்கம் சீதை அமர்ந்திருக்க இராமனுக்கு இருபுறமும் வசிட்டரும் விசுவாமித்திரரும் நீர்வார்க்க பரத சத்ருக்கணர் சாமரம் வீசிக்குடை பிடிக்க இலக்குவணன் வில்லுடன் நிற்கிறான். மேல்பகுதியில் தேவர்கள் மலர்தூவுகின்றனர். வானரங்கள் வணங்கியபடி உள்ளனர். (வை.மு.கோ., கம். யுத்த. திரு.சூ.பட., பா.4317, ப.959). இக்காட்சி தமிழகத்தில் மன்னார்குடி இராஜகோபாலசுவாமி கோயில், லால்குடி சப்தகிர்ரீஸ்வரர் கோயில், ஸ்ரீரங்கம் கோயில் சென்னை, பார்த்தசாரதி கோயில், மதுரை கூடலழகர் பெருமாள் கோயில் (நி.ப.7) போன்ற பலகோயில்களில் நாயக்கரது கலைப்பாணியில் அமைந்துள்ளது.

**தொகுப்புரை**

இராமாயணம் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்த வாய்மொழிக் கதைகளாகவும், பழங்கதைகளாகவும் இருந்து வந்துள்ளது. கி.பி. ஏழாம் நூற்றாண்டின் தொடக்கமே பக்தி சைவ வைணவ சமயங்கள் இக்காலத்தில்தான் தோன்றி வளர்ந்தன. சங்க காலத்திற்குப் பின் சமய உலகில் ஏற்பட்ட வளர்ச்சியே கோயில்கள் புராண இதிகாசங்களுடன் தொடர்பு கொண்டிருந்தது எனலாம். குப்தர்கள் காலத்தில்தான் இராமாயணசிற்பங்களை அவர்களின் சிற்பங்கள் வாயிலாக அறியமுடிகின்றது. அசோகர் காலத்தில்தான் கற்சிற்பங்கள் முதன் முதலாகக் கிடைக்கின்றன. கோயில்கள் நிகழ்த்துக்கலைகள் நிகழும் அரங்காக இருந்தன. கோயில் சிற்பங்களில் இராமாயணம் இடம்பெற்றது. கோயில்களில் விமானம், கோபுரம்,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

மண்டபங்கள், தூண்கள், முதலியவற்றை கலை அழகுடன் சிற்பங்களை இடம்பெறச் செய்தனர். தமிழகத்தில் நாயக்கர்காலத்தில் இராமாயணத்தின் செல்வாக்கு பெருகியது. கோயில்களில் பல இராமாயணச் சிற்பங்கள் இருந்தாலும் அவதாரச்சிறப்பு, திருமணக்காட்சி, காகாசுரன் நிகழ்வு, இராமன் அனுமனைப் பாராட்டித் தழுவியிருத்தல், அனுமன் தனித்தசிற்பம், இராமன் சிவலிங்க வழிபாடு செய்தல், இராமன் பட்டாபிசேகம் போன்ற நிகழ்வுகளின் சிற்பங்கள் மக்களிடையே வழிபாட்டிற்கான முக்கியத்துவம் பெற்று அமைந்துள்ளன.

**நிழற்படங்கள்**



**1. திருமாலைத் தேவர்கள் வேண்டுதல்**



**2. இராமன், சீதை திருமணம்**



**3. இராமன் சீதையை தழுவி நிற்றல்**



**4. காகாசுரனால் புண்பட்ட சீதையுடன் இராமன்**



**5. இராமன் அனுமனைத் தழுவி நிற்றல்**

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com



6. இராமன் லிங்க வழிபாடு செய்தல்



7. இராமன் பட்டாபிசேகம்

**துணைநூற்பட்டியல்**

[1] கோபால கிருஷ்ணமாச்சாரியார், கம்பராமாயணம், பாலகாண்டம் (ஏழாம் பதிப்பு), வை.மு.கோபால கிருஷ்ணமாச்சாரியார் கம்பெனி, சென்னை, 1964.

[2] ___, கம்பராமாயணம், சுந்தரகாண்டம் (ஐந்தாம் பதிப்பு), வை.மு.கோபால கிருஷ்ணமாச்சாரியார் கம்பெனி, சென்னை, 1964.

[3] ___, கம்பராமாயணம், யுத்தகாண்டம் (பிற்பகுதி), (ஐந்தாம் பதிப்பு), வை.மு.கோபால கிருஷ்ணமாச்சாரியார் கம்பெனி, சென்னை, 1967.

[4] நிவாஸய்யங்கார் (உ.வே.சி.ஆர்), ஸ்ரீமத் வால்மீகி இராமாயணம், (தமிழ் வசனம் – இரண்டு பாகங்கள்) (நான்காம் பதிப்பு), பாகம் – 1, பாகம் – 2 தி லிட்டில் ப்ளவர் கம்பெனி, சென்னை, 1963.

[5] அருணாசலம் பா. பக்தி இலக்கியம் ஓர் அறிமுகம், பாரி புத்தகப் பண்ணை, சென்னை – 108. முதற்பதிப்பு – 2002.

[6] இராஜாஜி, பக்தி நெறி, பாரதி பதிப்பகம், சென்னை, 1961

[7] சீனிவாசன், பி.ஆர்., சங்கரன், எஸ் (தமிழாக்கம்), கோயிற் கலையும் சிற்பங்களும், கலைஞன் பதிப்பகம், சென்னை, 1965.

[8] செகத்ரட்சகன் (உ.ஆ), நாலாயிர திவ்யப்பிரபந்தம் ஆழ்வார்கள் ஆய்வு மையம், சென்னை, 2002.

[9] ஞானசம்பந்தன், அ.ச., கம்பன், புதிய பார்வை, கம்பன் கழக வெளியீடு, சென்னை, 1984.

[10] Banerjee, P., Rama in Indian Literature Art and Thought, Volume I & II, Sundeep Prakashan, Delhi, 1986.

[11] Benjamin Rowland, The Art and Architecture of India – Buddhist, Hindu and Jain, Penguin Books, London, 1953.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

[12] Champakalakshmi, R., Vaisnava Iconography in the Tamil Country, Orient Longman Limited, New Delhi, 1981.

[13] Jayantika Kala, Epic Scenes in Indian Plastic Art, Abhinav Publications, New Delhi, 1988.

[14] Kalpana S. Desai, Iconography of Visnu (In Northern India, Upto the mediaeval period), Abhinav Publications, New Delhi, 1973.

[15] Sivaramamurti, C., Indian Sculpture, Allied Publishers, Madras, 1961.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**ஜெயஸ்ரீ. "இராமயண சிற்பங்கள் உணர்த்தும் பக்தி."** *தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 3, சிற.இதழ் 3, தொகுதி 3, ஜனவரி 2021, பக்.510-518. டிஒஐ: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.076**

**Cite this Article in English (MLA 8 Style) as:**
**Jeyashree. "Realizing Devotion in Ramayana Sculptures."** *International Journal of Tamil Language and Literary Studies*, Vol. 3: Special Issue - 3, Vol. 3, January 2021, pp.510-518. DOI: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.076**

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். /I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.



தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

# ஆழ்வார்கள் நாயன்மார்கள் பக்தியில் புலனாகும் தெய்வீக அன்பு

# Divine Love in the Devotion of Azhwars and Nayanmars

**முனைவர் பி.ஸ்ரீதேவி,** தமிழ்த்துறை தலைவர் (சுயநிதி) ஸ்ரீ எஸ். இராமசாமி நாயுடு ஞாபகார்த்தக் கல்லூரி, சாத்தூர்.
**Dr. P. Sridevi,** Head, Department of Tamil S/F, Sri S. Ramasamy Naidu memorial College, Sattur.
ORCiD: https://orcid.org/0000-0001-5880-8668
DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.077

## Abstract

*Bhakti, the unconditional love offered by the devotees to their God is the love of higher value. Believers and seekers of God intend to reach such higher state of mind where God is prevalent in everything and realize material things no more exist. Fanaticism ends and spirituality blossoms there. Azhwarkal and 'Nayanmarkal' of Tamil Bhakthi tradition are the saints who attained higher level of Bhakthi and stand as a archetypal models to attain the bliss of Bhakthi. Classical Tamil literatures possess rich Bhakthi literary texts that stand as testimonies to the Bhakthi of 'Vaishnavite' Azhwars and Saivite 'Nayanmars'. Their unconditional deep love for God sets standards for a yearning devotee. This research paper studies the divine love in their Bhakti.*

**Keywords:** Bhakti, Azhwar, Nayanmar, divine love, Saivam, Vaishnavism

### முன்னுரை

இன்றைய காலச்சூழலில் பக்தி என்னும் நிலையை அடைய அனைவரும் ஆசைப்படுகிறார்கள். 'பக்தி' என்பது ஆழ்ந்த அன்பில் தான் உள்ளது என்பதைப் புரிந்து கொண்ட யாரும் மதத்தின்பால் வெறிகொண்டு ஒருவரையொருவர் துன்பப்படுத்த நினைக்க மாட்டார்கள். அத்தகைய உண்மையான, உன்னதமான அன்பை வெளிக்காட்டி இறைவனே எல்லாம் என்று வாழ்ந்து காட்டிச் சென்றவர்கள் நம் ஆழ்வார்களும் நாயன்மார்களுமே. முறையான பக்தி மார்க்கத்தைக் வைத்து வாழ்ந்தனர். எந்தவொரு நிபந்தனையுமின்றி இறைவனின் மீது கொண்ட மாறாத அன்பு, வெறும் வாயளவில் இல்லாமல் இதயப்பூர்வமாக அமையவேண்டும் என்பதே ஆழ்ந்திருந்த தெய்வீக அன்பைப் பார்ப்பதாய் இக்கட்டுரை அமைகின்றது.

இறைவனை அடைதல் என்னும் உன்னதமான நிலைக்கு அழைத்துச் செல்லும் ஒப்பற்ற பணியினை செய்தவர்கள் ஆழ்வார்களும் நாயன்மார்களுமே. சிவபெருமானை முழுமுதற் கடவுளாகக் கொண்டவர்கள் நாயன்மார்கள், என்றும் திருமாலை முழுமுதற் கடவுளாகக் கொண்டவர்கள் ஆழ்வார்கள் என்றும் போற்றப்பட்டனர். 63 நாயன்மார்களும் 12 ஆழ்வார்களும் சேர்ந்து நாட்டின் இரு கண்களாக இருந்து மக்களை நல்வழிப்படுத்தியுள்ளனர் என்பது கண்கூடு. இந்து மதத்தின் இரண்டு பிரிவுகளாக சைவம் வைணவம் இரண்டும் இருந்திருந்தாலும் அவர்களின் பக்தி இழுத்துச் சென்றதென்னவோ இறைவன் என்னும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

பெருங்கடலிடம் மட்டுமே. அவர்களின் ஈடு இணையற்ற பக்தி நிலையினை இங்கு காண்போம். பக்தி உண்மையான அன்பின் வெளிப்பாடாய் அமைந்த தன்மையினை எடுத்துக் காட்டுவதாய் இக்கட்டுரை அமைகின்றது.

**சைவ வைணவ சமயங்கள்**

சைவ வைணவ சமயங்களின் தாக்கத்தினால் நம் சமுதாயத்தில் நல்விதமான பல மாற்றங்கள் ஏற்பட்டிருந்தன. பல்லவர் காலத்தில் இருந்தே இவ்விரு சமயங்களும் மக்களிடையே ஈர்ப்பை ஏற்படுத்தியிருந்தது. பாமர மக்களும் பக்திநெறியில் திளைக்கும் வண்ணம் ஆழ்வார்களும் நாயன்மார்களும் பக்தி நெறியினை, சமயக்கருத்துகளை பரப்பி வந்தனர்.

பல்லவர் காலம் சோழர் காலத்தை எட்டும் பொழுது பக்தி இலக்கியமாக மக்களிடையே நல்ல மாற்றத்தையும் உயர்ந்த நிலையையும் கொண்டு வந்திருந்தது. சோழ வேந்தர்கள் சைவம், வைணவம் என்ற வேறுபாடின்றி இரண்டு சமயக் கோயில்களுக்கும் அவர்களின் மடங்களுக்கும் அவர்கள் செய்த தமிழ்ப்பணிக்கும் அதிகம் தானம் செய்து முன்னுரிமை வழங்கியுள்ளனர். சைவ சமயத்தை அதிகமாக நாடிய மன்னர்களே அதிகமாகக் காணப்பட்டாலும் இரு சமயத்தவரிடையே பூசல்கள் பல தோன்றினாலும் நாட்டில் ஒருமைப்பாட்டை நிலை நாட்டுவதில் அதிக முக்கியத்தவம் காணப்பட்டது என்பதுவே உண்மை.

**சைவ வைணவ மதங்களின் செல்வாக்கு**

சைவ வைணவ சமயங்கள் பக்தி இயக்கமாக மாறி மக்களிடையே செல்வாக்கு பெற்றதற்கு முக்கியக் காரணம். சமயங்கள் மனித மனதில் உள்ள தெய்வீகத்தன்மையை வெளிக்கொண்டு வரும் நிலையை தூண்டுவிக்கிறது. இந்த தெய்வீகத்தன்மையை உணர்ந்து அதில் முழு இன்பம் அடைந்து மக்கள் அதன் வழியில் செல்ல நினைத்தார்கள் அந்த நிலையே சைவ வைணவ மதங்கள் மக்களிடையே செல்வாக்கு பெறுதற்கு முக்கியக் காரணம் எனலாம். நம் சமயம் பக்தி இயக்கமாக சைவம், வைணவம் என்னும் இரு கிளைகளாக மக்களிடையே செல்வாக்குப் பெற்றது. பக்தி இயக்கத்தை துணைக் கொண்ட சைவமும் வைணவமும் புறச்சமயங்களான சமண பௌத்தத்தை தோற்கடித்தன. ஆயின் சமண பௌத்த சமயங்களின் ஆதிக்கத்திற்கு எதிராகத் தோன்றியது சைவமும் வைணவமும் என்பவர் பலர். நம் சமயம் தொன்மையான சமயம் என்று கூறும் பொழுது பிற சமயத்தவர்களின் ஆதிக்கம் அதிகம் இருந்த காலத்து அதனை ஏற்க ஒவ்வாத நம் மக்கள் அதிகமாக சைவ வைணவ மதத்தின்பால் ஈர்ப்பு கொண்டு இதனை உணர ஆரம்பித்துள்ளார்கள் என்றே கூறலாம்.

**இன்பமான இசையில் காலையும் மாலையும் தினந்தோறும் கோவில்களிலும் மடங்களிலும் நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக மக்களைப் பக்திப் பாடல்களைப் பாடவைத்து இப்பாடல்களுக்கேற்ற ஆடல்களையும் கூத்துகளையும் உருவாக்கி கலை**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com


> **இலக்கியங்களையும் எழுத்தோவியங்களையும் சிற்பங்களையும் வண்ணச் சித்திரங்களையும் சைவர்களும் வைணர்களும் உருவாக்கினர் (முத்தையா கே. தமிழ் இலக்கியங்கள் கூறும் வர்க்க சமுதாயம் சிகரம் வெளியீடு சென்னை இரண்டாம் பதிப்பு 1981)**

எனும் முத்தையா அவர்களின் கருத்தும் இங்கு சிந்திக்கத்தக்கதாய் உள்ளது.

**இறை பக்தி**

ஆழ்வார்களும் நாயன்மார்களும் இறைவனுக்கும் தங்களுக்கும் இடையில் உள்ள உறவை உணர்ந்து அதனுடன் ஒன்றி இன்பம் எய்தினார்கள். அனுதினமும், இறைச்திந்தனையுடனையே வாழ்ந்து வந்தவர்களுக்கு நடப்பவையெல்லாம் இறைவன் நடத்துவனவாகவே இருந்தது. ஆதலால் தம் வாழ்வில் நிகழும் அனைத்து நிகழ்வுகளையும் ஏற்றுக்கொண்டனர். இறைவன் என்ற உணர்வை தன்னிலைப்படுத்தி, இறைவனுடன் உறவுகொண்டாடி ,இறைவனோடு தன்முழு உணர்வும் ஒன்றும் படி தன் அன்றாட வாழ்வை நடத்திச் சென்ற ஆழ்வார்களும் நாயன்மார்களுமே பக்தியில் சிறந்த அனுபவம் பெற்றவர்கள். இறைவன் என்பவர் தன் உள்மனதில் குடி கொண்டிருக்கும் நிலையான இன்பம் என்பதை உணர்ந்தவர்கள். அவ்வின்பத்தை அனுதினமும் அடைய எண்ணி தம் வாழ்நாள் முழுவதையும் செலவிட்டனர்.

அவை உண்மையான அன்பினால் மட்டுமே கிடைக்கப் பெறும் என்பதனையேஇ நெஞ்சில் அன்பில்லாமல் செய்யப்படும் பூசனைகள் பொருளற்றவை அப்படிச் செய்வதால் இறையருளைப் பெறமுடியாது என்ற உறுதிப்பாட்டைத் திவ்வியப் பிரபந்தம் காட்டுகிறது. இறைவனை மட்டுமே அன்புடன் நெஞ்சில் நினைத்து மனம் முழுதும் இறைஉணர்வோடு வாழ்வதே சிறந்த வாழ்வு.அப்படி வாழும் வாழ்வில் எது நடந்தாலும் இறைவனின் செயல் என்றே எண்ணத் தோன்றும். மனம் முழுவதும் எந்த அழுக்கும் குடிகொள்வதில்லை. இதற்கு உதாரணமாக வாழ்ந்தவர்கள் ஆழ்வார்களும் நாயன்மார்களுமே. அன்போடு இறைவனை எண்ணுதல் பூசை செய்தல் தொழில் செய்தல் என அனைத்தையுமே தன் வாழ்நாளில் கடைபிடித்துக் காட்டியுள்ளனர்.

**அன்பும் கடவுளும்**

கடவுள் உன்னதமான அன்பில் நிறைந்திருப்பவர் என்பதுவே ஆழ்வார் நாயன்மார்கள் வாழ்வியலில் இருந்து நமக்குப் புலனாகும் செய்தி அவர்கள் அனைவருமே இறைவனின் மீது தீராத காதல் கொண்டவர்கள் என்பது மட்டுமே நிலைத்த உண்மை. வறுமையில் குடும்பமே வாடிய போது, தன் மனைவியின் திருமாங்கல்யத்தை விற்று வரச் சென்றவர் குங்கிலியக் கலயநாயனார். அதனை விற்று அரிசி வாங்க எண்ணியவர். அனுதினமும் இறைவனுக்கு, குங்கிலியம் வாங்கி இறைத்தொண்டு செய்தார். தன்னிடம் வேலை பார்த்தவரே சிவனடியாராக மாறி வந்தபின் அவரின் பாதங்களையும் கழுவி விட்டவர் கலிகம்பர். தான்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

வேட்டையாடிய பொருளையே இறைவனுக்குப் படைத்து கடைசியில் தன் கண்ணையும் சேர்த்து இறைவனுக்கே படைத்த அதீத அன்பாளன் கண்ணப்பர் மீன் பிடிப்பதைப் தொழிலாகக் கொண்டு தான் பிடித்த மீனில் தினமும் ஒன்றை இறைவனுக்காகப் படைத்தவர் அதிபத்தர். தங்கமீனாக ஒன்றேயொன்று வந்த போதும் அதனையும் இறைவனுக்கே படைத்த உத்தமர். திருக்கோவிலொன்றை மனத்திலே சிவப்பெருமானுக்காக கட்டி இன்புற்றவர் பூசலார். சிவபெருமானுக்குச் சந்தனக்காப்பு அளிப்பதற்குச் சந்தனக்கட்டை கிடைக்காத காரணத்தால் தன் முழங்கையைச் சந்தனப்பாறையில் தேய்த்தவர். விளக்கிடுவதற்கு எண்ணெய் கிடைக்காத காரணத்தால் தன் கழுத்தை அறுத்து உதிரத்தை வார்க்க முயன்றவர் கலியர். மகனைப் பாம்பு தீண்டியதை மறைத்து சிவனடியாருக்கு அமுது படைத்த அப்பூத்தியடிகள். இப்படி ஒவ்வொரு நாயன்மாரும் இறைவன் மீது கொண்ட அன்பின் வெளிப்பாடு நம்மை வியக்கச் செய்வதாய் உள்ளது.

அன்பே கடவுள் பக்தியாய் அமைகிறது. அன்பையும் சிவத்தையும் ஒன்றாய் பாவித்த திருமூரரின் வாக்கு நம்மை இங்கு சிந்திக்க வைப்பதாய் உள்ளது. அன்பின் காரணமாய் செய்யும் தொண்டில் இன்புற்று இறைவனையே முழுமையாய் உளமார விரும்பி ஒவ்வொரு செயலையும் செய்த நாயன்தார்களின் அன்பு நம் வாழ்வில் நாம் அனுதினமும் கடைபிடிக்க வேண்டிய பாடம் என்றே கூறலாம்.

**பச்சைமா மலைபோல் மேனி**
**பவளவாய் கமலச் செங்கண்**
**அச்சுதா அமர ரேறே ஆயர்தம்**
**கொழுந்தே என்னும்**
**இச்சுவை தவிர யாம் போய் இந்திரலோக மாளும்**
**அச்சுவை பெரினும் வேண்டேன்,**
**அரங்கமா நகருளானே (திருப்பல்லாண்டு)**

எனப் பாடிய தொண்டரடிப் பொடியாழ்வாரின் வழி நின்று இறைவனை மட்டுமே சிந்தித்து வாழ வேண்டும் என்ற எண்ணமுடையவர்களாக வாழ்ந்தவர்கள் ஆழ்வார்கள். அவர்கள் எடுத்தாண்ட கருத்துகள் யாவும் புராணங்களின் சாரமே எனலாம். முழு முதற்கடவுளாய் திருமாலை தமது நண்பனாகப் பாவித்துப் பாசுரங்கள் பல பாடியவர் திருமழிசை ஆழ்வார். உலக ஆசாபாசங்களில் இருந்து விலகி வாழ்ந்தவர் நம்மாழ்வார். தனது ராஜ வாழ்க்கையைத் துறந்து திருமாலின் அடியவர்க்காகவே வாழ்ந்தவர் திருமங்கை ஆழ்வார். திருமாலின் அடிமையாக தன்னை பாவித்துக் கொண்டு, திருமால் அடியவர்களின் காலடி மண்ணை தம் தலையில் இட்டுக் கொண்டவர் தொண்டரடிப்பொடியாழ்வார். கண்ணனை குழந்தையாக பாவித்து இவர் பாடிய திருப்பல்லாண்டு போற்றுதற்குரியது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com


திருவரங்க பெருமானையே தன் கணவனாக பாவித்து அவரை அடைவதையே தம் வாழ்நாள் இன்பமாகக் கருதி அவளுக்கு பரிசாக திருமாலை அவரை மணந்து கொண்டார். கண்ணனைக் குழந்தையாகவும், தன்னை யசோதை யாகவும் பாவித்து பாடியவர் குலசேகர ஆழ்வார். ஆண்டாளைப் போல அரங்கனிடம் அன்பு வைத்து அவரை நினைத்து எம்பெருமான் உடன் கலந்தவர் திருப்பாணாழ்வார். இவ்வாறாக திருமாலின் மீது அன்பு பூண்டு, இறைவன் இருக்கும் இடங்களில் எல்லாம், அவர் அவதரிக்கும் இடங்களிலெல்லாம் வாழ ஆசைப்பட்டார்கள் ஆழ்வார்கள். இறைவனிடம் மாறாத அன்பும், பிடிப்பும் இருந்தால் போதும் என்று வாழ்ந்தவர்கள் தான் ஆழ்வார்களும் நாயன்மார்களும்.

**முடிவுரை**

இறைவனை நண்பனாக, அம்மையாக, அப்பனாக, காதலனாக, காதலியாக என்று ஏதாவது ஒரு விதத்தில் பாவித்து தங்களது அன்பை வெளிப்படுத்தி அவரையே சிக்கெனப் பிடித்துக் கொண்டு ஆழ்வார்களும் நாயன்மார்களும் வாழ்ந்த வாழ்க்கை அவர்களுக்கு நிலைத்த இன்பத்தை தேடித் தந்தது. எல்லாம் இறை மயமே இனி எதற்கு பயமே, என்று இறைவனை முழுமையாக உணர்ந்து பக்தி செய்து அவர்கள் வாழ்ந்த வாழ்வு நம் அனைவருக்கும் சிறந்த எடுத்துக்காட்டு எனலாம்.

**துணை நூல் பட்டியல்**


[1]சுவாமி பாஸ்கரானந்தர், இந்து மதத்தின் மையக்கருத்து, ஸ்ரீ ராமகிருஸ்ணமடம் அச்சகம், மயிலாப்பூர், சென்னை.

[2]சீனிவாசன் ம.பெ, வைணவ இலக்கிய வகைகள் திவ்வியப்பிரந்த ஆய்வு, தேவகி பதிப்பகம், புதூர்ச் சாலை செந்தமிழ் நகர், சிவகங்கை- 623560.

[3]இராமகிருஷ்ணன் எஸ், சமய வாழ்வில் வடக்கும் தெற்கும், நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், சென்னை- 98.

[4]கோவிந்தராச முதலியார் கா.ர, ஆழ்வார்கள் வரலாறு, திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிமிடெட், சென்னை.

[5] ஜகந்நாதன் கி.வா., நாயன்மார்கதை, அமுதநிலையம் பிரைவேட் லிமிடெட், சென்னை-1



**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**ஸ்ரீதேவி. "ஆழ்வார்கள் நாயன்மார்கள் பக்தியில் புலனாகும் தெய்வீக அன்பு."** *தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 3, சிற.இதழ் 3, தொகுதி 3, ஜனவரி 2021, பக். 519-524. டிஓஐ: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.077**

**Cite this Article in English (MLA 8 Style) as:**

**Sridevi. "Divine Love in the Devotion of Azhwars and Nayanmars."** *International Journal of Tamil Language and Literary Studies*, Vol. 3: Special Issue - 3, Vol. 3, January 2021, pp.519-524. DOI: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.077**


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பிடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

# ஆலயங்களின் இசைக்கருவியின் பங்கு

# The Role of Classical Instruments in Temples

**செ. ஹரிகரன்**, உதவிப்பேராசிரியா, இசைத்துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.
**S. Hariharan,** Assistant Professor, Department of Music, Annamalai University, Chidambaram
ORCiD: https://orcid.org/0000-0003-1533-740X
DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.078

## Abstract

*Prayer without music is equal to a corpse without life. Ancient Tamil people channelized song, music and dance exclusively for praying God. Temples are the paramount icons of Indian Culture. We devotedly enter into temple to taste great music, and to experience visual treat of dance and the bliss of seeing the God. Moreover singer, musicians and dancers have been appointed permanently in each and every temple. These artists serve for God whole-heartily generation after generation. The present essay aims to explain in detail about their service and the role of music in Temples.*

**Keywords:** Classical Instruments, Temples, Tamil Culture, Devotion, Music Artists

### முன்னுரை

'ஓசை ஒலியெல்லாம் ஆனாய் நீயே' என்றார் அப்பர் பெருமான். 'ஏழிசையாய் இசைப்பயனாய்' என்று போற்றினார், சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள். 'நாத ஸீதாரஸம்பிலனு நராக்ருதியாயே' என்று நாதமே வடிவெடுத்து, ராமனாக வந்ததாகத் தியாகராஜ ஸ்வாமிகள் பாடினார். இறையும் இசையும் ஒன்றெனக் கருதினர், நம் முன்னோர். கோவிலின் ஒலிவடிவமே இசை, இசையின் வரிவடிவமே கோவில், தான் வழிபடத் தொடங்கிய ஒவ்வொரு இறை வடிவத்தோடும், ஒரு இசைக்கருவியைச் சேர்த்தே வழிபட்டான் மனிதன். வாணியின் கரத்தில் வீணை: கண்ணனின் கையில் வேங்குழல்: முக்கண்ணனின் கையில் உடுக்கை இவ்வாறு கூறிக்கொண்டே போகலாம். இது இந்துக்களிடம் மட்டும்தான் என்பதற்கில்லை. 'லையர்' என்ற இசைக்கருவியைத் தோற்றுவித்தது, அப்போலோ எனுந் தேவதையென்பது, கிரேக்கர்களின் நம்பிக்கை. மௌபொடேமியாவில், 'இய' என்னும் தேவதைக்குப் 'பலக்' என்ற முழவுக்கருவியும், 'இஷ்தர்' எனும் தேவதைக்கும், அவளுடைய கணவனுக்கும், மெல்லிய நாதத்தோடு கூடிய குழற்கருவியென்றும் இணைக்கப்பட்டிருந்தன.

### இறைவழிபாட்டில் இசை

இசை வழிபாடில்லாத இறை வழிபாடு, சீவனற்ற சடலமே எனக்கருதிப் பாடல், இன்னியம், ஆடல் முதலிய கலைகளை எல்லாம், இறை வழிபாட்டுக்கென்றே முறைமைப்படுத்தி வைத்தான் தமிழன். இக்கலைகள், ஆலயங்களில்

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

கட்டாயமாக்கப்பட்டிருந்தன. அவை வெறும் பொழுதுபோக்குச் சாதனங்களாக மட்டுமே கருதப்படவில்லை. இறைவனுக்குரிய பதினாறு வகை உபசாரங்களில், பதினான்காவது அங்கமாக இக்கலைகளைக் கொடுக்கிறது, வைணவ ஆகமமான, 'ஸ்ரீ ப்ரச்ன ஸம்ஹிதா'. மற்றொன்றையும் குறிப்பிட வேண்டும். ஆலயங்கள், பெரும் கல்விச் சாலைகளாகவும் திகழ்ந்திருக்கின்றன. வேதங்கள், ஆகமங்கள், சாத்திரங்கள் போன்றவற்றின் வகுப்புகள் அங்கேதான் நடத்தப்பெற்றன. இசை, நாட்டியம் போன்ற கலைகளும் அங்கேதான் பரம்பரையாகப் பயிலப்பட்டும், போற்றிப் பாதுகாக்கப்பட்டும் வளர்ந்து வந்துள்ளன.

தமிழ்ச் சமுதாயததின் நல்வாழ்வில் அக்கறை கொண்ட நிலையங்களாக, ஈடிணையற்ற இந்தியக் கலாச்சாரத்தின் மையங்களாக விளங்கியவை ஆலயங்கள்தாம். சிறந்த இசையினைச் சுவைக்கவோ, உயர்வான நாட்டிய வகைகளைக் கண்டின்புறவோ, கோவில்களைத்தான் நாடிச் செல்ல வேண்டியிருந்தது. அனேகமாக ஒவ்வொரு கோவிலிலும், பாடுவார், இன்னியம் வல்லார், ஆடற்கணிகையர், திருப்பதியம் விண்ணப்பிப்பார், நட்டுவர் புரிவார் போன்ற பல்வேறு கலைஞர்கள், நிரந்தரச் சேவைக்காக நியமிக்கப்பட்டிருந்தனர். அவர்களுடைய கலைகளும், ஆலயத்தொண்டும் பரம்பரையாக வளர்ந்து வந்தன. அவர்களுக்கு மாதாந்திர அல்லது வருடாந்திர ஊதியம் வழங்கப்பட்டுக் குடியிருக்க வீடும், பயரிட நிலமும் அளிக்கப்பட்டிருந்தன. உவச்சக்காணி, நட்டுவக்காணி, வீணைக்காணி, மேளக்காரக்காணி போன்ற சொற்களால் இவ்வித மானியங்களைப் பற்றிக் கல்வெட்டுக்கள் குறிக்கின்றன. தஞ்சையை ஆண்ட முதலாம் இராஜராஜ சோழப் பேரரசன், கொட்டி மத்தளம், உடுக்கை, வங்கியம் போன்ற இசைக்கருவியாளர், நடன மாதர், திருப்பதியம் விண்ணப்பிக்கும் ஓதுவா மூர்த்திகள் போன்ற கலைஞர்களுக்கு நிவந்தமளித்த செய்திகளைக் கல்வெட்டுக்களால் அறிகிறோம்.

இவ்விதக் கலைஞர்களுக்கு, வெவ்வேறு காலகட்டங்களிலும், எத்தனையோ மன்னர்கள், பேராதரவளித்து வளர்த்திருக்கின்றனர். நெல்லை அளந்து கொடுக்கும் அளவைக்கே, 'ஆடவல்லான்' என்ற பெயரினை இராஜராஜன் இட்டது, அவனுக்கு இசையிலும், ஆடலிலும் உலகம் யாவையும் தன் ஆடலால் ஆட்டுவிக்கும் இறைவனிடமிருந்த, பக்தியையும், அக்கலைகள் ஆலயங்களில் பெற்றிருந்த முன்னுரிமையையும் நமக்கு உணர்த்துகின்றன.

**ஆலய வழிபாட்டின் இசைக் கருவிகள்**

ஆலய வழிபாடுகளில் முதலிடம் பெற்று விளங்கிய கலைகள், தனித்தன்மை படைத்தவை. கவுத்துவங்கள், சுத்த நிருத்தம், புஜங்கத்ராஸித நிருத்தம் முதலியன

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

ஆலயங்களில் மட்டுமே நிகழ்த்தப்பெற்றவை. அதே போல நாகஸ்வரம் என்றழைக்கப்படும் பெருவங்கியத்துக்கு மட்டுமே உரிய மல்லாரி, ரக்தி, ஒடகூறு, எச்சரிக்கை போன்றவை யாவுமே இறை வழிபாட்டின்போது, ஆலயங்களில் மட்டுமே இசைக்கப்பட்டவை. கோவில் என்று சொன்னால், அங்கே பெரிய மேளம், சின்ன மேளம் இரண்டுக்கும் தனிப்பட்ட, உயர்வான நிலையிலிருந்தது. நாகஸ்வரம், சுருதி கூட்டும் ஒத்து நாகஸ்வரம், தவில், தாளம் ஆகியவை அமைந்தது பெரிய மேளம். பெரிய ஒலியைக் கொண்டதாகவும், நெடுநேரம் வீதிகளில் இசைக்கக்கூடியதாகவும், இருக்கின்ற காரணத்தால், அக்குழுவுக்குப் பெரிய மேளம் என்றும், நடனமிடும் கணிகை, ஆட்டுவிக்கும் ஆசான், முட்டுக்காரர் (அதாவது மிருதங்கம்), பாடுவார், சுருதி கூட்டும் துத்திக்காரர் ஆகியோர் அமைந்த குழுவுக்குச் சின்ன மேளம் என்று பெயர்.

நாகஸ்வரம், திருச்சின்னம், எக்காளம், முகவீணை, கௌரிகாளம், நவுரி, புல்லாங்குழல், சங்கு, துத்தரி, பலி மத்தளம், கவண மத்தளம், சுத்த மத்தளம், தவில், பேரி, சந்திரப்பிறை, சூரியப்பிறை, செண்டை, டக்க, டமாரம், டங்கீ, டமவாத்தியம், டவண்டை, இடக்கை, உடுக்கை, ஜக்கி, ஜயபேரி, கனக தப்பட்டை, மிருதங்கம், நகார், பெரிய உடல், சின்ன உடல், சன்ன உடல், தப்பு, திமிலை, வீர கண்டி, சேகண்டி, வான்கா, தக்கை, தாளம், பிரம்ம தாளம், கைத்தாளம், குழித்தாளம், மணி, கைமணி, கொத்துமணி, சேமக்கலம், கிடிகிட்டி, வீணை - இவ்வாறு இறை வழிபாட்டில் இடம் பெறும் கருவிகளைப் பட்டியலிட்டுப் போகலாம். கிராம தேவதைகளின் வழிபாட்டில் உடுக்கை, பம்பை, கைச்சிலம்பு முதலானவை பங்கு பெறுகின்றன.

மிகக்குறைவான சுருதியைக் கொண்ட பாரி நாகஸ்வரம் திருவாரூர்க் கோவிலில் மட்டுமே கையாளப்பெறும். அந்தக் கோவிலிலும், திருத்துறைப்பு+ண்டிக் கோவிலிலும் இடம் பெறும் ஐம்முக முழவம். ‘குடமுழா’ என்பது அருணகிரிநாதரின் ‘பூதவேதாள வகுப்பில்’ குறிக்கப்பெறும் இக்குடமுழவம், ஐந்து முகங்களைக் கொண்டிருத்தலால், பஞ்சமுக வாத்தியம் என்ற வடமொழிப்பெயரைப் பெற்றது. ‘கொடுகொட்டி’ எனும் இருமுக முழவின் பெயர் மருவிக் ‘கிடிகிட்டி’ ஆயிற்று. இக்கருவி சுமார் 35 ஆண்டுகளுக்கு முன்வரை, பெரிய மேளத்தில் ஒரு அங்கமாக இருந்ததுண்டு. கீழ்வேளூரிலுள்ள, கேடிலியப்பர் கோவிலில் கிடிகிட்டி இன்றும் முழக்கப்பட்டு வருகிறது.

மிருதங்கத்தை விடச் சிறிது பெரிதாகவும், தோற்பகுதிகளில் சில மாற்றங்களையும் கொண்டிருப்பது, சுத்த மத்தளம். மத்தளம் வேறு. மிருதங்கம் வேறு.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

உடுக்கையயை விட உருவில் சற்று பெரிதாயமைந்து, குச்சியால் முழக்கப்படும் 'தக்கை'யைத் திருவரங்கம், வைகுண்ட ஏகாதசித் திருவிழாவில் காணலாம். அவ்வூர்க்கோவிலில், காலை பள்ளியெழுச்சி, இரவு அர்த்தஜாம வழிபாடுகிளல் வீணை மட்டுமே இசைக்கப்பெறுவது மரபு. நெடுங்காலத்துக்கு முன்னர், வைத்தீஸ்வரன் கோவிலில் யாழினையொத்த, சிறிய நரம்புக்கருவியான, 'சுரமண்டலி' இசைக்கப்பட்ட செய்தியினை 'சுரமண்டலிப் பண்டாரத்துக்கு அளிக்கப்பட்ட மானியம் பற்றிய கல்வெட்டினால் அறிகிறோம்.

செங்கை மாவட்டம் செய்யூர்க் கோவிலின் வருடாந்தரத் திருவிழாவின் போது, 'ஸர்வ வாத்திய வழிபாடு' நடைபெறுவது வழக்கம். இது, எழுபத்திரண்டு அம்சங்களோடு, சுமார் நான்கு மணி நேரம் நிகழும்.பொதுவாக வழிபாடுகளின் போது, கலைஞர்கள் எந்தத் திசையிலிருந்தவாறு சேவை செய்யவேண்டுமென்று ஆகமங்கள் விரித்துரைக்கின்றன. கிழக்குப் புறத்தில் வீணை, தென்புறத்தில் குழற்கருவிகள், வட புறத்தில் தாளம், மேற்குப்புறத்தில் தோற்கருவிகள் எனச் சில ஆகமங்களும், கீழ்ப்புறத்தில் மிருதங்கம், தென்புறத்தில் நட்டு-முட்டு: வடபுறத்தில் பாடுவார், குழற்கருவிகள்: இவர்களுக்கு நடுவே ஆடற் கணிகையர் என்று வேறு சில ஆகமங்களும் தெரிவிக்கின்றன.

அன்றுதொட்டு இன்று வரை, திருக்கோவில்களின் இசை வழிபாடுகளில் முன்னிலை வகிப்பது பெரிய மேளம் என்று குறிக்கப்பட்ட நாகஸ்வர இசையாகும். நாகஸ்வரத்தின் தோற்ம், வளர்ச்சி, பெயர்க்காரணம் முதலியவை பற்றியெல்லாம் நான் கூறப்போவதில்லை. பொழுது புலரும் காலம் முதலாக, இரவில் பள்ளியறை வழிபாடு ஈறாக இடம் பெறுவது, நாகஸ்வர இசை. அன்றாடப் பூஜைவேளைகளில் இசைக்கவும், திருவிழாக்களின் போது இசைப்பதற்கெனவும், தனித்தனியான முறைகள் உருவாக்கப்பட்டு, மதிக்கப்பட்டுப், பாதுகாக்கப்பட்டு, ஒரு பெரும் மரபாக ஆக்கப்பட்டுள்ளன.

பொதுவாகச் சிவன் கோவில்களில் ஆடலரசனின் சன்னிதியில் மட்டும், பெரிய மேளத்துக்குப் பதிலாகச் சின்ன மேளம் இருந்து வந்து, பின்னர் நட்டு-முட்டு மட்டுமே இடம் பெறும் வழக்கம் எழுந்தது. இதற்கு விதி விலக்கு, தில்லைக்கோயில், அப்பதியில் முன்னிலை வகிக்கும் இறையே கூத்தப்பெருமானாகையால், அங்கு மட்டும், நாகஸ்வர இசைக்கே முதலிடம் கொடுக்கப்பட்டு வந்துள்ளது.

**இறை வழிபாட்டில் நாகஸ்வர இசை**

தன்னிருப்பிடத்தை விட்டு வேறொரு மண்டபத்துக்கோ, அல்லது திருச்சுற்றிலோ, திருவீதிகளிலோ, ஸ்வாமி எழுந்தருளுகையில் நாகஸ்வரத்தில்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

இசைக்கப்படுவது மல்லாரி என்ற இசைவகையென்பது. மல்லாரியின் இசையொலி, மிகத்தொலைவில் இருப்போரும் கூட, எங்கோவொரு கோவிலில், ஸ்வாமி புறப்பாடு நடைபெறுகிறது என்பதை அறிவிக்கும் அடையாள இசையாகவும் பயன்படும். இந்த இசைவகை, ஸ்வாமி புறப்பாட்டின் போது மட்டுமே ஒலிக்கப் பெறுவதில்லை. வேறு சில சந்தர்ப்பங்களிலும் இது இசைக்கப்படும். அது பற்றிப் பிறகு கூறுகிறேன். மல்லாரியில் பல வகைகளுண்டு. சிவன் கோவில்களில் காளை வாகனத்தில் ஸ்வாமி எழுந்தருளும் போது இசைக்கப்படுவது, பெரிய மல்லாரி, தேர் மல்லாரி, திருபுட தாள மல்லாரி, தீர்த்த மல்லாரி, தளிகை மல்லாரி என வகைப்படும்.

திருவிழாக்காலங்களில் இறைவனை அல்லது இறைவியை மீண்டும் சன்னிதியினுள்ளே அல்லது பள்ளியறையில் அமர்த்தி, அன்றைய விழாவை முடிக்கும் போது, மறுநாள் ஸ்வாமி புறப்பாடு இருக்குமானால் கடைசியாக மல்லாரியை ஓரிரு அடிகள் மட்டும் வாசித்து முடிப்பார்கள், திருவிழாவின் கடைசி நாளாக இருந்தால் மங்களம் இடம் பெறும்.

வீதிச்சுற்று முடிந்து, ஸ்வாமி கோவிலினுள்ளே அல்லது சன்னிதியின் உள்ளே நுழையுமுன்பாகத் தீபாராதனை நடைபெறும். கோவிலுக்குரிய தேவதாஸியொருவர், குடதீபம் எடுத்துவந்து இறைவனுக்குக் கண்ணேறு கழிப்பார். நாகஸ்வரக்காரர் பதம் ஒன்றை நிற்கும் போது வாசிப்பார், சுற்றுகையில், தவிலை மட்டும் தட்டிக்கொண்டு வருவதாலோ என்னவோ, இவ்வழிபாட்டுக்குத் ‘தட்டிச்சுற்று’ என்ற பெயர் எழுந்தது. இதை ‘தட்டம்’ ‘சுற்று’ என்றும் கூறுவதுண்டு. வைணவ மரபில் இது திருவந்திக்காப்பு எனப்படும்.

திருச்செங்காட்டங்குடியில், எப்போதெல்லாம் மல்லாரி வாசிக்கப்படுகிறதோ அப்போதெல்லாம் தொடர்ந்து ‘ஓடகூறு’ வாசிக்கப்படும் மரபு இருக்கிறது. வேறு பல கோவில்களில் ஓடகூறு வாசிக்கும் பழக்கம் இல்லை. ஆலயங்களின் வழிபாடுகளின் போது அனுசரிக்க வேண்டிய பொது மரபு இவையெல்லாம். வெவ்வேறு கோவில்களில் இவ்வித மரபு மாறுபட்டிருப்பதுண்டு.

**முடிவுரை**

ஆலயங்களின் வழிபாடுகளின் போது கொம்பு, தாரை, எக்காளம், தப்பு, சேமக்கலம், உடுக்கை, கைச்சிலம்பு, பம்பை, கைமணி, நாகஸ்வரம், ரவணா முதலிய கருவிகளுக்கு இடமுண்டு. பிற சமயங்களிலும் வழிபாட்டின் போதும் இசைக்குப் பங்கு இருக்கின்றது. உதாரணமாக, நாகூர் தாஹாவில், குறிப்பாகச் சந்தனக்கூடு போன்ற வைபவங்களின் போது நாகஸ்வர இசை முக்கிய இடம் பெறுவதை, இன்றும் காணலாம். அதே விதமாக கிறித்துவக் கோவில்களிலும் வழிப்பாட்டில் இசை இருக்கிறது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

### துணை நூல்பட்டியல்

[1] பி.எம்.சுந்தரம், இசை மற்றும் நடனத்தின் தெய்வீகம், 1995,

[2] ஆப்பிரகாம் பண்டிதர் கருணாம்ருத சாகரம், 1970.

[3] ஆர்.வி கிருஷ்ணன், சங்கீத சாரம், 1975.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**ஹரிகரன். "ஆலயங்களில் இசைக்கருவியின் பங்கு."** *தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்,* தொகுதி 3, சிற.இதழ் 3, தொகுதி 3, ஜனவரி 2021, பக்.525-530. டிஒஐ: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.078**

**Cite this Article in English (MLA 8 Style) as:**
**Hariharan. "The Role of Classical Instruments in Temples."** *International Journal of Tamil Language and Literary Studies*, Vol. 3: Special Issue - 3, Vol. 3, January 2021, pp.525-530. DOI: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.078**

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். /I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

# The Tale of an Anklet: An Eco-feminist Interpretation

**Lt. Dr. B. Ajantha**, Assistant Professor of English, Sri SRNM College, Sattur, Tamilnadu.
**ORCiD:** https://orcid.org/**0000-0001-512-6127**
**DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.079**

**Abstract**

*A study Eco-feminism is an existing field of research in modern critical tradition. This deals with how women all over the world have been interpreted with nature. It also deals with the present eco-crisis and the oppression on women in comparison. A transformative approach to the diversity of women's experience of nature undermines all kinds of control and oppression and nurtures a theory of nature that includes care, compassion, interdependence and mutuality. The eco-feminist consciousness in Indian tradition is the earliest and the most archaic one. Ilanko Adigal's Cilappatikaram delineates the patterns of eco-feminist consciousness, motifs, practices and values which are embedded in the contributory strands of the archaic Tamil cultural tradition.*

**Keywords:** Eco-feminism, Feminism, Landscape, Tamil Culture, Motifs

Eco-feminist structure is understood as the logical framework which underlies the entire gamut of Tamil eco-feminist worldview. It refers primarily to the manner in which a community with specific cultural and linguistic bond consciously constructs a system of self-understanding and self-regulation. The aspiration for a universal human community impels and motivates the individual to articulate a desirable and fulfilling worldview. Human communities everywhere are pulled forward not only by the lived experiences of the common people but also by the creative imagination of the poets and the philosophers. The pluralistic Indian traditions similarly attempt to make multiple structures and narratives of their worldviews in general and their eco-feminist conceptions in particular. While similarities and differences within a particular system indicate the vibrancy of a democracy of opinions and views, an underlying deeper structure seems to be the binding and unifying factor of the diversity of thoughts.

Even though a certain complexity characterizes the varieties of cultural and literary units of the Tamil tradition, a holistic approach throws up the eco-feminist motifs as an organised set of dialectical relationships among the categories like the earth, deity, woman and man. In the earlier stages, the logic of the personalized interior landscape of human love and the socialized exterior land-protective human colour characterizes all aesthetics and human conduct. In the subsequent stages, personal goodness and ethical virtues come to the fore and the bodily aesthetics is underplayed. When need arises to focus both on aesthetics and ethics, the epics broad base the themes including the landscape, the bodyscape and the mindscape. The composers are aware that the life affirming real world aesthetics should converse with the life sublimating tendencies of the aeons to come. In the domain of *bhakti*, both ethics and aesthetics are subsumed into the consciousness of divinely delight. However, one could perceive the eco-feminist motifs in deciding, designing and dictating the poetics ethos at every stage.

The Tamil Eco-feminist discourse engages its semantics as an ontic continuum by dovetailing the discrete particulars with the surplus of the universals. Within the Indian cultural mosaic, Tamil culture and literature occupy an uninterrupted literary continuity. Tamil language and literature exhibit the primacy of the female with an intrinsic identity between the earth and the woman from the earliest times. Tamil poetics speak of two kinds of love in a human life – premarital love (*kalavu*) and marital and extramarital love (*karpu*). In "The Book of Pukar", Ilanko explores both the aspects of love in Kovalan's relationship with his wife Kannaki and the courtesan Matavi. Ilanko contrasts the situation of Kannaki with Matavi. Kannaki is in the situation of love-in-separation and Matavi is in love-in-enjoyment. Kovalan is disillusioned with Matavi but he is back with Kannaki, a repentant

spouse by the end of the book. The situation love-in-separation is clearly evidential in the lines extracted from *Kuruntokai*:

**He avoids our street though he lives**
**in the same town. Should he visit us,**
**he won't take me, lovingly, in his arms.**
**Unseeing, he walks past me as if I were**
**the burning ground of strangers. Once,**
**I was unashamed when passion had robbed me**
**of my sense. But now, like an arrow**
**sent flying from a bow, it has landed far off. (Kuruntokai, 231)**

Kovalan abandons Kannaki for his courtesan Matavi. He lives with Matavi for some years and begets a child named Manimekalai. But in course of time, he suspects Matavi and leaves her too. He returns to Kannaki and she accepts him wholeheartedly without questioning him anything. Their reunion does not last for a long period. Kovalan is killed by the Pantiya King for a false accusation. Kannaki avenges the entire kingdom of Pantiya by burning it. Matavi enters a nunnery.

Canto 4, "In Praise of the Evening", Ilanko illustrates the desolation of Kannaki and the quixotic state of Matavi. Kannaki's situation is symbolically represented by the earth. Earth is personified as a woman who laments the approach of twilight. Because both the sun and the moon are not beside the earth. He further accentuates Kannaki waiting for Kovalan's return by introducing motifs from *mullai tinai* (forest) – cowherds returning from their pastures on the edge of the forest, the evening filled with the sound of their flutes, and the smell of jasmine in the air. Matavi's situation is embodied by a lake as a woman opening at dawn "Her eyes of radiant blue lotuses" (4.101) after a romantic night with Kovalan. Ilanko portrays Kannaki's situation with negative connotative such as "no", "not", or "without" before every phrase:

**No anklets sounded**
**On her small graceful feet. No girdle**
**Blazed over her mound of love wound**
**In a soft white garment. No vermilion**
**Rouge was painted on her breasts. Except**
**Her bridal pendant, she wished for no ornament. (4.61-66)**

This can be contrasted with his opulent description of Matavi's situation:

**In the bedroom,**
**Matavi's couch was sown with homegrown**
**Mullai petals, musk jasmine**
**And other flowers. Undone was her red,**
**Coral girdle that blazed over her mound**
**Of love, and the fine garment unwound**
**From her waist. (4.33-39)**

Ilanko resorts to the deception of indirect suggestion and negation as a result of he may be reluctant or unable to expatriate on Kannaki's agony. Kannaki's situation is parallel to the earth which cannot separate from the sun and the moon even for a moment which is invariable and establishes cosmic order. Both earth and water are primarily feminine symbols. The earth is not only the womb out of which all life originates, but also the grave into which it returns. Hence, it corresponds to the Mother Goddess and foreshadows Kannaki's apotheosis into Pattini, one of the forms of the Mother Goddess. Unlike the earth, a solid element, water is a transitional element. Buddha, in his Assapuram Sermon, regarded the lake, whose transparent waters reveal at the bottom shells and fishes, as a symbol of redemption. This point to Matavi's renunciation: she enters a Buddhist nunnery and takes the holy vows. Canto 4 is a touchstone of Ilanko's virtuosity as a poet. At the same time, it reveals the extent of his indebtedness to the Tamil poetic tradition.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

The agricultural productive cycle of the seasons and the reproductive cycle of the woman need to be correlated. Round the year body care, dressing, decoration and ornamentation focus attention on the structure, texture, feature and tenor of the female body and celebrate its vitality. The sensuous overtone has to be firmly located in the context of the generation of life. The classical narrative of the female body with its features, fragrance, colour, beauty is brough out by the Sangam poems.

Ilanko does not accuse Kovalan directly, he hints at it through the motifs of the marutam (farmland) in Canto 5, "The Celebration in the City of Indra's Festival": 'dawn', 'festival', 'river', 'lotus' and 'Indra'. The hero of the classical poems usually returns home after spending a night with the courtesan. But Kovalan does not turn up. He has forgotten Kannagi completely and lives with Matavi. In Canto 6, "Bathing in the Sea", is replete with motifs from the neytal (seashore) tinai: 'seashore', 'summer', 'bathing', 'screw pine' and 'fish'. These cantos prepare the reader for the imminent breakup of Kovalan's liaison with Matavi.

Kovalan and Kannaki leave behind the familiar environs of Pukar and travel through the wilderness to reach Maturai. The narrative is interspersed with motifs from the palai (wasteland) tinai. They will never again return to Pukar. Thus, in "The Book of Pukar", Ilanko employs the conventions of akam poetry to make explicit the emotional and psychological overtones that are not directly addressed by the narrative. Motifs from the kurinchi tinai in Canto 27, "The Book of Vanci". "The Lustration" describes Cenkuttuvan's reunion with his queen, Ilanko Venmal, on his triumphant return from the Himalaya: 'millet fields', 'elephant', 'bamboo' and songs in the kurinchi mode.

The Cilappatikaram, like the Mahabharata and the Ramayana, contains a journey through a forest that signifies dangerous ground - a journey through liminality, through the land without settlements, through communities that are not fully social. Forests are considered in the first places to be dedicated to the cult of the gods, and why propitiatory offerings were hung from trees. The journey to Maturai represents an irrevocable break with the past. In fact, it is a rite of transition from a preliminal to a postliminal world. By travelling to Maturai, Kovalan expects to recoup his fortune and be incorporated into the social order. His karma intervenes, and he is executed by the Pantiya king on a false charge. A sort of incorporation does, however, occur when fourteen days later both Kovalan and Kannaki are reunited in heaven. Further, there is a transfiguration of Kannaki into a goddess.

The forest represents a descent into the unknown, and the Jain nun Kavunti helps Kovalan and Kannaki negotiate their rough passage through it. As their spiritual guide, she speaks to them in parables that emphasize that karma is inexorable and that each one of them must follow his or her own path to its destined end. This is repeated by the Jain sage whom they meet in Srirangam:

**Like a seed when planted, it will sprout**
**And fulfil itself. When its time is ripe,**
**It will be impossible to stop it. (10, 232)**

In a memorable image he brings home to them the impermanence of life:

**Like a burning lamp**
**In a wide, open plain, blow out**
**By strong winds, so does life flee the body. (10, 234)**

Kovalan's karma comes full circle in "The Book of Maturai" and opens the way for Kannaki's apotheosis. Events beyond her control succeed in thrusting Kannaki from her role as a patient and submissive wife into the public role of a goddess with cult status.

The landscape is one of the most resonants of Ilanko's symbols, for it reflects both the outer and inner worlds. He uses landscape to define emotional and spiritual conditions. The particular landscapes that he chooses for symbols come from the traditional division of the Tamil country into five regions that are evoked in hundreds of early Tamil poems. It is the geography of the mind and imagination, that Ilanko explores. Kannaki's life begins at Pukar on the sea and ends on a mountain-top near Vanci where she arrives from Maturai after traveling through farmland, wasteland and forest. This is both of heaven and earth, and therefore of spiritual ascent. Ilanko's use of landscape as a

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

symbol of Kannaki's transformation from an ordinary mortal to a divinity therefore follows established convention.

Human body is the epistemic site of all ethics, aesthetics, politics and power. In the highly contested social domain, the body is the vehicle and medium of being, knowing, acting, movement, presence, violence and protest. The immediacy of the body to the land and its immense repository of sensibilities concretize the very tangible personal space as the domain of unending display of beauty as body language has come to play a prominent role in contemporary aesthetics. The film medium centralizes and celebrates the human body and its attributes. It is wonderful to see that writers from various cultural and linguistic backgrounds focus their attention on the contiguous positioning of human bodies and their interactions. It is noteworthy to indicate that more and more women writers are entering the literary domain to make their voices heard loud and clear. There is copious literary evidence to show that the logos of the aesthetics of the life-world of the Tamils are characteristically body-centric in general and female body focused in particular. The text makers being mostly male would invite a valid criticism of patriarchal chauvinism in their approach to and appropriation of the female bodies as property factors. However, within a pre-existing *tinai* worldview of land and human fertility, the freedom of the female to centre her own body and celebrate her physical identity with the land in agricultural, horticultural and floricultural backdrop calls for a deeper appreciation of the eco-feminist motifs.

## References

[1] Anotoni, Vanathu. *Eco-Feminist Discourse in Tamil*. Chennai: Notion Press, 2018.

[2] Atikal, Ilanko. (1993). *The Cilappatikaram: The Tale of an Anklet* (R. Parthasarathy, Trans.) Haryana, Penguin Books.

[3] Brubaker, Richard L. *The Ambivalent Mistress: A Study of South Indian Goddesses and Their Religious Meaning.* Ph.D. dissertation. University of Chicago, 1978.

[4] Lipking, Lawrence. *Abandoned Women and Poetic Tradition. Women in Culture and Society Series.*Chicago: University of Chicago Press, 1988.

[5] Sreenivasan, Kasthuri. *The Anklet: A Play in Three Acts*. Bombay: Bharatiya Vidya Bhavan, 1982.

**Cite this Article in English (MLA 8 Style) as:**

**Ajantha. "The Tale of an Anklet: An Eco-feminist Interpretation."** *International Journal of Tamil Language and Literary Studies*, Vol. 3: Special Issue - 3, Vol. 3, January 2021, pp. 531-534. DOI: **10.38067/ijtlls.2021.spl.v03i03v3.079**

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். /I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 3: Special Issue - 3, Vol.3, January 2021 Available at: www.ijtlls.com

# 'Ramanatakam' of Arunachala Kavirayar- An Epic Simplified through Music

**Dr K Bindu, Associate Professor & HOD (i/c), Dept of Music, University of Kerala**
ORCiD: https://orcid.org/0000-0002-1517-8990
**DOI: 10.38067/ijtlls.2021.spl.v03i03v3.080**

## Abstract

*Eighteenth-Nineteenth century has been considered as the golden period of Carnatic music. Due to the enormous royal patronage, the soil of Thanjavur and the surroundings has been blessed to flourish with many composers of art music, Dance music and Sacred music. The literary contributions of "Thamizh Moovar" (Tamil Trinity) are momentous for the growth of poetic literature in Tamil. They are Muthu Thandavar, Marimutha Pillai and Arunachala Kavirayar who lived in the Pre-Tyagaraja period. The gorgeous tradition of music could be inherited, only through the series of these composers and musicians, who have been the authors as well as interpreters of various musical forms. Among these composers, Arunachala Kavirayar, with his great knowledge in Tamil, composed "Ramanataka Keerthanas" in simple Tamil. Since simple keerthanas are easy to sing and recollect, he wrote the whole "Ramayanam" in the form of Keerthanas. These keerthanas became so popular throughout South India and these are used in both the musical performance as well as dance drama. They are also merged with Bhakthi. So the paper tries to cull down the essence of the chosen topic.*

**Keywords:** Tamil, Arunachala Kavirayar, Ramayana, Ramanatakam, Daru,

## Introduction

As sung and glorified by the great Bharatiyar,

யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல் இனிதாவது எங்கும்காணோம்

**Transliteration**: "Yamarintha mozhikalile Thamizhmozhi pol inidavathengum kanom" which means, **Translation:** "None as sweet as Tamil among all the languages known to me," and

யாமறிந்த புலவரிலே கம்பனைபோல் வாள்ளுவர்போல்

இளங்கோவை போல் பூமிதனில்யாங்கணுமே பிறந்ததில்லை

**Transliteration**:"Yamarindapulavarile Kambanai pol, Valluvar pol, Ilangovai pol, bumithannil yanganume piranthathillai, unmai verum pugazhchi illai")

**Translation:** 'There is no one equivalent to Kambar, Valluvar, Ilango among the poets known to me, this is not praising but the fact."

The greatness, beauty and the depth of Tamil cannot be found in any other languages. It is poetic, flexible and reachable for the masses and one of the pillars of Indian cultural heritage. One of the oldest cultures, the Tamil had a hoary history of literary and musical traditions. Music had a rich heritage in Tamil Nadu. Unlike the other languages of India, which are derived from Sanskrit, Tamil has been an indigenous language. The musical out pourings of the Alwars and Nayanmars are so great that these songs are being sung in concerts as well as in various other occasions.

The period of tenth and eleventh century was noted for the building of greatest temples in India. It is said that the Chola dynasty was responsible for the construction of these temples in the Tamil Nadu and it started under VijayalayaChola in 850 CE. Massive temples were being built by the later Chola kings after Rajaraja I. The Chera, Chozha and Pandya dynasties had profusely given patronage to the arts such as music and dance. Due to this patronage the culture and the language cherished in and around temples. Thanjavur has been the political capital of these dynasties.

The three components of Tamil literature,"Iyal" (literature), "Isai"(music), and "Natakam" (drama), which are collectively called as Muttamizh. The works of the Sangam period clearly manifest the role of music played in the lives of the people. The earliest available literature,

